

# இந்து - பக்தி

## படக்கதைகள்


<u>ஒருங்கிணைப்பாளர்</u>

அ.மணி மாறன்

பொருளடக்கம்


| வரிசை எண் | தலைப்பு | பக்கம் |
|---|---|---|
| | ***அத்தியாயம் - 1*** | |
| 1 | பிமனும் துரியோதனனும் | 1 |
| 2 | பாமதி | 5 |
| 3 | ஸ்ரீகிருஷ்ணரும் குசேலரும் | 9 |
| 4 | அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் | 13 |
| 5 | பகவான் அருளிய நவரத்தின மாலை | 17 |
| 6 | முத்துத்தாண்டவர் | 21 |
| 7 | மெய்கண்ட தேவர் | 25 |
| 8 | கவி காளமேகம் | 29 |
| 9 | துவாரகா ராமதாசர் | 33 |
| 10 | ஸ்ரீகிருஷ்ணரிடம் பிரார்த்தனை | 37 |
| 11 | மாப்பிள்ளையாக வந்த பரந்தாமன் | 41 |
| 12 | சிரவணகுமாரன் | 45 |
| 13 | அரும் பணியாற்றிய ஔவைப் பிராட்டியார் | 49 |
| 14 | அருணாசாலக் கவிராயர் | 53 |
| 15 | துகாராம் | 57 |

| | | |
|---|---|---|
| 16 | அப்பூதியடிகள் | 61 |
| 17 | அர்ஜுனன் கட்டிய பாலம் | 65 |
| 18 | கற்புக்கரசி சுகன்யா | 69 |
| 19 | சியமந்தகமணி | 73 |
| 20 | ஞானேசுவரர் | 77 |
| 21 | நள தமயந்தியின் முற்பிறவி வரலாறு | 81 |
| 22 | மகாகவி போதனா | 85 |
| 23 | வீர அபிமன்யு | 89 |
| 24 | லட்சுமணன் தியாகம் | 93 |
| 25 | மகாகவி காளிதாசன் | 97 |
| | ***அத்தியாயம் - 2*** | |
| 26 | அன்னமாச்சார்யா | 101 |
| 27 | கலிக்காம நாயனார் | 105 |
| 28 | குரு கோவிந்த்சிங் | 109 |
| 29 | ஸ்ரீகிருஷ்ணனும் சியமந்தகமணியும் | 113 |
| 30 | மயிலாப்பூர் கற்பகாம்பாள் | 117 |
| 31 | பகவந்நாம போதேந்திரர் | 121 |
| 32 | பண்டாசுரனை அழித்த ஸ்ரீ லலிதாம்பிகை | 125 |
| 33 | ஸ்ரீநாராயண பட்டத்திரியின் குருபக்தி | 129 |

| | | |
|---|---|---|
| 34 | துளசிதாசர் | 133 |
| 35 | குங்குலியக் கலய நாயனார் | 137 |
| 36 | ஜடபரதர் | 141 |
| 37 | திருமழிசை ஆழ்வார் | 145 |
| 38 | நக்கீரர் கண்டகயிலைக் காட்சி | 149 |
| 39 | ஸ்ரீ ராமகிருஷ்ணருக்காக வாழ்ந்த தம்பதிகள் | 153 |
| 40 | உபகோசலன் | 157 |
| 41 | சோமாசி மாறனார் | 161 |
| 42 | மகாராணி சீதையின் கட்டளை! | 165 |
| 43 | ராவணன் வெட்டு | 169 |
| 44 | குரு காணிக்கை | 173 |
| 45 | அசுரகுலகுரு சுக்கிராச்சாரியார் | 177 |
| 46 | கணபதி தந்த காவிரி | 181 |
| 47 | வரகுண பாண்டியன் | 185 |
| 48 | தேவியின் அருள் பெற்ற சரளாதாசர் | 189 |
| 49 | வீரத்தாய் சாந்தாபாய் | 193 |
| 50 | மாங்குடி மருதனார் | 197 |
| 51 | அறிவுத் தாகம் அனைத்தையும் தரும் | 201 |
| 52 | ஜப பலன் | 205 |

| 53 | பக்தகோகிலம் பூந்தானம் | 209 |
|---|---|---|
| 54 | சவம் உண்ட தேவன் | 213 |
| 55 | பொன்மேனி அளித்த புனிதன் | 217 |
| 56 | கண்ணனே கதி | 221 |
| 57 | அருள்மிகு அன்னை ஸ்ரீசாரதாதேவி | 225 |
| 58 | மூர்த்தி நாயனார் | 233 |
| 59 | பரம்பரைக் குணம் | 237 |
| 60 | ஓடோடி வரும் இறைவன் | 241 |
| 61 | புல் தின்ற கல் நந்தி | 245 |
| 62 | அஷ்டாவக்கிரரின் சபதம் | 249 |
| 63 | குமண வள்ளல் | 253 |
| 64 | ஸ்ரீமதுசூதன சரஸ்வதி | 257 |
| 65 | மீண்டும் வந்த நரசிம்மர் | 261 |
| 66 | மாற்றுரைத்த விநாயகர் | 265 |
| 67 | சோகாமேளர் | 269 |
| 68 | ஸ்ரீநம்பியாண்டார் நம்பி | 273 |
| 69 | ஸ்ரீராமரின் குசேலர் | 277 |
| 70 | சொர்க்கம் வேண்டாம்! | 281 |
| 71 | காயத்ரீ மந்திர மகிமை | 285 |

| 72 | விநாயகருக்கு அர்ச்சித்த அறுகு | 289 |
|---|---|---|
| 73 | சிவபக்தர் வித்யாபதி | 293 |
| 74 | பாண்டுரங்கன் பக்தை கோமாபாய் | 297 |
| 75 | அரக்கியும் அன்னை ஆனாள்! | 301 |
| 76 | ஆலயக் கணக்கு கேட்ட அரசன் | 305 |
| 77 | நீதிக்காக வாழ்ந்த சகோதரர்கள் | 309 |
| 78 | ஜைன தீர்த்தங்கரர் நேமிநாதன் | 313 |
| 79 | குருஷேத்திரம் தோன்றிய வரலாறு | 317 |
| 80 | ஜோதிர்லிங்கம் திரியம்பகேசுவரர் | 321 |
| 81 | மீனாட்சி கல்யாணம் | 325 |
| 82 | குருபக்தி செய்த விந்தை | 329 |
| 83 | பீஷ்மர் சபதம் | 333 |
| 84 | மகாபாரதப் போரில் பீஷ்மர் | 337 |
| 85 | குருமகிமை | 341 |
| 86 | ஆண்டவன் அருள்வது ஆனந்தம் மட்டுமே! | 345 |
| 87 | கற்றபின் நிற்க அதற்குத் தக! | 349 |
| 88 | பாண்டிய மன்னனின் சிவபக்தி | 353 |
| 89 | ராமநாம மகிமை | 357 |
| 90 | திருஞானசம்பந்தர் | 361 |

| | | |
|---|---|---|
| 91 | ஸ்ரீகுமரகுருபரர் | 365 |
| 92 | வேதாந்த தேசிகர் | 369 |
| 93 | சிவன் நிகழ்த்திய லீலை | 373 |
| 94 | புஷ்பதந்த முனிவர் | 377 |
| 95 | கண்ணன் சாப்பிட்ட முந்திரி பருப்பு! | 381 |
| 96 | விபீஷணனின் சரணாகதி | 385 |
| 97 | அஷ்டாவக்ர கீதை தோன்றிய வரலாறு | 389 |
| 98 | குருநமச்சிவாயர் | 393 |
| 99 | ஐயப்பன் | 397 |
| 100 | இந்திரனும் பிரஹலாதனும் | 401 |
| 101 | பக்தன் பணியில் பகவான் குடும்பம் | 405 |
| 102 | காசி அன்னபூரணி தோன்றிய வரலாறு | 409 |
| 103 | ஸ்ரீகுருவாயூரப்பன் | 413 |
| 104 | சத்தியவிரதன் உதத்யன் | 417 |
| 105 | பண்டரிபுரம் தோன்றிய வரலாறு | 421 |
| 106 | பக்தர் பரமேஷ்டி | 425 |
| 107 | உத்தமகுரு விவேகானந்தர் | 429 |
| 108 | ஸ்ரீராமதரிசனம் கேட்ட அக்பர் | 433 |
| 109 | திருநந்திதேவர் | 437 |

| | | |
|---|---|---|
| 110 | குருஞானசம்பந்தர் | 441 |
| 111 | கலியுகத்தில் ஒரு யசோதை | 445 |
| 112 | அகங்காரம் துறந்த அரசன் | 449 |
| 113 | தீது வந்தாலும் திடம் பெறும் பக்தர்கள் | 453 |
| 114 | தாய்மார்களுக்கு ஸ்ரீராமரின் உபதேசம் | 457 |
| 115 | குருவிற்கு பகவானைக் காட்டிய சீடர் | 461 |
| 116 | பொங்கி வந்தது கங்கை! | 465 |
| 117 | தேசத் தொண்டர் அளசிங்கப் பெருமாள் | 469 |
| 118 | ஸ்ரீராமானுஜர் | 475 |
| 119 | ஸ்ரீராமகிருஷ்ணரின் தென்னகத் தூதரான சுவாமி ராமகிருஷ்ணானந்தர் - சில சுவையான சம்பவங்கள் | 481 |
| 120 | ஸ்ரீஜெயதேவர் | 487 |
| 121 | தர்மக்ஷேத்திரம் | 491 |
| 122 | ஜீவஜோதி சித்தர் சங்கு சுவாமிகள் | 495 |
| 123 | ரகுவம்சம் | 499 |
| 124 | தபஸ்வினி மாதாஜி கங்காபாய் | 505 |
| 125 | யார் இறங்க வேண்டும்? | 509 |

# பீமனும் துரியோதனனும்

1 பஞ்ச பாண்டவர்கள் இளம் வயதிலேயே வீர பராக்கிரமத்திலும் அறிவுத் திறமையிலும் சிறந்து விளங்கினார்கள்.
இதைப் பார்த்து துரியோதனன் பொறாமைப்பட்டான்.




2 பீமன் எல்லோரையும் விட மகா பலசாலியாகவும் முரடனாகவும் இருந்தான்.
ஒரு சமயம் கௌரவர்கள் ஒரு மாந்தோப்புக்குச் சென்றார்கள்.
அங்கு அவர்கள் மரத்தில் ஏறி மாம்பழங்களை பறித்துக்கொண்டிருந்ததைப் பார்த்த பீமன்.....




3 மற்றொரு சமயம் விளையாட்டுத்தனமாக, கௌரவ குமாரர்களைப் பீமன் தண்ணீரில் அமுக்கி, திக்குமுக்காடச் செய்தான்.




4



5 துரியோதனன் ஒரு சமயம் கங்கைக் கரையில் இருந்த மாளிகையில் பஞ்ச பாண்டவர்களுக்கு விருந்து வைத்தான்.




6 விருந்து, முடிந்தபிறகு எல்லோரும் கங்கையில் நீராடினார்கள்.




7 பீமன் கரையேறி, மயக்கமடைந்து ஒரு செடி நிழலில் விழுந்துவிட்டான். இதை யாரும் கவனிக்கவில்லை.



8 மற்றவர்கள் அனைவரும் அரண்மனைக்குத் திரும்பினார்கள்.



9 துரியோதனனும் அவனது தம்பியரும் நினைவிழந்து கிடந்த பீமன் இருந்த இடத்திற்கு ரகசியமாகத் தனிமையில் சென்றார்கள். பீமனைக் கட்டி கங்கையில் தூக்கி எறிந்தார்கள்.




10 கங்கை மாதா, தண்ணீரில் எறியப்பட்ட பீமனை நாகலோகத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தாள்.



11 பாம்புகள் பீமன் உடலைத் தீண்டின. அதன் காரணமாக அவன் உடலில் இருந்த விஷம் முறிந்து, பீமன் உயிர் மீண்டது.




12 நாகலோகத்தில் அரசன் வாசுகியும் அவன் பிரதானி ஆர்யகனும் பீமனை அழைத்து வரச் செய்து உபசரித்தார்கள்.



13 அஸ்தினாபுரத்தில் பாண்டவர்களும் அன்னை குந்தியும் பீமன் இல்லாததைப் பார்த்து துரியோதனன் மீது சந்தேகப்பட்டனர். விதுரரிடம் முறையிட்டார்கள். விதுரர் ஆறுதல் கூறினார்.




14 நாகலோகத்தில் எட்டு நாள் தங்கிய பீமன், பிறகு விடைபெற்று அரண்மனை திரும்பினான். நடந்தவற்றை யுதிஷ்டிரன் முதலியவர்களிடம் கூறினான்.




15 துரியோதனன், பீமன் உயிருடன் திரும்பியதைப் பார்த்து அதிர்ச்சியடைந்தான். மாமன் சகுனியுடன் சேர்ந்து மேலும் பல தடவை பீமனைக் கொல்ல சூழ்ச்சி செய்தான்.




16 விதுரர் பாண்டவர்களைப் பார்ப்பதற்காக வந்தார்.



# பாமதி

1 அழகிய ஆசிரமம். குரு தர்ப்பாசனத்தில் அமர்ந்திருக்கிறார்.
எதிரில் மாணவர்கள் அமர்ந்து வேதம் ஓதுகிறார்கள்.




2 பதினான்கு வயதுள்ள அழகிய கன்னிகை பாமதி காலைத் தாங்கி நடந்து வருவது தெரிந்ததும்.....




3 மாணவர்கள் வேதம் படித்துக்கொண்டிருந்தபோது, குரு சில ஆண்டுகளுக்கு முன்பு நடந்த நிகழ்ச்சியை நினைத்துப் பார்க்கிறார்.




4 பாமதிக்காக மிஸ்ரன் தண்ணீர் எடுத்து வரும் காட்சியை அவர் மனக்கண்ணால் காண்கிறார்.



5 குருவின் விருப்பப்படியே பாமதியை மிஸ்ரன் கரம் பற்றினான்.
கடமையை முடித்த குரு படுத்த படுக்கையாகி விட்டார். மிஸ்ரன் அவரிடம் வந்து நின்றான். பாமதி அவர் காலை வருடிக்கொண்டிருந்தாள். அப்போது.....




6 சில நாட்களில் குருவின் காலம் முடிந்தது. பாமதி பதினேழு வயது அழகு சுந்தரியாக விளங்கினாள். அவளைத் தனக்கு மணம் முடித்த குருவை மானசீகமாக மிஸ்ரன் வணங்கினான். தனிக்குடித்தனம் வைத்தார்கள்.







8 தினமும் காலைக் கடன்களை முடித்து, பூஜை, வேத பாடம் எல்லாம் ஆனபிறகு கணவனும் மனைவியுமாக கல்விதேவதையாகிய கலைமகளின் எதிரில், தர்ப்பாசனம் விரித்து அமர்வார்கள்.



9 உரை எழுதும்போது அவ்வப்போது தர்க்க - விளக்கங்கள், ஆட்சேப-சமாதானங்கள் எல்லாம் விரிவாக நீண்ட நேரம் நடக்கும்.




10 விரிவுரை எழுதத் தொடங்கி நாட்கள், மாதங்களாயின. மாதங்கள் வருடங்களாயின. வேறு சிந்தனையே இல்லாமல் விரிவுரை எழுதுவதில் இருவரும் மூழ்கியிருந்தார்கள்.



11 கடைசியில் ஒரு நாள் பிற்பகல் உரை எழுதும் பணி நிறைவு பெற்றது. மங்கள ச்லோகத்தை எழுதி முடித்ததும் –




12



13

நமஸ்கரித்து எழுந்தவளைப் பார்த்ததும் மிஸ்ரர் திடுக்கிட்டார்.




14

மிஸ்ரர் தானும் வயோதிகனாகிவிட்டதை அப்போதுதான் கவனித்தார்.




15




16

'பாமதி' என்ற அந்த உரை நூல் இன்றும் கற்றறிந்த

பெரியோர்களாலும், சான்றோர்களாலும்,

மகான்களாலும் புகழப்படுகிறது. பாமதியும் மிஸ்ரரும்

மறைந்து போனார்கள். ஆனால் நம் உள்ளங்களில் அவர்கள் என்றும்

இளமையோடு உலவுகிறார்கள் என்பதில் சந்தேகமில்லை!

# ஸ்ரீகிருஷ்ணரும் குசேலரும்

**1** ஸ்ரீகிருஷ்ணரும் சுதாமாவும் சிறுவயதில் சாந்தீபனி முனிவரின் ஆஸ்ரமத்தில் ஒன்றாக 'குருகுல வாசம்' செய்து கல்வி கற்றார்கள்.



**2** சுதாமா வேதங்களை நன்றாகப் படித்தவர். அவர் தூய்மையான தெய்வபக்தியில் பழுத்த பழமாகவும் சான்றோராகவும் விளங்கினார். 'கிழிந்த ஆடையை அணிந்தவர்' என்ற பொருளில் மக்கள் அவரை 'குசேலர்' என்றும் அழைத்தார்கள். சுதாமாவின் குடும்பத்தில் வறுமை நிலவியது.



**3** சுதாமாவின் மனைவி சுசீலை அடக்கமும் பண்பும் நிறைந்தவள். ஒரு நாள் அவள் மெல்லிய குரலில் தயங்கித் தயங்கி கூறினாள்.....

எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது..... ஸ்ரீகிருஷ்ணர் உங்களுடைய பால்ய சிநேகிதர் என்று என்னிடம் பலமுறை சொல்லியிருக்கிறீர்கள். நீங்கள் ஸ்ரீகிருஷ்ணரைப் போய்ப்பார்த்து நமது வறுமை நீங்க ஏதாவது உதவி கேளுங்களேன்.....




**4** சரி, ஸ்ரீகிருஷ்ணரிடம் நான் போகிறேன். ஆனால் ஒரு விஷயம் : "தெய்வம், சந்நியாசிகள், அரசன், குழந்தைகள் ஆகியவர்களைப் பார்க்கப் போகும்போது வெறுங்கையோடு போகக் கூடாது" என்று சாஸ்திரம் கூறுகிறது. நான் ஸ்ரீகிருஷ்ணருக்குக் காணிக்கையாகக் கொண்டு போவதற்கு நம்மிடம் ஏதாவது இருக்கிறதா?



ஒரு துணியில் கொஞ்சம் அவலைக் கட்டித் தருகிறேன். அதை ஸ்ரீகிருஷ்ணருக்குக் கொண்டுபோய் கொடுங்கள்.

5

மனைவி
கொடுத்த அவலுடன்
சுதாமா துவாரகைக்குப்
புறப்பட்டார்.
வழி முழுவதும்
ஸ்ரீகிருஷ்ணரைத் தரிசிக்கப்
போகிறோம் என்ற
மகிழ்ச்சியில்
அவர்
திளைத்திருந்தார்.

6

சுதாமா ஸ்ரீகிருஷ்ணரின் மாளிகையை அடைந்தபோது..... அவர் வருவதை ஸ்ரீகிருஷ்ணர் தூரத்திலிருந்தே பார்த்தார். உடனே அவர் ஓடோடிச் சென்று சுதாமாவைத் தமது இரண்டு கைகளாலும் கட்டித் தழுவிக்கொண்டார்.




7

ஸ்ரீகிருஷ்ணர் தமது கட்டிலிலேயே சுதாமாவை அமரச் செய்து அவருக்குப் பாதபூஜை செய்தார்.



8

ஸ்ரீகிருஷ்ணரும் சுதாமாவும் தங்களின் இளமைப்பருவத்தில் - குருகுலத்தில் வாழ்ந்தபோது - நடந்த பழைய நிகழ்ச்சிகளையெல்லாம் பேசி மகிழ்ந்தார்கள்.

சுதாமா தாம் ஸ்ரீகிருஷ்ணரைப் பார்க்க வந்ததற்கான காரணத்தை ஸ்ரீகிருஷ்ணரிடம் சொல்லவே இல்லை.



**9** நண்பரே! எனக்காக நீங்கள் என்ன கொண்டு வந்திருக்கிறீர்கள்?




இது என்ன? ஓ, எனக்காக அவல் கொண்டு வந்திருக்கிறீர்களா? இது எனக்கு மிகவும் பிடிக்கும்!

சுதாமாவின் தயக்கத்தை ஸ்ரீகிருஷ்ணர் புரிந்துகொண்டார். ஆதலால் அவர் சுதாமாவின் வேட்டியின் ஓரத்தில் கந்தையில் முடிந்திருந்த அவலைத் தானாகவே எடுத்துக்கொண்டார்.

**10** ஸ்ரீகிருஷ்ணர் ஒரு பிடி அவலை எடுத்துச் சாப்பிட்டார். இரண்டாவது பிடி அவலை எடுத்து அவர் சாப்பிடப் போகும்போது, ருக்மணிதேவி புன்சிரிப்பு தவழ அவரது கையைப் பிடித்துக் தடுத்தாள்.



அவள் அப்பிடி செய்ததற்கு என்ன காரணம்? ஸ்ரீகிருஷ்ணர் முதல் பிடி அவல் சாப்பிட்டதுமே இகலோக-பரலோக செல்வம் முழுவதையும் அவர் சுதாமாவுக்குக் கொடுத்துவிட்டார்.

அவர் இரண்டாவது பிடி அவலைச் சாப்பிட்டால், மகாலட்சுமியாகிய ருக்மிணியே சுதாமாவின் வீட்டுக்கு வேலைக்காரியாகச் சென்று பணிவிடை செய்ய வேண்டிய நிலை ஏற்படும்.

அப்படிப்பட்ட ஒரு தர்மசங்கடமான நிலையைத் தவிர்ப்பதற்காகவே ஸ்ரீகிருஷ்ணர் இரண்டாவது பிடி அவல் சாப்பிடுவதை ருக்மிணி தடுத்தாள்.

**11** ஸ்ரீகிருஷ்ணர் சுதாமாவுக்குப் பெரிய விருந்து வைத்தார்.



**12** அன்றிரவு சுதாமா ஸ்ரீகிருஷ்ணரின் மாளிகையில் தங்கினார்.



**13** மறுநாள் காலையில் ஸ்ரீகிருஷ்ணரால் நன்கு உபசரிக்கப்பட்டு பிறகு அவர் தமது வீட்டுக்குப் புறப்பட்டார்.
ஸ்ரீகிருஷ்ணர் சுதாமாவோடு சிறிது தூரம் சென்று அவரை வழியனுப்பி வைத்தார்.




**14** சுதாமா தமது வீட்டை நெருங்கியபோது அங்கு அவருக்கு ஒரு பெரிய ஆச்சரியம் காத்திருந்தது!




**15** சுதாமா திகைத்து நின்றபோது ராணி போன்ற தோற்றத்துடன் சுசீலை ஓடிவந்து அவரை வணங்கினாள்.




**16** திடீரென்று கிடைத்த செல்வத்தைப் பார்த்து சுதாமாவும் அவரது மனைவியும் மயங்கிவிடவில்லை. இந்தச் செல்வங்களைவிட ஸ்ரீகிருஷ்ணரிடம் தூயபக்தி கொண்டிருப்பதுதான் மிகவும் உயர்ந்தது என்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள்.



ஆகவே திரண்ட செல்வம் இருந்தபோதிலும், அவர்கள் எப்போதும் ஸ்ரீகிருஷ்ணரையே தியானம் செய்து எளிய வாழ்க்கை வாழ்ந்தார்கள்.

# அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்

1 ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா ருக்மிணி தேவியுடன் பேசிக்கொண்டிருந்தபோது . . . . .




2 பீமா நதி தீரத்தில் ஓர் அழகிய குடிசை. அங்கு ஓர் இளைஞன் தன் பெற்றோர்களுக்கு ஷோடசோபசார பூஜை செய்துகொண்டிருந்தான்.



3 கிருஷ்ண பரமாத்மாவும் ருக்மிணியும் குடிசைக்குள் நுழைந்து ஓர் ஓரமாக நின்றார்கள்.




4 பூஜையின் நடுவில் அந்த இளைஞன் புண்டலீகன் ஸ்ரீ கிருஷ்ணர் தம் தேவியுடன் வந்து நிற்பதைப் பார்த்தான்.



5 கிருஷ்ண பரமாத்மாவும் ருக்மிணியும் அமர்ந்தபடியே காத்திருந்தார்கள். புண்டலீகன் வெகு நேரம் தன் பெற்றோர்களுக்கு விசேஷ பூஜை நடத்தினான்.




6 ஒரு வழியாகப் பூஜை முடிந்த பிறகு புண்டலீகன் பகவானிடம் வந்தான்.




7 ஸ்ரீ கிருஷ்ணர் சொன்னதைக் கேட்ட புண்டலீகன் பரபரப்படைந்தான். ஆனந்தக்கண்ணீர் சொரிந்தான்.




8 பிரபோ! தேவரீர் சாட்சாத் பரமாத்மா என்று எனது குரு கிருபையால் கேள்விப்பட்டிருக்கிறேன். என் தாயும் தந்தையுமான இவர்கள்தான் என் பிரத்தியட்ச தெய்வங்கள். கண் தெரியாதவர்கள். எங்களால் துவாரகைக்கு வந்து தங்களைத் தரிசிக்க இயலவில்லை. ஆயினும் ஏழையான எங்களை ஒரு பொருட்டாக மதித்து வந்து நீங்கள் இருவரும் தரிசனம் தந்தீர்களே! என்ன கருணை, என்ன கருணை!




9
எழுந்திருங்கள்! உங்கள் புறக் கண்களாலேயே எங்களை நீங்கள் கண்டு மகிழலாம்!
ஆகா... என்ன பாக்கியம், என்ன பாக்கியம்! தங்களின் திவ்ய தரிசனம் பெறுவதற்கு என்ன புண்ணியம் செய்தோமோ!


10
இதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது! இப்படிப்பட்ட புண்ணியசாலியான மகனை நீங்கள் பெற்றிருப்பதே பெரிய பாக்கியம் ஆயிற்றே!
மாதா பிதாக்களுக்கு நீ செய்யும் பூஜையைப் பார்ப்பதற்காகவே நாங்கள் வந்தோம்! உன்னுடைய இந்தப் பக்தி எங்களைப் பரவசப்படுத்துகிறது.


11
மகாப் பிரபோ! இந்த ஏழையின் பாத பூஜையைக் கிருபைகூர்ந்து ஏற்றருள வேண்டும்.
புண்ணியவானே! எங்களுக்கு நீ தனியாக வேறு பூஜை செய்ய வேண்டுமா? உன் தாய் தந்தையருக்கு நீ செய்த பூஜையே எனக்கும் என் தேவிக்கும் செய்ததாகும். நான் இந்தப் பக்தியைப் பார்த்து பரம சந்தோஷம் அடைகிறேன். இதைக் கண்டு களிக்கவே நாங்கள் வந்தோம். உனக்கு என்ன விருப்பமோ அதைக் கேள்!


12
ஹே தீனதயாளோ! பரந்தாமா! தங்கள் தரிசனமே கிடைத்தற்கரிய பெரிய பாக்கியமாயிற்றே. என் பெற்றோர்களுக்கு ஒரு குறையும் வராமல் நீண்ட நாட்கள் நான் தொண்டு செய்ய வேண்டும். இதுவே என் விருப்பம்.
தேவி! பார்த்தாயா இவன் விரும்புவதை!
உன் விருப்பம் நிச்சயம் நிறைவேறும். வேறு ஏதாவது ஒரு வரம் கேளேன்!


13
உங்கள் திருவடிகளில் எனக்கு மாறாத பக்தி நிலைத்திருக்க அருள் புரிய வேண்டும் பிரபோ!
நீ எல்லா நலன்களுடனும் பல்லாண்டுக் காலம் வாழ்வாய்! என்னிடம் மாறாத பக்தியும் முடிவில் முக்தியும் பெறுவீர்களாக!


14
எம்பெருமானே! அள்ளி அள்ளி அனுக்கிரகம் செய்யக் கூடிய தங்களிடம் நான் ஒரு வரம் கேட்கலாமா?
கேள் குழந்தாய்! தயங்காமல் கேள்!


15
ஹே கோவிந்தா! துவாரகை இங்கிருந்து நீண்ட தூரத்தில் இருக்கிறது. எங்களைப் போன்ற தீனர்களால் அங்கே வந்து தங்களைத் தரிசிக்க முடியாது. எனவே எப்போதும் எல்லோரும் தங்களைக் கண்டு தரிசிக்கும்படி இங்கேயே தாங்கள் காட்சி தந்தருள வேண்டும்!
ஆகா! நீ பெற்ற இன்பத்தை உலக மக்களும் பெற வேண்டும் என்றுதானே நீ விரும்புகிறாய்? உன் விருப்பப்படியே இதே இடத்தில் அர்ச்சாவதாரமாய் (சிலை வடிவத்தில்) மக்களுக்குத் தரிசனம் தருவோம். இப்போது உனக்கு மகிழ்ச்சிதானே!


16
இப்படிச் சொன்ன மறுகணமே ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவும், ருக்மிணிதேவியும் சிலையாக மாறினார்கள். அந்த இடம்தான் இன்று பண்டரீபுரம் என்ற திருத்தலமாக விளங்குகிறது.
ஹே! பண்டரிநாதா! பாண்டுரங்கா! பக்தவத்சலா! பரமதயாளா! கோவிந்தா!

# பகவான் அருளிய நவரத்தின மாலை

**1** ஆபரணங்கள் செய்யும் தொழிலில் திரிலோசன தாசர் பிரசித்தி பெற்று விளங்கினார்.
ஆனால் அவரது மனம் அந்தக் குலத்தொழில் செய்வதில் நாட்டமில்லாமல், குழலூதும் கண்ணனின் திருநாமத்திலேயே லயித்துக் கிடந்தது.




**2** மனைவி சொல்வதும் நியாயம்தான் என்று அவருக்குப்பட்டது.
ஒரு நாள் அந்த ஊர் நவாப்பிடமிருந்து அவருக்கு அவசர அழைப்பு வந்தது.




**3** நவாப் சொல்லைத் தட்ட முடியாமல் அவர் கொடுத்த பொன்னையும் நவரத்தினங்களையும் திரிலோசனர் எடுத்துக்கொண்டு வீடு வந்து சேர்ந்தபோது.....




**4** அன்று முதல் இரவும் பகலும் பாகவத கோஷ்டியை உபசரிப்பதிலும், நாம சங்கீர்த்தனம் செய்வதிலும் திரிலோசனர் தீவிரமாக ஈடுபட்டார்.
நவரத்தின மாலையைப் பற்றி அவர் அடியோடு மறந்து போனார்.



**5** பாகவத கோஷ்டியை வழியனுப்பிவிட்டு திரிலோசனர் வந்தபோது நவாப்பின் சேவகர்கள் வந்தார்கள்.

ஐயா, நவாப் தங்களுக்கு நினைவுபடுத்திவிட்டு வரச் சொன்னார். இன்னும் இரண்டே நாட்களில் நவரத்தின மாலை வேண்டுமாம்!




**6** என்ன பதிலைக் காணோம்?



மன்னிக்க வேண்டும். பாகவதர்கள் வந்ததில் என்னால் நவரத்தின மாலையைச் செய்ய முடியவில்லை.
எனவே நவாப் கொடுத்த பொன்னையும் மணிகளையும் திரும்ப எடுத்துச் செல்லுங்கள்!

**7** நடந்ததை அறிந்த நவாப்புக்குக் கோபம் சீறிக்கொண்டு வந்தது.....

போங்கடா! போய்ச் சொல்லுங்கள்! நாளை மறுநாள் நவரத்தின மாலை எப்படியும் எனக்கு வந்து சேர வேண்டும். இல்லாவிட்டால் கடுமையான தண்டனைதான் என்று திரிலோசனரிடம் எச்சரித்துவிட்டு வாருங்கள்!



**8** நவாப்பின் மிரட்டல் செய்தியை சேவகர்கள் திரிலோசனரிடம் தெரிவித்தார்கள்.
அதைக் கேட்ட அவர் கவலையில் மூழ்கி, திகைத்தார்.




**9** நவாப்பின் ஆணைக்கு அஞ்சிய திரிலோசனர் செய்வதறியாமல் வீட்டை விட்டு வெளியேறி வெகு தூரத்திலிருந்த ஒரு காட்டுக்குள் சென்றுவிட்டார்.

கண்ணா! கார்முகில் வண்ணா! நீயே எனக்குக் கதி!



**10** இருட்டிவிட்டது.
கண்ணன் ஆயர்பாடியில் நிகழ்த்திய
அற்புதங்களை நினைத்தபடியே அவர் ஆழ்ந்த
தியானத்தில் அமர்ந்துவிட்டார்.



**11** எதிரில் ஓர் ஆலயம். அதிலிருந்த
விக்கிரகம் கண்ணபிரானாக மாறி, பிறகு
திரிலோசன தாசராக வெளிப்படுகிறார்.



**12** திரிலோசன தாசரைக் கண்ட கனகா அவருக்கு
உணவு பரிமாறி உபசரித்தாள்.




**13** குழலூதும் கண்ணபிரான் அடுப்பு ஊதி,
அன்று இரவுக்குள் நவரத்தின மாலையை
உருவாக்கினார்.
மறுநாள் நவரத்தின மாலையோடு நவாப்பின்
முன்பு போய் நின்றார்.




**14**



15 பல்லக்கில் வந்த பரமனை ஒரு பாகவத கோஷ்டியே வரவேற்றது.




16 சமாராதனை நடைபெற்று முடிந்ததும், பாகவத கோஷ்டியோடு பகவானும் கையில் பலகார பட்சணங்களோடு புறப்பட்டார்.




17 காட்டை அடைந்ததும் திரிலோசனராக இருந்த கண்ணபிரான் ஓர் அடியவராக மாறி, தியானத்திலிருந்த உண்மைத் திரிலோசனர் எதிரில் வந்து நின்றார்.




18 ஊர் திரும்பிய திரிலோசனர் மனைவியின் எதிரில் போய் நின்றார்.....




19 நடந்ததையெல்லாம் கேட்டறிந்த திரிலோசனதாசர் மெய்ம்மறந்து கண்கலங்கி நின்றார்.



# முத்துத்தாண்டவர்

**1** சீர்காழி என்ற தலத்தில் பிறந்தவர் முத்துத்தாண்டவர்.
அவர் தில்லை நடராஜர் மீது பல கீர்த்தனைகளும் பதங்களும் இயற்றிப் புகழ் பெற்றவர்.
இளமையில் அவர் தீராத நோயினால் மிகவும் அவதிப்பட்டார். அதனால் பள்ளிக்குச் சென்று படிக்காமல் தினந்தோறும் கோவிலுக்குச் சென்று சிவபெருமானை வழிபடுவார்.
சிவ பக்தரான நடன ஆசிரியர் வீட்டில் நடைபெறும் சிவ பஜனையைக் கேட்டுக்கொண்டிருப்பார். இது அவர் வீட்டாருக்குப் பிடிக்காது. ஒரு நாள் அவரது தாய்.....




**2** முத்துத்தாண்டவர் அதைக் காதில் போட்டுக்கொள்ளமாட்டார். சிவ பஜனை அவரைக் கவர்ந்தது.
ஒரு நாள் நேரமானதே தெரியாமல் அவர் ஆலயத்தில் தங்கிவிட்டார்.




**3** யாரும் வராத வாகன மண்டபத்தில் அவர் போய்ப் படுத்துக் கொண்டார். சிறிது நேரத்தில் தூங்கிப் போனார். கண் விழித்துப் பார்த்தபோது எங்கும் ஒரே இருட்டு.




**4** இறைவனைத் துதிக்க, அவர் சில தேவாரப் பாடல்களைப் பாடினார். அப்போது ஓர் அதிசயம்! ஜல்ஜல் என்று சலங்கை ஒலி கேட்டது! அவர் திரும்பிப் பார்த்தார்.



5 தாயே, என் நோயைப்பற்றிதான் உனக்குத் தெரியுமே! பசிக் களைப்பு- ஆதலால் தூங்கிவிட்டேன்!



கவலைப்படாதே! இதோ பிரசாதம்.
சாப்பிடு, பசி தீரும்.
உன் பெயர் கொண்ட இறைவன் சிதம்பரத்தில் இருக்கிறார். அவரைத் தரிசித்துப் பாடு. உன் வியாதியும் தீர்ந்து போகும்.

6 நான் பாடுவதா? நான் படிக்காதவன் ஆச்சே, தாயே! தெரியாதா உனக்கு?



தெரிந்துதான் சொல்கிறேன். நடராஜர் சந்நிதிக்குப் போ. அங்கே காதில் படும் முதல் வார்த்தையை வைத்துப் பாடிப் பார்! எல்லாம் நல்ல விதமாக முடியும்.

7 இப்படிச் சொன்ன மறுகணமே சிறுமியாக வந்த உமாதேவி இருளில் மறைந்து போனாள்.




8 மறுநாள் காலையில் கோயில் காவலர்கள் வந்து அவரைப் பார்த்தார்கள்.

தாண்டவா! உன் முகத்தில் என்ன ஒளி! பிரசாதம் உள்ள தங்கக்கிண்ணம் உன்னிடம் எப்படி வந்தது?



எல்லாம் அந்தத் தாயின் அருள் பிரசாதம்!

9 பத்து மைல் தூரத்திலிருந்த சிதம்பரத்துக்கு அவர் நடந்தே போனார். நியமத்தோடு நடராஜப் பெருமான் சந்நிதியில் போய் நின்றார்.

பூலோக கயிலாசகிரி.....



பூலோக கயிலாச கிரி சிதம்பரம் அல்லால் புவனத்தில் வேறு உண்டோ?

10 எல்லோரும் அவரையே பார்க்க, பாடலின் அடுத்த அடி தானாக வந்தது.




11 அநுபல்லவி, சரணம் எல்லாம் பாடி முடிந்தவுடனேயே, தாண்டவர் உடல்நோய் மறைந்து, ஒளி திகழ நின்றார். அப்போது கூட்டத்திலிருந்த யாரோ ஒருவர் கூறினார்.....




12 பல நாட்கள் தொடர்ந்து தாண்டவர் சிதம்பரம் சென்று நடராஜரைத் தரிசித்து வந்தார்.
ஒரு நாள் நல்ல மழை. நடுவழியிலிருந்த ஆற்றில் வெள்ளப்பெருக்கு.




13 படகில் அமர்ந்ததும் அவருக்குப் பாட்டு வந்தது.



14 இன்னொரு சமயம் புதர் அடர்ந்த குறுக்குப் பாதையில் அவர் வந்து கொண்டிருந்தார். அப்போது அவரை ஒரு நல்ல பாம்பு கடித்துவிட்டது!




15 நடராஜப் பெருமானை மனதால் கண்டு அவர் பாடப் பாட, விஷம் இறங்கிக்கொண்டே வந்தது. கடைசியில் அவர் நடக்கத் தொடங்கினார்.




16 நட்டுவனார் அவரிடம் ஒரு நாள் கேட்டார்.....




17 நடராஜரின் உத்திரவு கிடைத்ததும் அவர் பாடினார்.....




18 நடராஜப் பெருமானைக் குறித்தே தமிழ் கீர்த்தனைகளும் பதங்களும் பாடிய முத்துத்தாண்டவர். எண்பது வயது வரை வாழ்ந்தார்.
ஓர் ஆருத்ரா நாளில் நடராஜர் சந்நிதி முன் நின்று வேண்டினார்.



# மெய்கண்ட தேவர்

1 திருப்பெண்ணாகடம் என்பது ஒரு
புண்ணிய திருத்தலம்.
அங்கு வேளாளர் குலத்தில் பிறந்தவர்
அச்சுதக் களப்பாளர்.
செல்வந்தரான அவருக்குக் குழந்தையில்லையே
என்ற பெரும் குறை இருந்து வந்தது.
ஆகவே அவர் தமது குருநாதரான அருள்நந்தி
சிவாசாரியாரிடம் சென்று, தம்முடைய
மனக்குறையைத் தெரிவித்துக்கொண்டார்.




2 குருநாதர் முன்பாகவே களப்பாளர்
தேவாரக் கட்டை எடுத்தார். அது
திருவெண்காட்டுத் திருப்பதிகமாக இருந்தது.




3 களப்பாளர் தமது மனைவியுடன்
திருவெண்காடு சென்றார்.
அங்குள்ள சோம குளம், சூரிய குளம்,
அக்கினி குளம் ஆகிய குளங்களில் அன்றாடம்
மூழ்கி, சிவ வழிபாடு செய்து வந்தார்.




4 பல நாட்கள் சென்றபிறகு ஒரு நாள்
களப்பாளர் கனவில் இறைவன் தோன்றி.....



5 கனவில் இறைவன் கூறியது போலவே அவர்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது.




6 திருவெண்ணெய் நல்லூரில் செல்வந்தராக இருந்த தாய் மாமன் குழந்தையை அழைத்துப் போய் வளர்த்தார்.
சிறுவனுக்கு இரண்டு வயது முடிந்தபோது - கயிலையிலிருந்து பரஞ்சோதி முனிவர் அந்த வழியாக வந்தார்.




7 சைவ சித்தாந்தத்தின் உட்பொருளையெல்லாம் குருவருளால் பெற்ற மெய்கண்டாருக்குப் பலர் சீடர்களானார்கள்.




8 மெய்கண்டாரின் புகழ் பரவி வருவதைக் கேள்விப்பட்ட அருள்நந்தி சிவாசாரியார் பொறாமை கொண்டார்.
ஆகவே அவர் ஒரு நாள் மெய்கண்டாரைக் காண வந்தார்.



9 அருள்நந்தி சிவாசாரியார் ஆலமரத்தடிக்கு வந்தபோது எல்லோரும் அவரை வணங்கினார்கள். ஆனால் மெய்கண்டார் மட்டும் எழுந்திருக்கவில்லை.




10 தம்மைச் சுட்டிக்காட்டி மெய்கண்டார் கூறிய அந்த ஒரு சொல்லே அருள்நந்தியாரின் ஞானக்கண்ணைத் திறந்துவிட்டது.




11 மெய்கண்டாரின் 49 சீடர்களில் அருள்நந்தியாரே முதன்மைச் சீடராக விளங்கினார்.




12 மெய்கண்டார் 'சிவஞான போதம்' என்ற நூலை இயற்றினார். சைவ சித்தாந்தக் கருத்துக்களைக் கூறும் அந்த நூலுக்கு சீடரான அருள்நந்தியார் விளக்கமாக 'சிவஞான சித்தியார்' என்ற விரிவுரையை எழுதினார்.




13 மெய்கண்டார் மிகக் குறுகிய காலமே உயிர் வாழ்ந்தார்.




14 சீடர்கள் முன்னிலையில் மெய்கண்டார் நிஷ்டைகூடி சிவன் திருவடி சேர்ந்தார்.



# கவி காளமேகம்

1 ஸ்ரீரங்கம் பெரிய கோயிலில் மடப்பள்ளிப் பரிசாரகனாக இளைஞன் வரதன் பணி செய்து வந்தான்.
திருவானைக்கா ஜம்புகேசுவரர் கோயிலில் மோகனாங்கி என்பவள் நாட்டியப் பணி செய்து வந்தாள்.
இருவரும் அடிக்கடி சந்தித்து நட்போடு பழகினார்கள்.




2 வைஷ்ணவனாக இருந்த வரதன், சைவனாக மாறி, ஜம்புகேசுவரர் – அகிலாண்டேசுவரி திருக்கோயில் பணியில் அமர்ந்தான்.




3 ஒரு நாள் அர்த்த ஜாம பூஜை வேலையெல்லாம் முடிந்தது.
மோகனாங்கியோடு சேர்ந்து வீடு திரும்ப வரதன் ஒரு மண்டபத்தின் அருகில் காத்திருந்தான்.




4 மண்டபத்தின் மூலையில் தேவி உபாசகருக்கு அருள் புரிய அகிலாண்டேசுவரி ஓர் இளம்பெண்ணின் வடிவத்தில் வாயில் தாம்பூலமும் வளையொலியும் சிலம்பொலியுமாக வந்து நின்றாள்.
தேவி உபாசகர் கண்ணைத் திறந்து, தேவியைப் பார்த்தார்.



5 தேவி மண்டபத்தின் அருகில் நிற்கும் வரதனைப் பார்க்கிறாள்.




6 சிறிதும் தயக்கமின்றி வரதன் வாயைத் திறக்க.....




7 தேவி அவன் வாயில் தாம்பூலம் உமிழ்ந்து அருள் புரிந்த மறுகணமே வரதன் வரகவியாகிவிட்டான். நாற்கவியும் பொழியும் ஆற்றலைப் பெற்றுவிட்டான்.




8 கார்மேகம் மழை பொழிவதைப்போல் வரதன் கவிமழையாகப் பொழிந்தான். ஆகலால் மக்கள் அவரைப் புகழ்ந்து 'கவி காளமேகம்' என்று அழைத்தார்கள்.



9 மன்னன் திருமலைராயனின் அரசவையில்
அதிமதுரக் கவிராயர் என்ற புலவர்
ஒருவர் இருந்தார்.
அவர் மகா அகந்தையும் ஆணவமும் கொண்டவர்.
அவர் பெற்ற விருதுகளையும்
பரிசுப்பொருள்களையும் மற்ற புலவர்கள்
அவருக்குப் பின்னால் சுமந்து வர, அவர்
பல்லக்கில் அமர்ந்து அரசவை சென்றபோது.....




10 நடந்ததைக் கேள்விப்பட்ட மன்னன்
அரசவையில் காளமேகத்துக்கு ஆசனம்
தராமல், நிற்கும்படிச் செய்யவே,-




11 இப்படி அவர் நினைத்த மறுவிநாடியே
திருமலைராயனின் அரியணை ஒரு பக்கம்
வளர்ந்தது. காளமேகம் கம்பீரமாகப் போய்
அதில் அமர்ந்தார்.




12 அரசனும் அதிமதுரக் கவியும்
பொறாமையால் புழுங்கினார்கள்.



**13** கழுத்தில் கத்தியைக் கட்டிக்கொண்டு புலவர் பாட வேண்டும்; பாடலில் பிழை ஏற்பட்டால் கத்தியைப் பிணைத்திருக்கும் கயிற்றை இழுத்துவிடுவார்கள்; புலவரின் கழுத்து அறுபடும் - இது அரிகண்டம் எனப்படும்.

கீழே கொதிக்கும் எண்ணெய்க் கொப்பரை, மேலே விட்டத்தில் தொங்கும் பலகை; பாடலில் தவறு ஏற்பட்டால் தொங்கும் பலகையை அறுத்துவிடுவார்கள்; தவறாகப் பாடிய புலவர் எண்ணெய்க் கொப்பரையில் விழ வேண்டும் - இது எமகண்டம் எனப்படும்.




**14** கவி காளமேகம் நிபந்தனையின்படி பாடல் பாடி மகத்தான வெற்றி பெற்றார். அப்படியிருந்தும் அரசனும் கவிராயரும் அவரை மதிக்கவில்லை.




**15** நகரம் மண் மூடிப் போனதும், அரசனும் கவிராயரும் மன்னிப்பு வேண்டினர்.




**16** காளமேகம் சிலேடைப் பாடல்களையும், நிந்தாஸ்துதி வகைப் பாடல்களையும் பாடி தமிழுக்குப் பெருமை சேர்த்தார். அதனால் பெரும் புகழ் பெற்று விளங்கினார்.
மோர் விற்கும் பெண் ஒருத்தியைக் காளமேகம் திருத்திய ஒரு பாடல் இது :



# துவாரகா ராமதாசர்

**1** நந்தவனத்தில் ஒரு சிறுவன் பூப் பறித்தபடி பாடிக்கொண்டிருக்கிறான். அதைக் கேட்டபடியே ஒரு பெரியவர் அவனருகில் வருகிறார்.




**2** அந்தச் சிறுவன் ராமதாசன் பெரியவனாக வளர்ந்தான். முறைப்படி அவருக்குத் திருமணம் நடந்தது. அதன் பிறகும் அவர் கண்ணன் புகழைப் பாடி பஜனை செய்வதையே தொழிலாகக் கொண்டார். பஜனை செய்தபடியே கையில் செம்போடு வீதி வலம் வருவார். பக்தர்கள் ஒரு சிலருக்காவது உணவு படைக்காமல் அவர் துவாதசி பாரணை செய்வதில்லை.

**3** ஒவ்வொரு வருடமும் ஆடி மாதம் ஏகாதசியன்று, நாற்பது மைல் தூரத்திலிருந்த துவாரகாபுரிக்கு அவர் கால்நடையாகவே செல்வது வழக்கம். அங்கு அவர் கண்ணபிரானுக்குத் துளசிமாலை அணிவித்து, கண்குளிரத் தரிசிப்பார். அடியவர்களுக்கு உணவு படைப்பார். பிறகு ஊர் திரும்புவார். இவ்விதம் பல ஆண்டுகளாக நடந்து வந்தது.




**4** அந்த ஆண்டு ராமதாசரால் வழக்கம்போல் துவாரகைக்கு நடந்து செல்ல முடியவில்லை. தள்ளாடித் தள்ளாடிப் பாதி வழி வந்தவர், ஒரு சிறு கோயிலின் முன்னால் அமர்ந்து பிரார்த்தனை செய்தபடியே உறங்கிவிட்டார்.



**5** தூக்கத்தில் அவருக்கு ஸ்ரீகிருஷ்ணரின் தரிசனம் கிடைத்தது.




**6** ராமதாசர் கரங்குவித்தபடி உறக்கம் கலைந்து கண்விழித்துப் பார்த்தார். பார்த்த திசையிலிருந்து பொன்னால் செய்யப்பட்ட ஒரு தேர் வந்து அந்தக் கோயிலின் எதிரில் நின்றது. ராமதாசர் ஓடிச் சென்று தேரில் ஏறினார்.




**7** ராமதாசர் கண்ணன் உருவத்தைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருக்கும்போதே தேர் கிளம்பிவிட்டது. நடு இரவில் தேர் ராமதாசரின் வீட்டின் முன்வந்து நின்றது.




**8** ராமதாசர் கிருஷ்ண விக்கிரகத்தை வீட்டின் முற்றத்தில் எழுந்தருளச் செய்தார். அங்கு பஜனைப் பாடல்கள் பாட ஆரம்பித்தார்.

**9** மறுநாள் துவாரகையில் கர்ப்பக் கிரகத்தில் கிருஷ்ண விக்கிரகத்தைக் காணாமல் எல்லோரும் திகைத்துப் போனார்கள்.



**10** பொதுமக்களும் வீரர்களும் நாலா
திசைகளிலும் விக்கிரகத்தைத் தேடினார்கள்.
அப்போது டாங்கோ கிராமத்தில் ராமதாசர்
வீட்டில் விக்கிரகம் இருப்பது தெரிய வந்தது.
அதை மீட்டுவர அனைவரும் புறப்பட்டார்கள்.
இதை அறிந்த ராமதாசர் கலங்கிப் போனார்.




**11** ஊரார் ஏச்சுக்கு பயந்து ராமதாசர்
ஸ்ரீகிருஷ்ண விக்கிரகத்தை ஒரு பெட்டியில்
வைத்து, கிணற்றுக்குள் இறக்கிவிட்டார்.
துவாரகாபுரி மக்களும், அதிகாரிகளும் வந்து
ராமதாசரின் வீட்டைச் சோதனை போட்டார்கள்.




**12** கடைசியில் கிணற்றுக்குள்ளிருந்து
பெட்டியை வெளியே எடுத்தார்கள்!




**13**




**14** விக்கிரகத்தின் பாதத்தில் தலையை
மோதிக்கொண்டதில் ராமதாசரின்
நெற்றியில் இரத்தம் வழிந்தது. அப்போது
அவர் காதில் அசரீரியாக ஒரு குரல்
கேட்டது.....






**15** பஞ்சாயத்துச் சபை கூடியது.




**16** துலாபாரம் வைக்கப்பட்டது. ஒரு தட்டில் கிருஷ்ண விக்கிரகம். மறு தட்டில் ராமதாசர் தம் மனைவியிடமிருந்த மூக்குப் பொட்டையும், தாலிப் பொட்டையும் வைத்தார். எல்லோரும் சிரித்தார்கள்.




**17** ராமதாசர் இறைவனிடம் பிரார்த்தனை செய்தபடியே ஒரு துளசி தளத்தைத் தட்டில் வைத்தார்.




**18** துளசி தளத்தை வைத்ததுமே தட்டுக்கள் சமநிலைக்கு வந்தன. உடனே வந்தவர்கள் எல்லோரும் ராமதாசரின் பக்தியின் மேன்மையை உணர்ந்து அவரது காலில் விழுந்து வணங்கினார்கள்.




எந்த இடத்தில் துவாரகாநாதனின் சிலையை வைத்து ராமதாசர் வழிபட்டாரோ, அந்த இடத்திலேயே பொதுமக்கள் துவாரகாநாதனுக்கு ஒரு கோயில் கட்டினார்கள். இன்றைக்கும் துவாரகா ராமதாசரின் பஜனைப் பாடல்கள் பக்தர்களால் பாடப்பட்டு வருகின்றன.

# ஸ்ரீ கிருஷ்ணரிடம் பிரார்த்தனை

1 குருவாயூரில் இரண்டு கிருஷ்ண பக்தர்கள் இருந்தார்கள். ஒருவர் குரூரம்மை என்ற பெண்மணி. மற்றவர் பில்வமங்கள்.

இந்த இரண்டு பக்தர்களிடமும் கிருஷ்ண பகவான் குழந்தை போலவே பேசி விளையாடுவான்; தினமும் அவர்கள் வீட்டுக்குப் போவான்; சாப்பிடுவான்; கொஞ்சி மகிழ்விப்பான்.

ஸ்ரீகிருஷ்ணனுக்கு அத்தனை பிரியமான பக்தர்களாக இருவரும் விளங்கினார்கள்.







2 ஒரு சமயம் குரூரம்மைக்கும் பில்வமங்களுக்கும் தெரிந்த ஒருவன் வயிற்றுவலியால் துன்பப்பட்டான். அவன் பில்வமங்களிடம் வந்தான்.




3 கண்ணன் வந்ததும்.....




4
மறுநாள் அந்த வயிற்றுவலிக்காரன் பில்வமங்களிடம் வந்தான்.
என்னப்பா! என் வயிற்று வலியைப் பற்றிக் கிருஷ்ணரிடம் சொன்னாயா?
ஓ... மறக்காமல் சொன்னேனே. அது உன் பூர்வ ஜன்மவினையாம். அனுபவிக்க வேண்டியதுதானாம். கிருஷ்ணர்தான் சொன்னார்.


5
பிறகு அந்த வயிற்றுவலிக்காரன் குரூரம்மையிடம் போனான்.
அம்மா! என்னால் இந்த வலியைத் தாங்கவே முடியவில்லை. நீதான் எனக்கு உதவி செய்ய வேண்டும்.
சரியப்பா! கண்ணன் வரட்டும் சொல்கிறேன்.


6
குரூரம்மை வீட்டுக்குக் கண்ணன் வந்தான்.
கண்ணா! எனக்குத் தெரிந்த ஒருவன் வயிற்றுவலியால் மிகவும் துன்பப்படுகிறான். அவனது வலியை நீ போக்கக் கூடாதா! இது என்ன உனக்கு ஒரு பெரிய காரியமா? தயவுசெய்து அவனது வலியைப் போக்கிவிடப்பா!
ஆகட்டும்! வலியைப் போக்குகிறேன்!


7
அவனுக்கு வயிற்று வலி குணமாகிவிட்டது. அவன் பில்வமங்களைச் சந்தித்தான்.
உன் வலி எப்படி இருக்கிறது?
அதுவா! அது இருந்த இடமே தெரியாமல் பறந்துவிட்டது. குரூரம்மை எனக்காகக் கண்ணனிடம் சொன்னாள். கண்ணன் அருள் செய்துவிட்டான்!


8
பில்வமங்கள் நேரே கிருஷ்ணரிடம் போனார்.....
என்ன பில்வமங்கள்! ஏதோ கோபமாய் இருக்கிறாயே!
ஆமாம்; பின்னே என்ன? அந்த வயிற்றுவலிக்காரனைப் பற்றி நான் சொன்னபோது, "அது அவன் பூர்வ ஜன்மவினை; அனுபவிக்கிறான்" என்றாய். ஆனால் குரூரம்மை சொன்னபோது மட்டும்.....

9 கிருஷ்ணன் சிரித்துக்கொண்டே.....

வலியைப் போக்கிவிட்டேன். அதுதானே உனக்குக் கோபம்! நன்றாக யோசித்துப் பார்! "அவன் அவதிப்படுகிறான். என்னிடம் சொல்லச் சொன்னான்" என்றுதானே நீ என்னிடம் கூறினாய். நான் அதற்கான காரணத்தைச் சொன்னேன்!



ஆனால் குரூரம்மை சொன்னதும் வலியைப் போக்கியிருக்கிறாயே!

10 ஆமாம்; "வயிற்றுவலியைப் போக்கு" என்று தாயுள்ளத்துடன் குரூரம்மை என்னிடம் வேண்டிக்கொண்டாள். அவளது பிரார்த்தனையை நிறைவேற்றி வைத்தேன். ஆனால் நீ அப்படிக் கேட்கவில்லையே! வெறுமே சொல்லச் சொன்னதாகத்தானே நீ என்னிடம் தெரிவித்தாய்?



வயிற்றுவலியைப் போக்கும்படிக் கேட்காதது என் தவறுதான்!

11 என்னுடைய அருளும் அனுக்கிரகமும், என்னிடம் யார் எப்படி பிரார்த்தனை செய்கிறார்களோ அதைப் பொறுத்தே அமைகிறது. இதில் வேண்டியவன் - வேண்டாதவன் என்றெல்லாம் நான் வித்தியாசம் பார்த்துச் செய்வதில்லை.



என் பிரபுவே! பிரார்த்திப்பதில்கூட சூட்சுமம் இருப்பதை இப்போது நான் புரிந்துகொண்டேன். இப்போதுதான் என் மனம் தெளிந்தது. என்னை மன்னிப்பாயாக!

12 குருவாயூர் கிருஷ்ணன் சந்நதியில்.....



# மாப்பிள்ளையாக வந்த பரந்தாமன்

திருமங்கை மன்னனும் அவனது மனைவி குமுதவல்லியும் அன்பர் பணி செய்வதில் பெரிதும் ஆர்வம் கொண்டவர்கள். பக்தர்களுக்கு அன்னம் அளிக்கும் பொருட்டு அவர்கள் தங்கள் செல்வத்தை வாரி வாரிச் செலவிட்டு வந்தனர்.









ஒரு நாள் இரவு — காட்டு வழியில் ஒரு கல்யாணக் கூட்டம் போகிறது. கள்வர்கள் அவர்களை வழிமறிக் கிறார்கள்.







மாப்பிள்ளை தன் காலில் அணிந்திருந்த மோதிரத்தைத் தவிர மற்ற ஆபரணங்களைக் கழற்றிக் கொடுத்து விட்டார்.




எல்லா ஆபரணங்களையும் மூட்டையாகக் கட்டி, மன்னன் தூக்க முயல்கிறான்.



உருவிய வாளோடு நின்ற மன்னன் கழுத்தைக் கட்டிக் கொண்டு அந்த மந்திரத்தைச் சொல்லுகிறான் மாப்பிள்ளை...

ஓம் நமோ நாராயணாய!

ஆகா! ஆகா! நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்!

திருமங்கைமன்னன் அந்த மாப்பிள்ளையின் காலில் விழுந்து அந்தக் காலைக் கட்டிக்கொள்ளத் தேடுகிறான். மாப்பிள்ளை யைக் காணவில்லை. அப்போதுதான் திருமங்கைமன்னனுக்கு மாப்பிள்ளையாக வந்தது பரந்தாமன் என்ற உண்மை விளங்கியது.

மகாப் பிரபு! பரந்தாமா! நாராயணா! என்னே உன் கருணை! என் அழுக்கு உடம்பி னால் உன்னைத் தீண்ட நினைத்தேனே! அழகிய மணவாளா! அஞ்சேல் என்று அருள் செய்தாயே!

மன்னன் கதறி அழும்போது, அசரீரியான குரல் கணீரென்று கேட்கிறது...

ஆழ்வாரே! தமிழ்மணம் கமழும் வாயால் நம் புகழ் பாடுவீர்! உம்மை எம்மோடு பிணைக்கக் காரணமாக இருந்த குமுதவல்லியோடு நெடுநாள் வாழ்ந்து அன்பர் பணிகளைத் தொடர்ந்து செய்வீர்களாக! உமது பாட்டுத் திறம் நாட்டை உயர்த்தட்டும்!

திருமங்கையாழ்வார் வாழ்க பல்லாண்டு!

# சிரவணகுமாரன்

1 ஜலபோஜரும் அவர் மனைவியும் தண்ணீர் அருந்தியே உயிர் வாழ்ந்தார்கள். அவர்களின் மகன் சிரவணகுமாரன். அவன் தன் பெற்றோர்களைக் கண்ணுங்கருத்துமாகப் பாதுகாத்து வந்தான். ஒரு நாள் .....

குமாரா! எங்களுக்கோ வயதாகிவிட்டது. புண்ணிய நதிகளில் நீராட வேண்டும் என்று விருப்பம் .....

அதற்கென்ன, உங்களை நான் தோளில் சுமந்து செல்கிறேன். நாளையே புறப்படலாம்!

2 அவ்விதமே சிரவணகுமாரன் அவர்கள் இருவரையும் இரண்டு தட்டுக்களில் அமர்த்தினான்; அந்தத் தட்டுக்களை ஒரு கோலின் இரு முனைகளிலும் காவடிபோல் கட்டித் தொங்கவிட்டு, அதைத் தோளில் சுமந்தபடி பயணம் தொடங்கினான்.



3 அவர்கள் பல புண்ணிய நதிகளில் நீராடிவிட்டு, சரயு நதியின் காட்டுப் பக்கம் வந்தார்கள்.

குமாரா! எங்களுக்குத் தாகமாக இருக்கிறது. குடிக்கத் தண்ணீர் எடுத்து வருகிறாயா?



அப்படியே செய்கிறேன். இங்கேயே இருங்கள். நான் போய் நீர்நிலை இருக்கும் இடம் பார்த்து, தண்ணீர் கொண்டு வருகிறேன்.

4 அப்போது மழைக்கால வெளிச்சம் மங்கலாக இருந்தது. சிரவணகுமாரன் ஒரு புதரிடையே ஓடும் ஓடையில் இறங்கி, தன் கையிலிருந்த குடுவையில் நீர் மொள்ளத் தொடங்கினான்.




5 அதே சமயம், கோசலை நாட்டு இளவரசன் தசரதன் காட்டுக்கு வேட்டையாட வந்திருந்தான்.




6 தசரதன் எய்த அம்பு தண்ணீர் மொண்டு கொண்டிருந்த சிரவணகுமாரன் மார்பில் பாய்ந்தது.....




7 தசரதன் ஓடோடி வந்து அம்பு தைத்த சிரவணகுமாரனைத் தாங்கி, கரையில் சேர்த்தான்.



8

தசரதன் மண்குடுவையில் தண்ணீர் நிரப்பிக்கொண்டு அந்தக் குருட்டுப் பெற்றோர் இருந்த இடத்திற்குச் சென்றான்.




9




10

அதைக் கேட்டதும் அந்தப் பெற்றோர் மூர்ச்சையாகிவிட்டனர். தசரதன் அவர்கள் முகங்களில் தண்ணீர் தெளித்து, மூர்ச்சை தெளிவித்தான்.




11

தசரதன் நிலை குலைந்துபோய் நின்றான். அவர்களுக்கு அவனால் என்ன ஆறுதல் சொல்ல முடியும்?



12




ஆமாம், உனக்குத் தெரியாதுதான்! எங்களைப்போல் நீயும் உன் மகனை இழந்தால்தான் எங்கள் தவிப்பு எப்படிப்பட்டது என்று உனக்குத் தெரியும்! போ! உன் மகனின் பிரிவே உனக்கு அந்த நிலையை உணர்த்தும். அந்தப் பிரிவே உன் மரணத்துக்கும் காரணமாக இருக்கும். இங்கிருந்து போய்விடு!

13 இவ்விதம் கூறிவிட்டு, ஜலபோஜரும் அவர் மனைவியும் மகனை இழந்த பிரிவு தாங்காமல் உயிர் துறந்தார்கள்.

தசரதன் ஜலபோஜர் கொடுத்த சாபத்தை நினைந்து, தலை குனிந்தபடியே நாடு திரும்பினான்.



14 ஜலபோஜர் சாபம் கொடுத்தபடியே பிற்காலத்தில் தசரதருக்கு ஸ்ரீராமரின் பிரிவால் மரணம் ஏற்பட்டது.





# அரும் பணியாற்றிய ஔவைப் பிராட்டியார்

கதை :

1 பகவான் என்ற அந்தணன் காசிக்குச் சென்று திரும்பிக்கொண்டிருந்தான். அப்போது அவன் வழியில் ஒரு சத்திரத்தில் ஆதி என்ற அழகான பெண்ணைச் சந்தித்து திருமணம் செய்துகொண்டான். திருமணமான நான்காம் நாள் ஒரு கிழவி வந்தாள்.




2 பகவான் மனம் தத்தளித்தது.




3




4 கணவனின் விருப்பப்படியே ஆதி அவருடன் புறப்பட்டாள். ஓராண்டுக்குப் பிறகு ஒரு பாணர் குடியிருப்பில் ஆதிக்கு அழகான பெண் குழந்தை பிறந்தது.




5
பாணர் குடியில் குழந்தை வளர்ந்து பெரியவளானாள்.
அறிவுச் சுடர்விடும் அழகுத் தேவதைபோல இருந்த அவள் ஒரு நாள்—
பிள்ளையாரப்பனே! நான் உன் மீது மாறாத பக்திகொண்டிருப்பது உண்மையானால், என் பருவ எழிலை மாற்றி, என்னை நிரந்தர மூதாட்டியாக்கி விடு! ஏழை எளிய மக்களோடு நான் கலந்து வாழவே விரும்புகிறேன்!


6
இளமை பொங்கும் மங்கையாக யானைமுகக் கடவுளை வணங்கியவள் முதுமைக் கோலமாக எழுந்தாள்.
ஔவையே! தமிழ் உலகு உன் கவி மழையால் செழிப்படையட்டும்!
பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை நாலும் கலந்துனக்கு நான் தருவேன் கோலஞ்செய் துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்கு சங்கத் தமிழ் மூன்றுந் தா!


7
அன்று தொட்டு அவரது பாடல்கள் தமிழ்த் தரணியின் மூலை முடுக்கெல்லாம் ஒலிக்கத் தொடங்கின.
ஔவைப் பாட்டிக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பான வரவேற்பு!
தமிழன்னையின் தவப் புதல்வி! வாழ்க! வாழ்க! ஔவைப் பிராட்டியார்! வாழ்க! வாழ்க!


8
கேப்பைக் கூழுக்கும், கடைந்த கீரைக்கும் கவி பாடிச் சென்ற ஔவையாரை மன்னாதி மன்னர்கள் தலைவணங்கி வரவேற்றார்கள்.
தமிழ்த்தாயே! வருக வருக!
மன்னா! உன் கொற்றம் வாழ்க!

9 தகடூரை ஆண்ட அரசன் அதிகமான் ஔவையாரைச் சரியாசனத்தில் அமர்த்தி, ஒரு நெல்லிக் கனியைத் தந்து உண்ணும்படி வேண்டினான்.

அது அவனுக்குக் கிடைத்த ஒரே ஒரு நெல்லிக்கனி. அமரத்தன்மையுள்ளது.




10 மற்றொரு சமயம் ஔவையார் பாரி வள்ளல் ஆண்ட பறம்பு நாட்டுக்குச் சென்றார். அரசன் ஔவையை இன்னும் சில நாட்கள் தன்னுடன் தங்க வைப்பதற்கு ஒரு தந்திரம் செய்தான்.




11 நாட்டின் எல்லையில் அந்தச் சிவிகையை ஒரு கொள்ளைக்காரன் மடக்கி காணிக்கைப் பொருட்களை வழிப்பறி செய்துவிட்டான்.




12 ஔவையார் மன்னன் பாரியிடமே திரும்பி வந்தார்.



13 இவ்விதம் மூன்று தடவை வழிப்பறி நடந்தபிறகு, அரசன் தானே கொள்ளைக்காரனாக வந்தவன் என்ற உண்மையைக் கூறினான்.




14 பல ஆண்டுகளுக்குப் பிறகு ஔவைப் பாட்டி ஒரு கிராமத்திற்குச் சென்றார். நடுவழியில் மழை பிடித்துக்கொண்டது. அவர் தெப்பமாக நனைந்துபோனார். அவர் மழைக்கு ஒண்டிய குடிசையில் இரண்டு பெண்கள் இருந்தார்கள்.




15 அவர்கள் மூவேந்தர்களால் வஞ்சித்துக் கொல்லப்பட்ட பாரி வள்ளலின் பெண்கள் அங்கவை, சங்கவை என்பது ஔவைக்குத் தெரிய வந்தது.




16 அவ்விதமே அங்கவையை திருக்கோவலூர் அரசன் தெய்விகனுக்கு மூவேந்தர் முன்னிலையில் ஜாம் ஜாமென்று திருமணம் செய்து வைத்தார் ஔவையார்.



# அருணாசலக் கவிராயர்

1 அருணாசலக் கவிராயர் இளமையில் தமையன்மார் ஆதரவில் வளர்ந்தார்.
அவர் தமது இருபத்தைந்து வயதிற்குள் தருமை ஆதீனத் தம்பிரான்களிடம் பயின்று, சைவ சமய நூல்களிலும் தமிழ் கிரந்த மொழிகளிலும் தேர்ச்சி பெற்றார்.



2 அருணாசலக் கவிராயரின் புலமையையும் புத்திகூர்மையும் கண்ட தருமபுர ஆதீனத்தின் தலைவர் அம்பலவாண சுவாமிகள்.....




3 அருணாசலம் தமது முப்பதாவது வயதில் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார்.
பின்னர் தில்லையாடியில் இல்லற வாழ்க்கையைத் தொடங்கினார்.



4 குடும்ப வருவாயை முன்னிட்டு, அருணாசலம் ஒரு நகைக்கடை வைத்து தொழில் நடத்தினார்.



5 கவிராயர் குறிப்பாகக் கம்ப ராமாயணத்தில் பெரும் ஈடுபாடு கொண்டு, அவ்வப்போது சொற்பொழிவுகளும் செய்து வந்தார்.




6 ஒரு நாள் அவர் சீர்காழிக்குச் சென்று கட்டளைத் தம்பிரான் சிதம்பரம் பிள்ளையைச் சந்தித்தார்.




7 அவ்விதமே அந்த ஒரே இரவுக்குள் பள்ளுப் பாடலை முடித்துக் கொடுத்தார் கவிராயர்.




8 மாலையில் கடையைப் பூட்டிய பிறகு அவர் தினந்தோறும் இசைப் பேருரை நடத்தி வந்தார்.
அதில் அவருடைய கம்ப ராமாயணச் சொற்பொழிவே மக்களை மிகவும் கவர்ந்து இழுத்தது.
ஒரு சமயம் இரண்டு இளைஞர்கள் அவரிடம் வந்தார்கள்.



**9** அந்த இரண்டு இளைஞர்களும் சங்கீத ஞானம் படைத்தவர்கள்.
அவர்கள் இருவரும் கவிராயருடைய இசைப் பேருரைகளுக்கு அவர் கூடவே சென்றார்கள்.





**10** ராமநாடகக் கீர்த்தனைகள் உருவாகத் தொடங்கிவிட்டன.
அதற்கு இளைஞர்கள் குறிப்பு எடுத்து வந்தார்கள்.







**11** மாணவ இளைஞர்கள் இருவரும் ராமநாடகக் கீர்த்தனைகளைப் பிரதி எடுத்து ராக-தாளங்கள் அமைத்து வெளியூர்களில் எல்லாம் பாடிப் பிரபலப்படுத்தி வந்தார்கள்.





கச்சேரி முடிவில்.....





**12** பாடல்கள் முடிவு பெற்றதும்.....







**13** அரங்கேற்றத்துக்குக் கம்பருக்கு சோதனை நேர்ந்தது போலவே கவிராயருக்கும் ஏற்பட்டது.





14 கவிராயர் கோயிலை அடுத்த ஒரு தனி இடத்தில் இருந்து திருவரங்கநாதனைத் துதித்து ஒரு பாடலை மனமுருகப் பாடினார்.....

" ஏன் பள்ளிகொண்டீர் ஐயா- ஸ்ரீரங்கநாதரே! ஏன் பள்ளிகொண்டீர் ஐயா? "



15 அன்று இரவு பெருமாள் கவிராயரின் கனவில் தோன்றினார்.....

அன்பனே! நம் தொண்டர்களையும் பாடு. அரங்கேற்றம் நடக்கும்.



அதே நேரத்தில் பெருமாள் வைணவப் பெரியோர்கள் கனவிலும் தோன்றினார்.



அடியார்களே! கவிராயர் நம் தொண்டர்களையும் பாடட்டும். ராம நாடகம் அரங்கேற்றம் பெறலாம்.

16 மறுநாள் காலையில் கவிராயரைத் தேடி வைணவப் பெரியோர்கள் வந்தார்கள். பிறகு அரங்கேற்றம் நடைபெற்றது. கவிராயர் மங்களம் பாடினார்.....

" எவரும் வணங்கிய ரகுராமன்..... "



அரங்கேற்ற முடிவில்.....



உங்கள் பாடலைக் கேட்டு மகிழ்ந்தோம்!

17 கவிராயர் நாற்பது ராகங்களில் இந்த ராமநாடகக் கீர்த்தனைகளை அமைத்துப் பாடினார். அவை தமிழகமெங்கும் புகழ்பெற்று, இன்றும் திருவிழாக்களிலும், சபாக்களிலும் பாடப்பெற்று வருகின்றன.



" எனக்கு நின் இரு பதம் நினைக்க வரம் அருள்வாய், ஸ்ரீராமச்சந்திரா! "

# துகாராம்

1 மளிகை வியாபாரத்தில் வார்க்கரி என்ற பரம்பரையைச் சேர்ந்தவர் துகாராம். பகவானைத் தியானிப்பதிலேயே ஈடுபட்டிருந்த அவருக்கு வியாபாரத்தில் நாட்டமில்லாததால் பெருத்த நஷ்டம் ஏற்பட்டது. ஆதலால் அவரது குடும்பம் வறுமையில் வாடியது.

ஆனால் அதைப் பற்றிச் சிறிதும் கவலையே படாமல் துகாராம் எப்போதும், "பாண்டு ரங்கா, பண்டரிநாதா" என்று பாடிக்கொண்டிருந்தார்.

அவர் மனைவி ஜீஜாபாய் ஒரு நாள் அவரைக் கடுமையாகக் கோபித்துக் கொண்டாள்.




2



3 அந்தச் சமயம் அந்த ஊரிலிருந்த பண்ணையார் அங்கே வந்தார்.




4 ஜீஜாபாய்க்கு ஒரே சந்தோஷம்.



5

பரந்த வயல்வெளிக்கு நடுவே பரண்.
அதன்மீது அமர்ந்துகொண்ட துகாராமுக்கு வான்வெளியும் வயல்வெளியுமாகச் சேர்ந்து விட்டலனின் விசுவரூபக் காட்சியாகப் பரவசமூட்டியது.
தம்மை மறந்து அவர் இறைவனின் புகழைப் பாடிக்கொண்டிருந்தார்.




6

பசுங்கிளிகளும் குருவி முதலிய பறவைகளும் கூட்டம் கூட்டமாக வந்து, பொன்னிறக் கதிர்களை உற்சாகமாகக் கொத்தித் தின்றன.




7

துகாராம் பக்தி பரவசத்தோடு பாடிக்கொண்டிருந்தார். இதைப் பண்ணையாரின் ஆட்கள் வந்து கவனிப்பதை அவர் உணரவில்லை.




8

பண்ணையார், ஆட்கள் வந்து கூறியதைக் கேட்டதும் வயலுக்கு ஓடோடி வந்தார்.



9 நடந்ததைக் கேள்விப்பட்டு ஜீஜாபாயும் ஓடி வந்தாள்.




10 கிராமப் பஞ்சாயத்துக் கூடியது.




11 அறுவடை நடந்து முடிந்தது. போரடி தொடங்கிற்று. பண்ணையாரும் பஞ்சாயத்தாரும் சூழ நின்றார்கள். துகாராம் குற்றவாளியாக எதிரே நின்றார்.




12



13 எல்லோரும் கேலி பேசினார்கள். ஆனால் கதிர்களை அடிக்க அடிக்க ஆச்சரியப்படும் வகையில் தானியமணிகள் குவிந்து கொண்டேயிருந்தன.




14 பண்ணையார் துகாராமைக் கைகூப்பி வணங்கினார்.




15 பண்ணையார் வழக்கம்போல் தமக்கு நியாயமாகச் சேர வேண்டிய தானியம் போக, அதிகப்படியாக அந்த வருடம் கிடைத்த தானியம் அவ்வளவையும் துகாராமுக்கே கொடுத்துவிட்டார்.




16



# அப்பூதியடிகள்

1 அப்பர் பெருமானாகிய திருநாவுக்கரசர், ஒரு சமயம் சோழவள நாட்டிலுள்ள திங்களூர் என்ற ஊருக்கு வந்து சேர்ந்தார்.
ஊர் எல்லையிலேயே ஒரு தண்ணீர்ப் பந்தல். குளிர்ந்த இடம். அமுதம்போல் தண்ணீர். அதைப் பருகிய திருநாவுக்கரசர், அந்தப் பந்தலுக்குப் பெயர் எழுதியிருந்ததைப் பார்த்தார். வியப்படைந்து அங்கிருந்தவரிடம் கேட்டார்.....

ஐயா, இதென்ன இந்தப் பந்தலுக்கு 'திருநாவுக்கரசு தண்ணீர்ப் பந்தல்' என்று பெயரிட்டிருக்கிறார்களே! எங்கு பார்த்தாலும் இது போலவே எழுதியிருக்கிறதே!




இந்த ஊரில் அப்பூதியடிகள் என்று ஒருவர் இருக்கிறார். அவர் அந்த திருநாவுக்கரசரிடம் பெரிதும் பக்தி பூண்டவர். ஆதலால் அவர் தமது அறக்கட்டளைகள் எல்லாவற்றுக்கும் திருநாவுக்கரசர் பெயரையே வைத்திருக்கிறார்.

2 அப்படியா? அந்த அப்பூதியடிகளை எங்கே பார்க்கலாம்?



அருகில்தான் அவர் வீடு இருக்கிறது. தமது வீட்டுக்கும் அவர் இந்தப் பெயரையேதான் வைத்திருக்கிறார். அங்கே போனால் நீங்கள் அவரைப் பார்க்கலாம்.
தமக்குச் சொந்தமான தோட்டம், துரவு- ஏன், தமது பிள்ளைகளுக்கும் கூட அவர் திருநாவுக்கரசர் பெயர்தான் வைத்திருக்கிறார். போய்ப் பாருங்கள்!

3 திருநாவுக்கரசர் அருகிலிருந்த அப்பூதியடிகள் வீட்டு வாசலில் வந்து நின்றார்.

வர வேண்டும், வர வேண்டும்..... இந்தத் திண்ணையில் அமர்ந்து சற்று இளைப்பாறுங்கள்.




தங்களைப் பற்றிக் கேள்விப்பட்டேன். பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன்.

4 தாங்கள் என்னைத் தேடி வந்தது அடியேன் செய்த பாக்கியம்!




5 இந்த வார்த்தைகளைக் கேட்டதும் அப்பூதியடிகள் கோபத்துடன் எழுந்தார்.




6 இதைக் கேட்டதும் அப்பூதியடிகள் பெரும் அதிர்ச்சியடைந்து, அப்படியே நெடுஞ்சாண்கிடையாக திருநாவுக்கரசர் காலில் விழுந்து வணங்கினார்.




7 திருநாவுக்கரசரை வீட்டுக்குள் அழைத்து வந்து, ஆசனம் தந்து, தம் மனைவி மக்கள், சுற்றத்தார்கள் எல்லோரையும் அழைத்து வந்து, உபசரித்தார் அப்பூதியடிகள்.



8 சமையலறையில் அறுசுவை உணவு தயாராயிற்று. அப்பூதியடிகள் தமது மூத்த மகனை அழைத்தார்.




9 அவன் வாழையிலைக் குருத்தை நறுக்கினான். அப்போது வாழை மட்டையிலிருந்த ஒரு நாகப்பாம்பு அவனைத் தீண்டிவிட்டது.




10 வாயில் நுரை தள்ள, உடல் நீலம் பூத்துப் போக, இலையுடன் வந்த மூத்த திருநாவுக்கரசு அப்படியே நிலத்தில் விழுந்துவிட்டான்!




11 திருநாவுக்கரசர் அமுது செய்வது தடைப்பட்டுவிடப் போகிறதே என்று நினைத்த அப்பூதியடிகள் ஒரு முடிவுக்கு வந்தார்.....




12 கணவனும் மனைவியுமாக மகனின் உடலை தோட்டத்தில் கிடத்தி, ஒரு பாயினால் மூடி வைத்தார்கள்.



13 அப்பூதியடிகள் மனைவி மக்களுடன் திருநாவுக்கரசரை வணங்கினார்.




14 எல்லோரும் திருநீறு பெற்றுக்கொண்டார்கள்.




15 அப்பூதியடிகள் நடந்ததைச் சொல்ல முடியாமல் தவித்தார். ஆனால் வேறு வழியில்லை.....




16 திருநாவுக்கரசு சுவாமிகள் முன்னால் மூத்தமகன் உடலைக் கிடத்தினார்கள். சுவாமிகள் 'நஞ்சுண்ட கண்டம்' என்று பதிகத்தைப் பத்துப் பாடல்களில் பாடியருளினார்.



17 பதிகம் பாடி முடிந்ததுமே மூத்த மகன் தூங்கி எழுந்தது போல் எழுந்தான்.



# அர்ஜுனன் கட்டிய பாலம்




















5




6

அர்ஜுனா! அப்படியானால் நீ ஒன்று செய்கிறாயா?




7

ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா சிறிது யோசிப்பதுபோல் பாவனை செய்துவிட்டு –

ஹாங்! அந்த ராமர் சைன்னியத்தில் இருந்தவர்களில் ஒருவர் இன்னும் இருக்கிறார். நீ அமைக்கும் பாலத்தில் அவர் நடந்து பார்த்துவிட்டுச் சொல்லட்டும்!



அந்த ஒருவர் கடக்கவா ஒரு பாலம்? ஒருவர் என்ன, ஒன்பதாயிரம் பேர் வேண்டுமானாலும் கடந்து போகட்டும். பார் இதோ!

8

இப்படிச் சொல்லிவிட்டு, அர்ஜுனன் அம்புகளாலேயே அற்புதமான ஒரு பாலம் அமைத்தான்.



கண்ணா! ராமர் படையில் இருந்த ஒருவர் யாரோ இன்னும் இருப்பதாகச் சொன்னாயே. அவரைக் கூப்பிட்டு இதன் மீது நடந்து போகச் சொல்!


9
ஆஞ்சநேயா! ஸ்ரீராமபிரான் புகழ் ஓங்கி நிற்க, நீ எங்கிருந்தாலும் இங்கே உடனே தோன்றுவாயாக!


10
ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா நினைத்த மறுகணமே சிரஞ்சீவி வரம் பெற்ற ஆஞ்சநேயர் அவர்கள் எதிரே வருவது தெரிந்தது.
அதோ வருகிறார், பார் அர்ஜுனா! இவர் ஒருவர்தான் இன்னும் நம்மிடையே இருப்பவர்! அனுமார்!


11
ஆஞ்சநேயர் வந்து நின்றதும்.....
ஆஞ்சநேயரே! பார்த்தன் யமுனைக்குக் கட்டியிருக்கும் இந்தப் பாலத்தின் வழியாக மறுகரைக்குச் செல்லுங்கள்.
இந்தப் பாலத்தின் மீதா?


12
அனுமார் தயங்குவதைப் பார்த்து....
ஏன் தயங்குகிறீர்கள்? பாலம் உறுதியானதுதான். தாராளமாக நீங்கள் இதில் நடந்து போகலாம்!

13 ஆஞ்சநேயர் பாலத்தின் மீது ஒரு காலை வைத்ததுமே பாலம் பொலபொலவென்று நொறுங்கியது.

ஹா!

14 அநுமார் கரையேறி வருகிறார். அர்ஜுனன் தன் வில்லையும் அம்புகளையும் தரையில் எறிந்துவிட்டு, தலை குனிந்து நிற்கிறான்.




15 ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனைச் சமாதானப்படுத்தினார்.....



# கற்புக்கரசி சுகன்யா

**1** பிருகு மகரிஷியின் குமாரர் சியவனர்.
அவர் பயோஷணி நதிக்கரையின் அருகில்
கடும் தவம் செய்து வந்தார்.
அப்போது அவர்மீது கரையான் புற்று
வைத்து மூடிவிட்டது.



**2** வெகு காலத்துக்குப் பிறகு சர்யாதி என்ற
அரசர் தம் பரிவாரங்களுடன் அந்த
நதிக்கரைக்கு நீராட வந்தார்.



**3** மன்னருடன் அவரது மகள் சுகன்யா என்ற
அழகிய இள மங்கையும் வந்திருந்தாள்.
அவள் கரையோரமாக வந்தபோது அந்தக்
கரையான் புற்றைக் கண்டு நின்றாள்.
புற்றுக்குள் தெரிந்த சியவன மகரிஷியின்
கண்களை மின்மினிப் பூச்சி என்று அவள்
தவறாக நினைத்துவிட்டாள்.




**4** ஆவலால் தூண்டப்பட்ட அரசகுமாரி ஒரு
குச்சியால் மகரிஷியின் இரண்டு கண்களையும்
குத்திவிட்டாள்.
மறுகணமே புற்றிலிருந்து சியவனர்
வெகுண்டெழுந்தார்.



5 அவருடைய கோபத் தீயினால் அரச பரிவாரமே நோய் கண்டு பரிதவித்தது. அரசர் அதன் காரணம் புரியாமல் சியவன மகரிஷியிடமே போய்க் கேட்டார்.

அப்பா! நான்தான் தெரியாத்தனமாக மின்மினிப் பூச்சி என்று குத்திவிட்டேன்!



மகரிஷே! என் மகள் அறியாமல் செய்த பிழையை மன்னித்து அருள் புரியுங்கள்.

6 சியவனர் அந்த அரசகுமாரியை நோக்கினார். பிறகு அரசரிடம் கூறினார்.

அரசே! இவள் செருக்கு மிகுதியால் என் கண்களைப் புண்படுத்திவிட்டாள். அதற்குப் பரிகாரமாக அவள் எனக்கு மனைவியாக வேண்டும். அப்படியானால் அவள் செயலை மன்னித்துவிடுகிறேன்!



மகரிஷியே! இதற்கு நான் மகிழ்ச்சியோடு சம்மதிக்கிறேன்! என் மகளை ஏற்றுக்கொள்ளுங்கள்!

7 தன் மகளை சியவனருக்குத் திருமணம் செய்து கொடுத்துவிட்டு, அரசர் தம் பரிவாரங்களோடு நகரம் திரும்பினார்.
குற்றமற்ற இளமங்கை சுகன்யா மன மகிழ்ச்சியோடு மகரிஷிக்குப் பணிவிடை செய்து வந்தாள்.




8 சில காலம் கழிந்தபிறகு, இரட்டையர்களான அசுவினி தேவர்கள் அந்தப் பக்கமாக வர நேர்ந்தது.
அவர்கள் சுகன்யாவின் அழகைக் கண்டு பிரமித்துப் போனார்கள்.




தேவர்களே! நான் சர்யாதி மன்னன் மகள் சுகன்யா! சியவனரின் தர்மபத்தினி


9
பெண் அணங்கே! உன் அழகுக்குத் தேவர்களும் ஈடாக மாட்டார்கள். அப்படியிருக்கும்போது, இந்த அழகற்ற கிழவனை மணந்து நீ என்ன சுகத்தைக் காண்கிறாய்! அவரை விட்டு விட்டு எங்கள் இருவரில் ஒருவரை ஏற்றுக்கொள்!
தேவர்களே! அப்படி நினைக்காதீர்கள்! நான் என் கணவரோடு மகிழ்ச்சியாகவே இருக்கிறேன்.


10
இளமங்கையே! உன் கணவரை அழகும் இளமையும் பொருந்தியவராகச் செய்துவிடுகிறோம்! பிறகு எங்கள் மூவரில் ஒருவரை நீ ஏற்றுக்கொள்வாயாக!


11
சுகன்யா தன் கணவரின் அனுமதி பெற்றுக்கொண்டு அந்த ஏற்பாட்டுக்கு இணங்கினாள்.
சியவனரே! எங்களோடு நதியில் மூழ்கி எழுந்திருங்கள்!
இதோ, இப்போதே மூழ்கி எழுந்திருக்கிறேன்!


12
நதியில் மூழ்கி எழுந்த மூவரும் ஒரே அச்சாக, அழகும் இளமையும் பொருந்தியவர்களாகத் தோன்றினார்கள்.
ஆ, இதென்ன சோதனை! நான் உத்தமி என்பது உண்மையானால் நான் தேர்ந்தெடுப்பவர் என் கணவராகவே இருக்க வேண்டும்!

**13** கற்பின் மகிமையால் சுகன்யா தன் கணவர் சியவனரையே தேர்ந்தெடுத்துவிட்டாள்.




**14** சர்யாதி மன்னர் உதவியால் சியவனர் ஒரு சமயம் ஒரு பெரும் யாகம் நடத்தினார். அதில் கலந்துகொள்ள இந்திரன் முதலான தேவர்கள் வந்திருந்தார்கள்.




**15** இந்திரன் சொன்னதைக் கேட்ட சியவனர் புன்சிரிப்பு சிரித்துவிட்டு, அசுவினி தேவர்களுக்கு வாக்களித்தபடி சோமரஸம் வழங்கினார்.




**16** சியவனர் மந்திர ஜபம் செய்தார். அதன் காரணமாக இந்திரனின் வஜ்ராயுதம் வலுவிழந்து கீழே விழுந்தது.




பிற்காலத்தில் சீதை அசோகவனத்தில் இருந்தபோது, கற்புக்கரசிகளில் ஒருவர் என்று சுகன்யாவைப் பாராட்டியிருக்கிறார்.

# சியமந்தகமணி

1 சத்ராஜித் என்பவன் ஓர் அரசன்.
அவன் மிகுந்த பக்தியோடு சூரிய பகவானை வழிபட்டு வந்தான்.



2 மன்னனது பக்தி சூரிய பகவானை மகிழ்வித்தது.
ஆதலால் அவர் ஒரு நாள் அதிக பிரகாசத்துடன் சத்ராஜித் எதிரில் காட்சி கொடுத்தார்.




3 சத்ராஜித், சியமந்தகமணியைக் கழுத்தில் அணிந்துகொண்டு, சோபையுடன் துவாரகைக்கு வந்தான்.
கிருஷ்ண பகவானிடம் நடந்ததைக் கூறினான்.




4 'கிருஷ்ண பரமாத்மா எங்கே இந்த மணியைக் கேட்டு விடுவாரோ!' என்று சத்ராஜித் பயந்தான்.
ஆதலால் அவன் சியமந்தகமணியை தன் தம்பி பிரேசனனிடம் கொடுத்தான்.



5 தம்பி பிரசேனன் மணியை அணிந்தபடி, ஒரு நாள் காட்டுக்குச் சென்று வேட்டையாடினான்.



6 அவனது அந்தக் கொடிய செயலால் அவனிடமிருந்த புனிதம் கெடவே, தீவினை பற்றிக் கொண்டது. ஆதலால், பயங்கர கர்ஜனையுடன் ஒரு சிங்கம் அவன்மீது பாய்ந்தது.




7 பிரசேனன் உடலைச் சிங்கம் இழுத்துக்கொண்டு வருவது ஜாம்பவான் கண்ணில் பட்டது. ஜாம்பவான் சிங்கத்தைக் கொன்றுவிட்டு, சியமந்தகமணியைத் தான் எடுத்துக்கொண்டான்.




8 பிரசேனன் திரும்பி வராததால் சத்ராஜித்துக்குச் சந்தேகம் வந்தது.




9 தன் மீது வீண்பழி சுமத்தப்படுவதை அறிந்த கிருஷ்ணர் அதைப் போக்க முடிவு செய்தார். ஆதலால் அவர் பிரசேனனைத் தேடி தமது பரிவாரங்களோடு காட்டுக்குச் சென்றார்.



10 கிருஷ்ண பரமாத்மா அங்கும் இங்கும் தேடியபடியே முடிவில் ஜாம்பவான் குகைக்கு வந்தார்.




11 ஸ்ரீ கிருஷ்ணர் குகைக்குள் நுழைந்து வந்தபோது.....




12 சியமந்தகமணிக்காக கிருஷ்ணர் ந்திருப்பதை அறிந்த ஜாம்பவான்.....




13 இருவருக்கும் 27 நாட்கள் பயங்கரமான யுத்தம் நடந்தது.



14 வெளியில் காத்திருந்த படைவீரர்கள் குகைக்குள் போக பயந்து துவாரகைக்குத் திரும்பிச் சென்றார்கள்.




15 இருபத்தெட்டாம் நாள் ஸ்ரீகிருஷ்ணர் ஜாம்பவானுக்கு ஸ்ரீராமபிரானாகக் காட்சியளித்தபோது.....




16 ஜாம்பவான் ஸ்ரீகிருஷ்ணரைத் தன் மாளிகைக்கு அழைத்துச் சென்று உபசரித்தான்.




17 துவாரகாபுரி மக்கள் மணமக்களை மலர் தூவி வரவேற்றார்கள்.




18 கிருஷ்ண பரமாத்மா- சத்தியபாமா திருமண வைபவம் கோலாகலமாக நடந்தேறியது.



# ஞானேசுவரர்

1 புனேவுக்கு அருகில் உள்ள ஆனந்தி என்ற ஊரில் ருக்குமாபாய் வாழ்ந்து வந்தாள். அவள் ஒரு நாள் அரச மரத்தைப் பிரதட்சணம் செய்து கொண்டிருந்தாள். அப்போது அந்த ஊர்ப் பக்கம் வந்த ராமாச்ரமர் என்ற மகான் ருக்குமாபாயைப் பார்த்துவிட்டுச் சிரித்து நின்றார்.

குழந்தை வேண்டும் என்று இந்த அரசமரத்தை இவள் சுற்றுகிறாள் போலிருக்கிறது!

யாரோ ஒரு பெரிய மகானாகத் தெரிகிறது. இவரை வணங்க வேண்டும்!

2 ருக்குமாபாய் அந்த மகானை வணங்கினாள்.




3 ருக்குமாபாய் இந்த ஆசிமொழிகளைக் கேட்டதும் சிரித்தாள்.




தாங்களோ பெரிய மகான். தங்கள் வாக்குப் பொய்க்காது. ஆனால் நான் என் கணவரை உயிரோடு இழந்து நிற்கிறேன்.
பெற்றோரின் அஸ்தியைக் கரைப்பதற்காகக் காசிக்குச் சென்ற அவர், ராமாசரமர் என்ற மகானிடம் சந்நியாசம் வாங்கிக்கொண்டு விட்டார். ஆண்டுகள் ஓடிவிட்டன. இந்த நிலையில் நான் குழந்தைகளைப் பெற்று வாழ்வது எப்படி?

4 ராமாச்ரமர் அதிர்ச்சியடைந்தார்.
யாத்திரையை அதோடு முடித்துக்கொண்டு காசிக்குத் திரும்பினார்.
ருக்குமாபாயின் கணவரான விடோபாவை அழைத்தார்.




5 மகத்தான சோதனைக்கு உள்ளான விடோபா ஊர் திரும்பி, தாம் விரும்பாத நிலையிலும் இல்லறம் நடத்த வேண்டிய சூழ்நிலை வந்தது.




6 அந்தக் கனவு உண்மையாயிற்று. பிரம்மா, விஷ்ணு, சிவன், பராசக்தி ஆகியோரின் அம்சங்களாக மூன்று பிள்ளைகளும் ஒரு மகளும் பிறந்தார்கள்.




7 ஊர் மக்கள் ஆச்சரியப்படும் வகையில் விடோபா தமது குழந்தைகளுக்குச் சாஸ்திரங்களைக் கற்றுக்கொடுத்தார். என்றாலும் ஊரார் கேலி செய்தார்கள்.



**8** குழந்தைகள் படும் சிறுமையை என்னால் பொறுக்க முடியவில்லை. வா, காசிக்கே போவோம்.
கங்கை நமது மனக் கொதிப்பைத் தணிப்பாள்!



**9** காசியில் ராமாச்ரமர் ஆசியுடன் விடோபாவும் அவரது மனைவியும் கங்கையில் கலந்தனர்.



விடோபா! என் தவத்தையெல்லாம் உனக்கே தந்தேன்.
உன் தியாகத்தால் கங்கை மேலும் புனிதமாகட்டும்!

**10** விடோபாவின் நான்கு குழந்தைகளையும் சமூகம் பிரஷ்டம் செய்து ஒதுக்கி வைத்துவிட்டது. கடைக்குட்டியான ஞானேசுவரன் தேவகிரியை ஆண்ட ராமராயனின் ராஜசபையில் போய் நின்றான்.

மாமன்னரே! என் தந்தை இல்லறத்தில் விருப்பம் கொண்டவரல்ல. தமது குருவின் ஆணைக்குட்பட்டு இல்லறம் புகுந்தார். இது பெரிய தியாகமல்லவா? அவரை ஏளனம் செய்து, எங்களை பிரஷ்டம் செய்யலாமா? மன்னராகிய தாங்கள் இதை அனுமதிக்கலாமா?



குழந்தாய்! நீ சொல்வது மிகவும் சரி. ஆனால் இது சாஸ்திர விஷயம்! அந்தணசிரேஷ்டர்களின் சபைக்குப் போ. அவர்கள் முடிவு சொல்லட்டும்.

**11** அரசர் கூறியபடி அந்தணர் சபைமுன் போய் நின்றான் ஞானேசுவரன்.

பிள்ளாய்! உன் வாதம் சரியே. ஆனால் உன் கருத்துக்கு சாஸ்திர ஆதாரம் காட்டினால் நாங்கள் ஏற்கிறோம். யார் சாஸ்திர ஆதாரம் காட்டினாலும் சரியே. அதோ தெருவில் நிற்கிற அந்த எருமை மாடு எடுத்துக்காட்டினாலும் ஒப்புக்கொள்கிறோம்.



சபையோர்களே! எருமையும் ஆண்டவனது அம்சம்தான்.
துர்க்காதேவி இந்த மகிஷத்தின் சிரசில்தான் வேதங்களில் தோய்ந்த தன் பாதங்களை வைத்து நிற்கிறாள். இந்த எருமையே சாஸ்திர ஆதாரம் காட்டட்டும்!

**12** ஞானேசுவரன் ஒருமுகப்பட்ட உள்ளத்துடன் எருமையை வணங்கி, பிரார்த்தனை செய்தான்.




**13** மீண்டும் எருமை வேதப் பிரமாணம் காட்டிப் பேசிற்று.....




**14**




**15** ஞானேசுவரர் தமது இருபத்தொரு வயதுக்குள் 1. கீதா பாஷ்யம் என்கிற ஞானேச்வரி, 2. அமிருதானுபவம், 3. ஹரிபாட என்ற மூன்று அருள் நூல்களை இயற்றினார்.
பெரும் மகானாக விளங்கியதால் அவரது புகழ் நாடெங்கும் பரவியது.
மகாராஷ்டிரத்தில் தோன்றிய தலைசிறந்த மகான்களில் ஒருவராக ஞானேசுவரர் இன்றும் போற்றப்படுகிறார்.



# நள தமயந்தியின் முற்பிறவி வரலாறு

1

விண்ணளாவிய இமயமலையில் மரங்கள் அடர்ந்த ஒரு காட்டுப் பகுதி.
அங்கேயுள்ள ஒரு மலைக் குகையில் ஆகுகன் என்ற வேடர் தலைவன் தன் மனைவி ஆகுகியுடன் வசித்து வந்தான்.
ஒரு நாள் மாலை நேரத்தில் இமயத்தில் தவம் செய்யும் ஒரு முனிவர் வழி தவறி அந்தக் குகைப் பக்கமாக வந்தார்.




2

ஒடுக்கமான குகைக்குள் மான் தோலில் அவரை அமரச் செய்தான் ஆகுகன்.
அவன் மனைவி ஆகுகி பலாச்சுளைகளைத் தேனில் கலந்து அவர் முன் வைத்தாள். இனிய கனி வகைகளையும் தந்து உபசரித்தாள்.




3 நாழிகைகள் பல கடந்து, உறங்கும் நேரம் வந்தது. குகை சிறியது. மூவரும் படுத்து உறங்குவதற்கு அங்கு இடம் போதாது.
தவசீலரே! குகையில் இரண்டு பேர்தான் உறங்க முடியும். தந்தையும் மகளும் போல், தாங்களும் ஆகுகியும் குகையின் உள்ளே உறங்குங்கள். நான் ஆயுதபாணி. வனவிலங்குகளால் எனக்கு ஆபத்து வராமல் நான் பார்த்துக்கொள்வேன்!
வேண்டாமப்பா! எனக்கென்ன, நான் வயதானவன்தானே! குகையின் வெளியிலேயே நான் உறங்குகிறேன்!


4 ஆகுகன் அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. முனிவரை வற்புறுத்தி குகையின் உள்ளேயே படுக்க வைத்தான். பிறகு அவன் வில்லும் அம்புமாக குகை வாயிலில் சாய்ந்தபடி அமர்ந்து கொண்டான்.
ஆகா! எப்படிப்பட்ட தூய உள்ளம்! என்ன தியாகம்! இருவருமே மகா உத்தமர்கள்!
ஓம் நமசிவாய! ஓம் நமசிவாய!


5 நடு இரவு. வெளியில் குகை வாயிலில் சாய்ந்திருந்த ஆகுகன் களைப்பு மிகுதியால் கண்ணயர்ந்து உறங்கிவிட்டான். தூக்கத்தில் அவன் கையிலிருந்த வில் நழுவிவிட்டது.
கொர்..... கொர்.....


6 அந்த நேரம் பார்த்து இரை தேடிப் புறப்பட்ட ஒரு வேங்கைப் புலி அவன் உறங்கும் ஒலி கேட்டு, ஒரு புதர் மறைவில் பதுங்கியபடி அவனைப் பார்த்தது.

7 மறுகணம் அந்த வேங்கை அவன்மீது ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து, கவ்விக் குதறியது. வேடன் இறந்தான்.



8 விடியற்காலை. ஆருகி கண் விழித்தாள்.




9 கணவனைப் பார்க்க ஆருகி ஆவலோடு வெளியில் வந்தாள்.
அங்கே தன் கணவன் இறந்துபோயிருந்ததைக் கண்டாள்.
கதறியபடியே கணவன் மீது விழுந்து அவளும் உயிர் துறந்தாள்.




10 அவளுடைய அலறலைக் கேட்ட தவமுனிவர் பதறிப் போய் வெளியே வந்தார்.
அங்கே அவர் கண்ட காட்சி.....!



11




12 முனிவர் அக்கினி வளர்த்தார். இரு உடல்களையும் மந்திர நீராட்டினார். கட்டைகளை அடுக்கி, அதன்மீது உடல்களைக் கிடத்தி, தீ மூட்டினார். தீக்கொழுந்து சுடர்விட்டெழுந்தது.




13 முனிவர் கொழுந்துவிட்டெரியும் தீ ஜ்வாலையில் போய் விழுந்து விட்டார்.




14 முனிவருக்கு உணவும் இடமும் தந்த தியாகத்தின் பலனாக மறுபிறவியில் ஆகுகன் நளசக்கரவர்த்தியாகவும், ஆகுகி தமயந்தியாகவும் பிறந்தார்கள்.
முனிவர் அன்னமாகப் பிறந்து, முற்பிறவியில் தம்மால் பிரிந்த அந்த வேடுவத் தம்பதிகள் சேர்ந்து வாழ உதவினார்.



# மகாகவி போதனா

**1** ஆந்திர மாநிலத்தில் ஒண்டிமிட்டா என்ற ஊரில் போதனா பிறந்தார்.
அவர் தன்னுடைய பத்தாவது வயதில் 'வீரபத்ர விஜயம்' என்ற நூலை எழுதி, தன் தாயிடம் பாடிக் காட்டினார்.




**2** அவர்களின் வீட்டுக்கு ஒரு நாள் பெரியவர் ஒருவர் வந்தார்.
அவரிடம் தன் மகன் எழுதிய நூலை தந்தையான கேசனா கொடுத்தார்.




**3**




**4** போதனாவின் பெருமையைப் பற்றி ராஜகொண்டா சமஸ்தான அதிபர் கேள்விப்பட்டார்.
அவர் தம்மை வந்து பார்க்கும்படி போதனாவுக்குச் சொல்லியனுப்பினார்.



5 சில நாட்களுக்குப் பிறகு.....




6 போதனா வளர வளர, அவனது ஞானமும் வளர்ந்து நல்ல பக்குவம் பெற்றது.




7 பெற்றோர் சொல்லியும் கேட்காமல் போதனா தனது வசதியான வாழ்க்கையை உதறிவிட்டு, கோதாவரி நதிக்கரைக்குச் சென்று தியானத்தில் ஈடுபட்டான்.




8 ஒரு நாள் இரவு நீண்ட நேரமாகியும் போதனா வீடு திரும்பவில்லை. பெற்றோர் அவனைத் தேடிக்கொண்டு நதிக்கரைக்கு வந்தார்கள். போதனா தன்னை மறந்து ஆடிப் பாடிக்கொண்டிருந்தான்.




9 பெற்றோர் போதனாவை வற்புறுத்தி அவருக்குத் திருமணம் செய்து வைத்தார்கள். தந்தை விவசாயப் பணியை போதனாவிடம் ஒப்படைத்தார். போதனா சுவடிகளோடு சென்று காவியம் எழுதிக்கொண்டிருந்தார்.



**10** பாகவதம் எழுதி வந்தபோது ஒரு சமயம் அவர் கற்பனை தடைப்பட்டு அப்படியே தூங்கிப்போய் விட்டார். அப்போது..... ஸ்ரீராமபிரானே வந்து தடைப்பட்ட இடத்தைப் பூர்த்தி செய்தார்.



**11** கண் விழித்து எழுந்த போதனா சுவடி எழுதப்பட்டிருப்பதைப் பார்த்து கதறிப் புலம்பினார்.




**12** இந்த விஷயம் ஊராருக்குத் தெரிந்தது. அவர்கள் அவரைக் கோயிலுக்கு அழைத்துச் சென்று மரியாதை செய்வித்தார்கள். வாரங்கல் அரசருக்குச் செய்தி அனுப்பினார்கள்.




**13** போதனா அரசவைக்குப் போக விரும்பவில்லை.




**14** போதனாவின் மனைவி தன் சகோதரர் ஸ்ரீநாதகவிக்கு நடந்த விவரங்களைச் சொல்லியனுப்பினாள்.
அதனால் அவர் போதனாவுக்கு அறிவுரை வழங்கும் நோக்கத்துடன் தமது பரிவாரங்களுடன் புறப்பட்டார்.
அதற்கு முன்பாக தமது பரிவாரங்கள் அத்தனை பேருக்கும் வேண்டிய உணவுப் பொருள்களை அவர் வண்டியில் அனுப்பி வைத்திருந்தார்.



**15** ஸ்ரீநாதகவி யோக சித்தி படைத்தவர். ஆதலால் அவர் தனது சக்தியைப் போதனாவுக்குக் காட்ட நினைத்தார்.




**16** போதனாவும் அவரது மகனும் வயல் வெளியில் இருந்தார்கள்.




**17** பல்லக்கை விட்டு இறங்கிய ஸ்ரீநாதகவி கலப்பை தானே உழுது செல்வதைப் பார்த்து வெட்கமடைந்தார். கர்வம் நீங்கிய நிலையில் அவர் போதனாவின் தூயபக்தியையும் புரிந்துகொண்டார்.




**18** கோதாவரியில் நீராடிவிட்டு வந்த அனைவருக்கும் சரஸ்வதிதேவியின் அருளால் போதனா விருந்து படைத்தார்.




பொருளுக்காகப் பாடாமல் ஸ்ரீராமபிரானின் அருளை நாடிப் பாடியவர் மகாகவி போதனா. அதனால்தான் அவரது பெயர் இன்றும் நின்று நிலவுகிறது.

# வீர அபிமன்யு

**1** ஒரு நாள் அர்ஜுனன் - கருவுற்றிருந்த தன் மனைவி சுபத்திரையிடம் - போர்க்கள நிகழ்ச்சிகள் எப்படி இருக்கும் என்று சொல்லிக்கொண்டிருந்தான்.




**2** இடையில் சுபத்திரை தூக்கம் வந்ததால் தூங்கிவிட்டாள். அதை அர்ஜுனன் கவனிக்கவில்லை.
அவள் கண்களை மூடிக் கேட்டுக்கொண்டிருப்பதாக நினைத்து, அர்ஜுனன் சொல்லிக்கொண்டிருந்தான்.




**3** ....பத்ம வியூகத்தை உடைத்துக்கொண்டு உள்ளே செல்லும் முறையை அர்ஜுனன் சொல்லி முடித்தான்.
அதைத் தொடர்ந்து அவன் பத்ம வியூகத்திலிருந்து வெளியே வருவது எப்படி என்று சொல்ல ஆரம்பிக்கும் நேரத்தில்..... ஒரு சேவகன் அவசர அவசரமாக அங்கே வந்தான்.




**4** இது நடந்த சில வாரங்களுக்குப் பிறகு சுபத்திரைக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. இந்தச் செய்தியை ஸ்ரீகிருஷ்ணர் தன் அண்ணா பலராமரிடம் தெரிவித்தார்.



**5** ஸ்ரீகிருஷ்ணரிடம் சுபத்திரை தன் மகனை எடுத்து வந்து காட்டுகிறாள்.




**6** பாண்டவர்கள் வனவாசம் செய்த காலத்தில் அபிமன்யு சிறுவனாக இருந்தான். அவனுக்கு அவனது தாய் சுபத்திரை வில்வித்தை கற்பிக்கச் செய்தாள்; தானும் கற்றுக் கொடுத்தாள்.




**7** இளம் வயதிலேயே இடைவிடாமல் பயிற்சி செய்து அபிமன்யு நிகரற்ற வீரனாகிவிட்டான்.




**8** ஒரு நாள் திடீரென்று பலராமர் தன் தங்கையைப் பார்ப்பதற்காக வந்தார்.



**9** ரதத்தில் ஏறி மூவரும் விராட தேசம் செல்கிறார்கள்.




**10** அபிமன்யுவுக்கும் உத்தரைக்கும் ஸ்ரீகிருஷ்ணர், பலராமர் முன்னிலையில் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.




**11** திருமணம் நடந்து சிறிது காலம் கழிந்ததும், மகாபாரதப் போர் தொடங்கியது. பாண்டவர்கள் கௌரவர்களை எதிர்த்து, தர்மயுத்தம் செய்தார்கள்.



**12** பதிமூன்றாம் நாள் போரில் துரோணர் கௌரவர் சேனையைப் பத்ம வியூகமாக அமைத்தார்.




**13** பத்ம வியூகம் அமைக்கப்பட்டதைப் பார்த்து தர்மபுத்திரர் கவலைப்பட்டார்.



**14** ஆனால் ஒன்று. நான்
பத்ம வியூகத்துக்குள் புகுந்துவிடுவேன்.
வெளியேறக் கற்றுக்கொள்ளவில்லையே!



கவலைப்படாதே! நீ வியூகத்தைத் தகர்த்து
உள்ளே புகுந்துவிட்டால், நாங்கள்
உன்னைப் பின்தொடர்ந்து உள்ளே புகுந்து
எதிரிகளைச் சிதற அடித்துவிடுவோம்!

**15** அபிமன்யு பத்ம வியூகத்தை
உடைத்துக்கொண்டு திறமையோடு
வேகவேகமாக முன்னேறினான். இதைச்
சிறிதும் எதிர்பார்க்காத எதிரிகள்
வியந்தார்கள்; கதி கலங்கினார்கள்.



அடடா! புலிபோல் சீறி வருகிறானே!
அற்புதம்! ஆகா! வீரர்கள் சிதறி
ஓடுகிறார்களே!

**16** அப்போது ஜயத்ரதன் என்ற அரசன்,
அபிமன்யு தகர்த்த இடத்தை தன்
படைகளைக் கொண்டு மூடிவிட்டான்!



அர்ஜுனனைத் தவிர வேறு யாராலும்
என்னை வெல்ல முடியாது! இந்த அபிமன்யு
எந்த மூலை!

**17** அபிமன்யு வேகமாக முன்னேறினான்.
ஆனால் பாண்டவர்களால் அவனைப்
பின்பற்றி வர முடியாமல் போயிற்று.
ஆதலால் கர்ணன், துரோணர் முதலான
ஆறு மகாவீரர்கள் ஒன்று சேர்ந்து
அபிமன்யுவைத் தாக்கினார்கள்.
களைத்து விழுந்த அபிமன்யுவை
துச்சாதனன் மகன் கதையால் அடித்துக்
கொன்றான்.
அபிமன்யு வீரமரணம் அடைந்து,
அழியாப் புகழ் பெற்றான்.



# லட்சுமணன் தியாகம்

1 அயோத்தியை ஸ்ரீராமர் சிறப்பாக ஆட்சி செய்து வந்தார்.

அவரது அவதார காலம் முடிந்து அவர் வைகுண்டம் திரும்பும் நேரம் நெருங்கியது.

இதைப் பற்றி ஸ்ரீராமரிடம் காலதேவன் (யமதர்மராஜன்) தனிமையில் பேச விரும்பினான்.

எனவே அவன் ஒரு முனிவர் வேடம் பூண்டு ஸ்ரீராமரைச் சந்திக்க வந்தான்.




2




3 இளையபிரான் லட்சுமணனின் அனுமதி இல்லாமல் யாரும் ஸ்ரீராமபிரானைச் சந்திக்க முடியாது.




4 ஸ்ரீராமர் காலதேவனோடு உரையாடிக்கொண்டிருந்தார். அப்போது ஸ்ரீராமரைக் காண அங்கு துர்வாச முனிவர் வந்தார்.




5
துர்வாசர் வருவதைப் பார்த்து லட்சுமணன் கலங்கிப் போனான்.
இது என்ன சோதனை! இந்த நேரம் பார்த்து துர்வாசர் வருகிறாரே! இவர் மகா கோபக்காரராச்சே!


6
ஓடிச் சென்று அவரை எதிர்கொண்டு வரவேற்கிறான்.
மகரிஷி வர வேண்டும், வர வேண்டும். என்ன பாக்கியம், என்ன பாக்கியம்! வாருங்கள், வந்து இளைப்பாறுங்கள்!
முதலில் நான் ஸ்ரீராமரைத் தரிசிக்க வேண்டும்! பிறகுதான் மற்றதெல்லாம்!


7
தரிசனத்துக்கு என்ன? பார்க்கலாம்... ஆனால்...
என்ன ஆனால்? யாரிடம் நீ பேசுகிறாய்! உடனே நான் ஸ்ரீராமரைப் பார்க்க முடியுமா, முடியாதா, அதைச் சொல்! என்னிடம் வந்து ஆனால், போனால் என்கிறாயே!


8
முனி சிரேஷ்டரே! கோபம் வேண்டாம். சற்றுப் பொறுமையுடன் கேளுங்கள். வராத ஒருவரோடு மிகவும் முக்கியமான விஷயம் பற்றி ஸ்ரீராமர் இப்போது பேசிக்கொண்டிருக்கிறார். வந்தவர் போன பிறகு நானே தங்களை ஸ்ரீராமரிடம் அழைத்துச் செல்கிறேன். மன்னிக்கருள வேணும்!
வராத ஒருவரா? நானும் வராதவன்தான் வந்திருக்கிறேன்! ஹே லட்சுமணா! இப்போதே நான் ஸ்ரீராமரைப் பார்க்க நீ என்னை அனுமதிக்காவிட்டால், இந்த அயோத்தி நகரமே அழிந்து போகட்டும் என்று சாபம் கொடுத்துவிடுவேன்!!

9 முனிவரின் கோபத்தைக் கண்டு லட்சுமணன் நடுநடுங்கிப் போய் ஒரு முடிவுக்கு வந்தான்.




10 மக்களுக்காகத் தன் உயிரையே தியாகம் செய்யத் துணிந்த லட்சுமணன் உள்ளே போகிறான்.
காலதேவனோடு உரையாடும் ராகவனிடம் முனிவர் வருகையை அறிவிக்கிறான்.




11 எமனுக்கு வாக்களித்தபடி 'இப்போது லட்சுமணனை என்ன செய்வது?' என்று ராகவன் மனம் தவிதவிக்கிறது.
ஆயினும் துர்வாசரை இன்முகத்தோடு ஸ்ரீராமர் வரவேற்று உபசரிக்கிறார்.




12 துர்வாச மகரிஷி விடைபெற்றுச் சென்ற பிறகு, ஸ்ரீராமர் தம்பியைப் பார்த்துக் கண் கலங்குகிறார்.



13 அருமைத் தம்பியின் உயிரைக் காக்க, மந்திரிகளையும் மகரிஷி வசிஷ்டரையும் ஸ்ரீராமர் கலந்து பேசுகிறார்.

மகரிஷே! என் மனம் கொந்தளிக்கிறதே! நான் என்ன செய்வேன்?



ராகவா! உத்தமசீலர்களைப் பகிஷ்காரம் செய்வதே கொல்வதற்குச் சமம்தான். எனவே உன் வாக்கைக் காப்பாற்ற லட்சுமணனை விலக்கி விட்டு விடு! அது போதும்.

14 வசிஷ்டரின் அறிவுரையின்படியே நடந்துகொள்வது என்று ஸ்ரீராமர் முடிவு செய்கிறார்.

அருமை லட்சுமணா! எனக்காக நீ செய்த தியாகங்கள் எல்லாவற்றையும்விட இந்தத் தியாகமே மிகவும் பெரியது. என் வாக்கை நிறைவேற்ற நான் உன்னையே தியாகம் செய்து நாடு கடத்துகிறேன்.



15 பகிஷ்காரம் செய்யப்பட்ட லட்சுமணன் யாரிடமும் பேசாமல், நேரே கானகம் சென்று தவத்தில் ஈடுபட்டான்; பிறகு சரயு நதியில் நிற்கிறான்.

அண்ணன் என்னை விலக்கிவிட்ட பிறகு உலகில் எனக்கு வேறு என்ன இருக்கிறது!
சரயு மாதாவே! உன் மடியில் என் உயிரை ஒப்படைக்கிறேன். மறுக்காமல் ஏற்றுக்கொள்வாயாக!



16 சரயு நதியில்...... ஒரு சுழிப்பு!



# மகாகவி காளிதாசன்

**1** சுதன்மன் என்ற அரசன் மதுமந்தம் என்ற நாட்டை ஆட்சி செய்து வந்தான். அவனது மகள் வித்யாவதி. அவள் அழகில் மட்டுமல்ல, சகல சாஸ்திரங்களையும் கற்று, சகல கலாவல்லியாகவும் திகழ்ந்தாள்.




**2** டும் டும் டும் டும்.....
டம டம டம டம்!




**3** செய்தி வெளியான நாளிலிருந்தே நாட்டின் பல பாகங்களிலிருந்தும் மகாவித்வான்களும், பண்டிதர்களும் இளவரசியுடன் வாதிட வந்து கூடினார்கள்.
இளவரசியின் ஆசான் அம்பரீஷன். அவன் சுதன்ம ராஜனிடம் கூறினான்.....




**4** அரசவை மண்டபத்தில் விவாதம் ஆரம்பித்தது. வாதிட வந்த விற்பன்னர்கள் எல்லோருமே இளவரசியிடம் தோற்றுப் போனார்கள். அவமானப்பட்டுத் திரும்பினார்கள்.



**5** இளவரசியின் குருவான அம்பரீஷனுக்கே, அவள் புலவர்களை அவமானப்படுத்திய விதத்தைப் பார்த்து, மனம் கொதித்தது. ஆதலால் அவர் அன்றிரவு அரசவைக் கவிவாணர்களைக் கலந்து ஆலோசித்தார்.




**6** ஒரு வடிகட்டின முட்டாளைத் தேடிக்கொண்டு அம்பரீஷன் முதலான புலவர்கள் நகரையும் தாண்டிச் சென்றார்கள்.




**7** அம்பரீஷனும் மற்ற புலவர்களும் சேர்ந்து, அடிக் கிளையை வெட்டிய வடிகட்டிய அந்த முழு முட்டாளிடம் ஆசை காட்டிப் பேசினார்கள்.
அவர்கள் அவனுக்கு அலங்காரம் எல்லாம் செய்து, பல்லக்கில் அமர்த்தி, ஊர்வலமாக நகருக்குள் கோலாகலமாக அழைத்து வந்தார்கள்.
அந்தக் காட்சியை மக்கள் வீதியின் இரண்டு புறங்களிலிருந்தும் பார்த்து ரசித்தனர்.




**8** அரசவையில்.....



9 மன்னன் திகைத்துப் போய்.....




10 அன்று இரவு.....




11 மறுநாள் அரசவையில் ஒருபுறம் இளவரசி, எதிர்ப்புறம் இந்தப் போலிக் கவி.



அடடா! கலைமகள் போன்ற நமது அரசகுமாரி 'பரம்பொருள் ஒன்றே!' என்பதைக் குறிப்பதற்காகத் தமது ஒரு விரலைக் காட்டினார்.
அதற்குப் பதிலாகக் கவிஞர் பெருமான், "பரம்பொருள் - ஜீவாத்மா, பரமாத்மா என்று இரண்டுமாகவே இருக்கிறார்" என்று தமது இரண்டு விரல்களைக் காட்டுகிறார்.

12 அரசகுமாரி மனம் மகிழ்ந்து.....




13 அரசவைப் பண்டிதர்கள் போட்ட திட்டம் பலித்துவிட்டது. அரசகுமாரிக்கும் ஆட்டுக்காரனுக்கும் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.

14 அன்று இரவு அந்தப்புரத்தில்.....



**15** இளவரசி துணுக்குற்று, பலவந்தமாக அவனை எழுப்பினாள்.




**16** நடந்ததையெல்லாம் கேட்டறிந்த வித்யாவதி தேவியின் முன்போய் கதறினாள்..... அப்போது அசரீரி கேட்டது.




**17** ஆட்டுக்காரன் அப்படியே காளி கோயிலுக்குள் நுழைந்து கதவைத் தாளிட்டுக் கொண்டான்.




**18** காளிதேவியின் அருள்பெற்ற மறுகணமே ஆடு மேய்ப்பவன் மகாகவியாக மாறி கவிமழையாகப் பொழிய... 'சியாமளா தண்டகம்' என்ற ஸ்தோத்திரம் பிறந்தது.




**19** காளிதாசனின் புகழைக் கேட்ட மன்னன் போஜராஜன் காளிதாசனுக்கு அழைப்பு அனுப்பினான்.




**20** போஜராஜன் சபையில் உலகம் போற்றும் மகாகவியாக காளிதாசன் பெரும் புகழோடு விளங்கினான். அதனால் போஜராஜனின் புகழும் பரவியது.



# அன்னமாச்சார்யா

① ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்த ஓர் ஊர் தாள்ளப்பாக்க.
அங்கு நாராயணசூரி, லக்கமாம்பா தம்பதிகளுக்கு அன்னமையா மகனாகப் பிறந்தார்.









⑤ அன்னமையாவும் அந்த பக்தர்களோடு சேர்ந்து திருப்பதிக்குச் சென்றார்.
அங்கு அவர்கள் அனைவரும் மலைமீது ஏற ஆரம்பித்தார்கள்.
ஓர் இடத்தில் அன்னமையாவை விட்டு விட்டு பக்தர்கள் கூட்டம் முன்னேறிச் சென்று விட்டது.

⑥ அன்னமையா தனிமையில் விடப்பட்டார்.
சிறிது தூரம் செல்வதற்குள் அவருக்குப் பசி காதை அடைத்தது; கண் இருண்டது. அதனால் மயங்கி விழுந்தார்.
அந்த நிலையில் அங்கு அலர்மேல்மங்கை தோன்றி அன்னமையாவின் மயக்கம் தெளிவித்தாள்.




அலர்மேல்மங்கை தந்த அமுதை அன்னமையா உட்கொண்டார்.

⑦ அதைத் தொடர்ந்து அலர்மேல்மங்கை அங்கிருந்து மறைந்தாள்.
உடனே அன்னமையாவுக்குத் தனக்கு அமுதம் தந்தது அலர்மேல்மங்கை தாயார் என்பது புரிந்தது.




அன்னமையா ‘அலர்மேல்மங்கை சதகம்’ என்ற பாடல்களைப் பாடியபடியே புஷ்கரணியை அடைந்தார்.

⑧ ஏழுமலையான் கோயில் அருகிலுள்ள புஷ்கரணியில் அவர் நீராடினார். பின்பு திருவேங்கடநாதனைத் துதித்துப் பாடினார்.




9
ஆவலுடன் வேங்கடநாதனைக் காண வந்த வருக்கு அங்கு ஒரு பெரிய ஏமாற்றம் காத்திருந்தது.
ஆ! இதென்ன சோதனை? கோயில் கதவு மூடி இருக்கிறதே! ஏழுமலையானே! மூடிய கோயில் கதவின் முன்பு இசையுடன் திருவேங்கடம் சதகம் பாடல்களைப் பாடுகிறேன்!


10
அன்னமையா பக்தியுடன் பாடியதும் கோயில் கதவுகள் தானாகவே திறந்து கொண்டன. அங்கு திருவேங்கடநாதன் காட்சியளித்தார்.


11
இதற்கிடையில் ஊரில் பெற்றோர்கள் அன்னமையாவைக் காணாததால் அங்கும் இங்கும் தேடினார்கள்.
பல இடங்களில் தேடிய பின்பு இறுதியில் அவரைத் திருப்பதியிலிருந்து தாள்ளப்பாக்கத்திற்கு அழைத்து வந்தார்கள்.


12
பெற்றோர்கள் விருப்பத்திற்கிணங்கி திருமலம்மா, அக்கலம்மா ஆகிய இரண்டு பெண்களை அன்னமையா திருமணம் செய்துகொண்டார்.


13
சாளுவ நரசிம்மராயர் என்பவர் ஓர் அரசர். அவர் அன்னமையாவைத் தன் நாட்டின் அமைச்சராக்கினார். ஒரு நாள் அரசன்....
அன்னமையா! என் பெருமைகளை விளக்கிப் பாடல்கள் எழுதி, அவற்றைத் தாங்களே இசையோடு பாடுங்கள்!
அரசே, மன்னிக்கவும் பகவானைத் தவிர என் நாவினால் மனிதர்களைப் புகழ்ந்து பாட மாட்டேன்!

(14) அரசன் அன்னமையாவின் மீது கோபம் கொண்டு அவரைச் சிறையில் அடைத்தான்.
சிறையில் அன்னமையா பகவானை நினைத்துப் பாடினார்.




அன்னமையா பாடலைப் பாடியதும் அவரது கை விலங்குகள் தானாகவே கழன்று விழுந்தன.
அதைப் பார்த்து பயந்த சிறைக்காவலர்கள், மன்னனிடம் சென்று செய்தி தெரிவித்தனர்.

(15) செய்தி அறிந்ததும் மன்னனின் கோபம் மேலும் அதிகமாயிற்று.
அவன் கோபத்துடன் சிறைச்சாலைக்குச் சென்று தானே தன் கைகளால் அன்னமையாவிற்கு விலங்கிட்டான்.
அரசன் அன்னமையாவுக்குப் பூட்டிய விலங்குகள் அரசன் முன்னாலேயே கழன்று விழுந்தன.
அதைப் பார்த்த அரசன் தன் பிழையை உணர்ந்து மன்னிப்புக் கேட்டான்.

(16)




(17)




அரசனையும் அரசியையும் ஆசீர்வதித்து
விட்டு அன்னமையா திருமலைக்குச் சென்றார்.

(18) திருமலையில் அன்னமையா நாள்தோறும் வேங்கடநாதனை மனம் குளிர வழிபட்டார்.
வேங்கடநாதன் மீது 32,000 பக்திப் பாடல்களை இயற்றினார்.

இரண்டடி ராமாயணம், வேங்கடாசல மகாத்மியம் போன்ற நூல்களையும் அவர் இயற்றியுள்ளார்

அன்னமையாவை 'அன்னமாச்சாரி' என்று பக்தர் உலகம் போற்றி வருகிறது!

# கலிக்காம நாயனார்

**1** சுந்தரமூர்த்தி சுவாமிகளின் சமகாலத்தில் பெருமங்கலம் என்ற ஊரில் வாழ்ந்தவர் கலிக்காம நாயனார். அவர் ஏயர்கோன் குடியைச் சேர்ந்தவர். அக்குடியிலிருந்து சோழப் பேரரசர்கள் சேனாதிபதிகளை நியமித்து வந்தனர்.

**2** அவரது இல்லத்திற்குத் திருவாரூரிலிருந்து ஒரு சிவனடியார் வந்தார்.




**3**




**4** இந்தச் செய்தி சுந்தரருக்கு எட்டியது.



5 திருக்கயிலையில்...




6 சிவபெருமான் திருவிளையாட்டால் கலிக்காமர் கடும் சூலை நோயினால் அவதிப்பட்டார். அப்போது சிவன் அவர்முன் தோன்றி...




7 அதன் பிறகு சிவபெருமான் சுந்தரர் முன் தோன்றி...




8




9 உதவியாளர் தடுத்தும் கேளாமல் கலிக்காமர் வாளால் குத்திக் கொண்டு இறந்தார்.

10

அதற்குள் சுந்தரர் கலிக்காமரின் வீட்டுக்கு வந்துவிட்டார்.
உடனே கலிக்காமரின் மனைவி தமது துக்கத்தை மறைத்துக் கொண்டு அவர் அறையை மூடிவிட்டு வெளியே வந்தார்.
எதுவும் நடவாதது போல் சுந்தரரை வரவேற்றார்.
சுந்தரர் கலிக்காமரை உடனே காண வேண்டும் என்றார்.




12

வேகமாக அறையில் நுழைந்த சுந்தரர் கலிக்காமரை ரத்த வெள்ளத்தில் கண்டார்.




13

கலிக்காமரின் வயிற்றில் குத்தப்பட்டிருந்த வாளை உருவினார் சுந்தரர்.
உடனே சிவனருளால் கலிக்காமர் விழித்தெழுந்தார்; சுந்தரரைச் சரியாகப் புரிந்துகொண்டார். தற்கொலைக்கு முயன்ற சுந்தரரைத் தடுத்தார்.

14




15




பிறகு இருவரும் திருப்புன்கூர் சென்று சிவபெருமானைத் தரிசித்தார்கள்.

16

திருக்கயிலையில்...




உனக்குச் சந்தேகம் அல்லது துன்பம் வரும்போதோ அல்லது நீ ஆன்ம ஞானம் பெற விரும்பினாலோ கண்ணீர் மல்க இறைவனை வேண்டு. அவர் உன்னிடமுள்ள குற்றங்களை நீக்கி, உன் மன வேதனையை அகற்றி ஞானத்தை அருள்வார்.

- அன்னை ஸ்ரீசாரதாதேவி



# குரு கோவிந்த்சிங்

1. சீக்கிய மதத்தின் ஒன்பதாவது குரு தேக் பகதூர். அவரது மகன் கோவிந்த்.

கோவிந்துக்கு ஒன்பது வயது நடந்து கொண்டிருந்தது. அப்போது அவனிடம் தன் வாளை ஒப்படைத்துவிட்டு தேக் பகதூர் கூறினார்...

குழந்தாய்! ஔரங்கசீப்பினால் நான் இறக்கப் போவது நிச்சயம்.
எனவே நீதான் நமது சீக்கிய மதத்தைக் காப்பாற்ற வேண்டும்.
கடவுள் உனக்குத் துணை புரிவார்!



தந்தையே! இந்த வாளே என் கடவுள்.
உங்கள் வாக்கை நான் நிச்சயம் காப்பாற்றுவேன்.

2. சில நாட்களில் தேக் பகதூர் ஔரங்கசீப்பினால் சிறை பிடிக்கப்பட்டார்.

தேக்பகதூர் இஸ்லாம் மதத்தைத் தழுவ மறுத்ததால் அவர் தலையைத் துண்டித்து, அவர் உடலைக் கோட்டை வாசலில் ஔரங்கசீப் தொங்க விடக் கட்டளையிட்டான்.



கோவிந்த் தன் தந்தையின் உடலை மீட்டு அதற்கு ஈமக்கடன் செய்தான்.

3. தர்மத்தை நிலைநிறுத்த என் தந்தை தன் தலையைப் பலி கொடுத்தார்.

அவரது அடிச்சுவட்டில் மனம் தளராமல் நடந்து நான் சீக்கிய மதத்தை எப்படியும் பாதுகாப்பேன்!



4. குரு கோவிந்த்சிங் வீரம் மிக்க இளைஞராக வளர்ந்தார். அவருக்குப் பதினெட்டு வயதானபோது, அவருக்கும் சுந்தரி என்ற பெண்ணுக்கும் திருமணம் செய்து வைத்தார்கள்.

அவர்களுக்கு நான்காண்டுகளுக்குப் பிறகு அஜித் என்ற மகன் பிறந்தான்.

நமது தாய்மொழியில் சம்ஸ்கிருத நூல்களையும், பாரசீக மொழி நூல்களையும் கொண்டு வர வேண்டும்.
அதன் பொருட்டு பண்டிதர்களே! நீங்கள் காசிக்குச் சென்று தேர்ச்சி பெற்றுத் திரும்புங்கள்!



5. நைனி என்ற ஊரையடுத்த குன்றின்மேல் அன்னை துர்க்கையின் அருளை வேண்டி, பல பண்டிதர்களைக் கொண்டு குரு கோவிந்த்சிங் ஆராதனை செய்தார்.

சீக்கியர்கள் ராணுவப் பயிற்சி பெற்று வீரர்களாகத் திகழ வேண்டும்.
அதற்காகவே இப்போது அன்னை துர்க்கா தேவியை வழிபடுகிறோம்.



இந்த வழிபாடு அவசியம் தேவைதான்.
உலகில் வீரர்களுக்குத்தான் மதிப்பு அதிகம் தரப்படுகிறது.

6. துர்க்கா பூஜை நான்கு மாதங்கள் நடைபெற்றது. வெளியில் சீக்கியர்கள் பெருந்திரளாகக் கூடியிருந்தார்கள்.
பூஜையின் முடிவில் குரு கோவிந்த்சிங் வெளியில் வந்தார்.
அவர் தன்னுடைய ஒரு விரலை வெட்டிக்கொண்டிருந்ததைக் குழுமியிருந்த சீக்கியர்களுக்குக் காட்டினார்.

துர்க்கா தேவிக்கு என் ஒரு விரலைக் காணிக்கையாகக் கொடுத்துவிட்டேன்.
நாட்டின் நலனுக்காக, உயிர்த்தியாகம் செய்ய வேண்டியிருக்கிறது.
உங்களில் நாட்டின் நலனுக்காக உயிரைக் கொடுப்பதற்கு யார் முன்வருகிறீர்கள்?




7. இதே போல் மேலும் நான்கு தடவை குரு கோவிந்த்சிங் கேட்டார்.
அதனால் மேலும் நான்கு பேர் உயிர்த்தியாகம் செய்வதற்கு முன் வந்தார்கள்.

குருநானக் எதையும் தியாகம் செய்யத் தயாராக முன்வந்த அங்கத் என்பவரைத் தன் சீடராகத் தேர்ந்தெடுத்தார்.
அதுபோல் இப்போது இங்கே ஐந்து தியாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள்.
இந்த ஐந்து பேரும் சேர்ந்த குழு இனி 'கால்சா' என்று அழைக்கப்படும்.



8. கால்சா என்ற குழுவே சீக்கிய மத விவகாரங்களைக் கவனிக்கும்படி குரு கோவிந்த்சிங் ஏற்பாடு செய்தார்.
கால்சா என்ற இயக்கம் மிகவும் வேகமாக வளர்ச்சியடைந்தது.
அதனால் குரு கோவிந்த்சிங் விரைவில் ஒரு பெரும் சேனையை உருவாக்கினார்.

சகோதரர்களே! நான் இனிமேல் உங்கள் குரு இல்லை; உங்களில் ஒருவன்; உங்கள் சேவகன்.
கால்சாவே இனிமேல் உங்கள் குருவாக இருக்கும்.
நமது சேனையில் எட்டாயிரம் வீரர்கள் இருக்கிறார்கள். நான்கு கோட்டைகள் கட்டப்பட்டுள்ளன.
நீங்கள் பயந்தாங்குளியான சீக்கியர்கள் அல்ல. சிங்கங்கள்!
எப்போதும் கத்தி, காப்பு, சீப்பு, மழிக்காத கேசம், உடலோடு ஒட்டிய உடை ஆகிய ஐந்து உடைமைகளோடு, 'சிங்' என்ற வீரர்களாக நீங்கள் திகழுங்கள்! ஜய் கால்சா!



ஜய் குருமகராஜ்! ஜய் கால்சா!

9. சீக்கியர்களின் எழுச்சியை அடக்க ஔரங்கசீப் கவர்னராக இருந்த வாசிர்கான் என்பவனை அனுப்பினான்.

அவன் சீக்கியர் கோட்டையை ஐந்து மாதங்கள் முற்றுகையிட்டான்.
அப்போது குரு கோவிந்த்சிங் தன் தாயிடம் கூறினார்...




10. குரு கோவிந்த்சிங்கின் தாயும் அவருடைய இரண்டு மகன்களும் தப்பிச் செல்லும்போது, ஒரு முகலாய வீரனிடம் சிக்கிக்கொண்டார்கள். அதை அறிந்த வாசிர்கான்....




11. குரு கோவிந்த்சிங் 'பாட்டியாலா' என்ற இடத்தில் பாதுகாப்பாகத் தங்கியிருந்தார்.




12. ஔரங்கசீப்பின் இளைய மகன் ஆசம் ஒரு படையுடன் வந்து கிளர்ச்சி செய்தான்.

அதனால் ஆக்ராவில் சண்டை நடந்தது.

பகதூர் ஷா குரு கோவிந்த்சிங்கின் உதவியை நாடி, ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டான்.

அந்த ஒப்பந்தத்தில் இருந்தவை...

1. இந்துக்களை மதம் மாற்றக் கூடாது.
2. கால்சா அமைப்பு முஸ்லிம்களுடன் சண்டையிடாது.
3. இந்துக்களும் சீக்கியர்களும் தங்கள் மத வழிபாடுகளைத் தடையின்றி நடத்தலாம்.
4. இந்துக்களும் சீக்கியர்களும் அதிக வரி செலுத்த வேண்டியதில்லை. சீக்கியர்களுக்கு வரிச்சலுகை தரப்படும்.
5. பசுவதை கண்டிப்பாக நிறுத்தப்படும்.

**13.** குரு கோவிந்த்சிங் உதவியால் பகதூர் ஷா வெற்றி பெற்று டில்லி சிம்மாசனம் ஏறினான்.

ஒரு நாள்...

பாதுஷா! குரு கோவிந்த்சிங்கை ஒரு முஸ்லிம் பணியாள் முதுகில் குத்திவிட்டான். அவர் இப்போது நாசிக்கில் தங்கியிருக்கிறார்.



அப்படியா! உடனே வைத்தியர்களை அங்கே அனுப்பி வையுங்கள்!

**14,** டில்லி வைத்தியர்களாலும் குரு கோவிந்த சிங்கைக் குணப்படுத்த முடியவில்லை.

அவரது முடிவு நெருங்கிக்கொண்டிருந்தது.

எனக்காக எந்தச் சடங்கும் செய்ய வேண்டாம். நாற்பது நாள் சீக்கிய வேத நூலான குரு கிரந்த்தைப் படியுங்கள்; அது போதும்.

இனி 'கிரந்த்' என்ற வேத நூலே சீக்கியர்களின் குருவாக இருக்கும்.



**15.** இவ்வாறு அறிவித்துவிட்டு, குரு கோவிந்த்சிங் நீராடி புது உடையணிந்துகொண்டு தன்னுடைய கூடாரத்துக்குள் நுழைந்தார்.

நான் தியானம் செய்யப் போவதால் யாரும் உள்ளே வர வேண்டாம்!



**16.** வெகு நேரமாகியும் குரு கோவிந்த்சிங் வெளியில் வரக் காணோம்.

ஆனால் திடீரென்று கூடாரம் நெருங்க முடியாமல் தீப்பற்றி எரியத் தொடங்கியதை வெளியில் இருந்தவர்கள் பார்த்தார்கள்.

**17.** இப்போது அதோ தெரிகிறதே ஒரு குருத்துவாரம், அதுதான் குரு கோவிந்த்சிங் இறுதியாகத் தங்கியிருந்த இடம்!



# ஸ்ரீகிருஷ்ணனும் சியமந்தகமணியும்

**1**

சத்ராஜித் என்ற மன்னன், சூரிய பகவானை வழிபட்டு வந்தான். சூரிய பகவான் தன் பக்தனான சத்ராஜித்திற்கு 'சியமந்தகமணி' என்ற மாலையைப் பரிசாகக் கொடுத்தார்.



**2**

தெய்விகச் சக்தி வாய்ந்த சியமந்தகமணியை சத்ராஜித் எப்போதும் தன் கழுத்தில் அணிந்திருப்பது வழக்கம். அதன் மகிமை காரணமாக சத்ராஜித்தின் புகழ் மேன்மேலும் வளர்ந்து வந்தது.




**3**

சத்ராஜித்துக்கு ஒரு தம்பி இருந்தான். அவன் பெயர் பிரசேனன். அவன் ஒரு சமயம் தன் அண்ணன் சத்ராஜித்திடமிருந்து சியமந்தகமணியைப் பெற்று சில நாட்கள் அணிந்திருந்தான்.

அப்போது அவன் ஒரு நாள் காட்டில் வேட்டையாடப் புறப்பட்டான்.



**4** சத்ராஜித் கொடுத்த சியமந்தகமணியுடன் பிரசேனன் காட்டில் வேட்டையாடச் சென்றான். அங்கு அவனையும், அவன் குதிரையையும் ஒரு சிங்கம் அடித்துக் கொன்றது.



இதைத் தூரத்திலிருந்து ஜாம்பவான் பார்த்தார்.

**5** பின்னர் சிங்கம், பிரசேனன் அணிந்திருந்த சியமந்தக மணியைத் தன் வாயில் கவ்வி எடுத்துக்கொண்டு ஒரு குகைக்குள் சென்றது.



சிங்கத்தை ஜாம்பவான் பின்தொடர்ந்து குகைக்குள் சென்றார்.

**6** குகையில் ஜாம்பவான் சிங்கத்துடன் போரிட்டார். அந்தப் போரில் சிங்கம் இறந்தது. ஜாம்பவான் சியமந்தகமணியைத் தான் எடுத்துக்கொண்டார்.



**7**

ஜாம்பவான் சியமந்தகமணியைத் தன் இருப்பிடத்திற்கு எடுத்துச் சென்றார். அவர் அந்த மணியை தன் மகனுக்கு விளையாடுவதற்கு விளையாட்டுப் பொருளாகக் கொடுத்தார்.

**8**

அப்போது ஸ்ரீகிருஷ்ணன் துவாரகையில் இருந்தார்.



9

ஸ்ரீகிருஷ்ணன் அரண்மனைக்கு வெளியில் வந்து பார்த்தார்.

தன்னைக் காண வந்தவர் சனீஸ்வர பகவான் என்பது அவருக்குப் புரிந்தது.




ஸ்ரீகிருஷ்ணனும், சனீஸ்வர பகவானும் எதிரும் புதிருமாக நின்று ஒருவரை ஒருவர் மௌனமாகப் பார்த்துக்கொண்டார்கள்.

சனி பகவானின் பார்வை ஸ்ரீகிருஷ்ணன் மீது பட்டது.

பின்னர் அங்கிருந்து இருவரும் பிரிந்து சென்றார்கள்.

10

காட்டிற்குச் சென்ற பிரசேனன் திரும்பி வந்து, சத்ராஜித்திடம் சியமந்தகமணியைக் கொடுக்கவில்லை.

ஆதலால் சத்ராஜித், ஸ்ரீகிருஷ்ணன் மீது சந்தேகப்பட்டான்.




'பிரசேனனைக் கொன்று கிருஷ்ணன் சியமந்தகமணியை அபகரித்துக்கொண்டான்!' என்ற வதந்தி ஊர் முழுவதும் பரவியது.

11

இந்த அவதூறு ஸ்ரீகிருஷ்ணன் காதிலும் விழுந்தது.

ஸ்ரீகிருஷ்ணன் தன்மீது விழுந்த பழியை நீக்கிக்கொள்ள விரும்பினார்.

12

ஆதலால் அவர் தன் நண்பர்கள் சிலருடன், 'பிரசேனன் எப்படி இறந்தான்' என்பதைக் கண்டுபிடிப்பதற்குப் புறப்பட்டார்.

பல இடங்களிலும் தேடிய பிறகு, ஒரு காட்டில் பிரசேனனும், அவனது குதிரையும் இறந்து போயிருந்ததை ஸ்ரீகிருஷ்ணன் கண்டார்.




13

சிங்கத்தின் காலடிச்சுவடுகளைப் பின்பற்றி ஸ்ரீகிருஷ்ணன் தன் நண்பர்களுடன் சிங்கம் சென்ற குகையை அடைந்தார்.

**14**




**15** ஸ்ரீகிருஷ்ணனும் அவரது நண்பர்களும் கரடியின் காலடிச் சுவடுகளைப் பின்பற்றி சென்று, ஜாம்பவானின் இருப்பிடத்தை அடைந்தார்கள்.

**16** ஸ்ரீகிருஷ்ணனுக்கும் ஜாம்பவானுக்கும் கடுமையான போர் நடைபெற்றது. ஒருவரை ஒருவர் கடுமையாகத் தாக்கிக்கொண்டார்கள். போரின் முடிவில் ஜாம்பவானுக்கு ஓர் உண்மை புரிந்தது...




**17** முடிவில் ஜாம்பவான் ஸ்ரீகிருஷ்ணனை வணங்கினார். ஸ்ரீகிருஷ்ணன் ஜாம்பவானை ஆசீர்வதித்தார்.

**18** ஜாம்பவான் சியமந்தக மணியை ஸ்ரீகிருஷ்ணனிடம் கொடுத்தார்.

அதோடு அவர் தன் மகள் ஜாம்பவதியையும் ஸ்ரீகிருஷ்ணனுக்குத் திருமணம் செய்து கொடுத்தார்.



'கிருஷ்ணன்தான் பிரசேனனைக் கொன்றான்'என்ற பழியும் ஸ்ரீகிருஷ்ணனை விட்டு நீங்கியது.

# மயிலாப்பூர் கற்பகாம்பாள்

**1** கயிலாயத்தில் சிவபெருமான் தனியாக அமர்ந்திருக்கிறார்.
சிறிது தூரத்தில் விநாயகரும் முருகனும் விளையாடிக்கொண்டிருக்கிறார்கள்.

**2** அங்கு பார்வதி தேவி வந்து இறைவனை வணங்குகிறாள்.




**3** உபதேசம் கேட்கும் முறையில் பார்வதி பணிவாக அமர்கிறாள்.






**5** பார்வதியின் மனம் உபதேசம் கேட்பதிலிருந்து தவறியது. அதனால் சிவன் சற்று கோபம் கொள்கிறார்.




**6** சிவன் கூறியதைக் கேட்ட விநாயகரும் கந்தனும் அங்கு ஓடி வருகிறார்கள்...




**7** அப்போது தேவி அவர்களைத் தட்டிக் கொடுத்து கூறுகிறாள்...



**8** அம்பிகை மயில் வடிவம் எடுத்து கயிலாயத்திலிருந்து தமிழ்நாடு நோக்கிப் பறந்து வருகிறாள்.

**9** தேவி புன்னை வனத்தில் மயில் வடிவத்தில் இருந்து சிவலிங்க பூஜை செய்ய ஆரம்பிக்கிறாள்.
அவ்விதம் அம்பிகை தொடர்ந்து செய்த தவம் காரணமாக, தவக்கனல் மேலே எழும்புகிறது.

**10** இந்த நிலையில் ஒரு நாள் கயிலாயத்தில் தேவர்கள் இறைவனிடம் . . .




**11** கயிலைநாதன் ஒரு வேடன் உருவத்தில், பார்வதிதேவி மயில் வடிவத்தில் சிவபூஜை செய்து கொண்டிருந்த இடத்திற்கு வந்தார்.



**12** தன்னை வேடன் கொல்ல முற்படுவதைக் கண்டு மயில் வடிவத்தில் இருந்த உமாதேவியார் . . .




**13** அடுத்த கணம் வேடன் அங்கிருந்து மறைந்தான். அவன் இருந்த இடத்தில் கையில் சூலமும், கபாலமும், மான் மழுவும் ஏந்தி சிவபெருமான் காட்சி அளித்தார்.




**14** மயில் உருவம் நீங்கிய தேவியை இறைவன் ரிஷபத்தின் மீது ஏற்றிக்கொண்டு கயிலைக்குப் புறப்பட்டார்.



**15** இன்றும் சென்னையிலுள்ள மயிலாப்பூரில் கபாலீஸ்வரரும், கற்பகாம்பாளும் பக்தர்களுக்கு அருள்மழை பொழிந்து வருகிறார்கள்.

ஆதார நூல் : மயிலை நாதமுனி முதலியார் இயற்றிய 'திருமயிலைத் தலவரலாறு.'

# பகவந்நாம போதேந்திரர்

**1** மோகன பாண்டுரங்கன் - சுகுணா தம்பதியரின் ஒரே புதல்வன் புருஷோத்தமன்.

மூவரும் ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதியாக இருந்த ஜகத்குரு விசுவாதிகேந்திரர் என்ற புகழ்பெற்ற ஆத்ம போதேந்திர சரஸ்வதி சுவாமிகளைத் தரிசிக்க வந்தனர்.




**2**




**3** புருஷோத்தமன் நல்ல சீடனாக குருவிடம் சாஸ்திரம் பயின்றான். அவனுடன் ஞானஸாகரன் என்ற மாணவனும் படித்து வந்தான்.

சிறிது காலத்திற்குப் பிறகு குருநாதர் காசி யாத்திரை சென்றார். இரண்டு நண்பர்களும், ஆசிரமத்திலேயே தங்கி சாஸ்திரங்களை ஆழ்ந்து கற்றார்கள்.

4 சில வருடங்கள் கழிந்தன...




5 ஞானஸாகரன், விதிவசத்தால் வழியில் இறந்துவிட்டான். புருஷோத்தமன் மட்டும் தனியாக காசி சென்று குருநாதரைச் சந்தித்து நடந்த விவரத்தைக் கூறுகிறான்.

6




7




8 போதேந்திரர் பூரியில் லக்ஷ்மி தரகவியின் மகன் ஜகந்நாத பண்டிதர் வீட்டிற்குச் சென்றார். இரவு நேரமாகிவிட்டதால் கதவைத் தட்டாமல் திண்ணையில் அமர்ந்து தியானம் செய்தார். அப்போது அங்கு ஒரு தம்பதியர் வந்து கதவைத் தட்டினர்.



**10** உன் மனைவியை
மூன்று முறை ''ராம! ராம! ராம!'' என்று சொல்லச் சொல். பிறகு நீ அவளுடன் சேர்ந்து வாழலாம்.




வீட்டின் உள்ளிருந்து பண்டிதரின் தாயார் பண்டிதரை அவ்வாறு கடிந்துகொண்டார்.

**11** அப்போது இருளிலிருந்து போதேந்திரர் வெளிப்பட்டார்.

'நாராயணா, நாராயணா.'




இருக்கிறது சுவாமி! என் தந்தை இயற்றிய பகவந் நாம கௌமுதியே ஆதாரம். இதோ, அதை இப்போதே கொண்டு வருகிறேன்.

**12** ஜகந்நாத கவி உடனே அந்த நூலை எடுத்து வந்து கொடுத்தார். போதேந்திரர் அதை ஊன்றிப் படித்தார்.

மகனே, சாஸ்திரம் உண்மையே! ஆனால் சீதாதேவியையே பழித்த உலகம் இதை நிரூபணமின்றி ஏற்குமா?

ஆதலால், உன் மனைவி இதே உடையுடன் பூரி ஜகந்நாதர் குளத்தீர்த்தத்தில் ராம நாமத்தைச் சொன்னவாறு ஸ்நானம் செய்யட்டும். புனித நீரில் மூழ்கி எழுந்ததும் மங்களகரமாக வந்தால், அவள் புனிதமடைந்துவிட்டாள் என்பதை உலகம் அறிய ஏற்போம்.



**13** மறுநாள் குளக்கரையில் ஊர்மக்கள் திரண்டார்கள். ராமநாமத்தைச் சொல்லியபடியே அந்தப் பெண் குளத்தில் மூழ்கி, சுமங்கலியாக வெளிப்பட்டாள்.




**14** காஞ்சிக்குத் திரும்பிய போதேந்திரர் ராமநாம மகிமை பற்றி எட்டு சிறந்த நூல்களை இயற்றினார்.

காசியிலிருந்து திரும்பி வந்த குருநாதர் அவற்றைப் படித்துப் பாராட்டினார். போதேந்திரரை ஜகத்குரு பீடத்தில் அமர்த்தி பட்டாபிஷேகம் செய்து வைத்தார்.




**15** குருநாதர் சமாதியான பிறகு போதேந்திரர் கிராமம் கிராமமாகச் சென்று மக்களிடம் ராமநாம மகிமையைப் பிரசாரம் செய்தார்.

**16** பல்வேறு மக்களுக்கு பகவந் நாமத்தை அள்ளி வழங்கிய போதேந்திரர் இறுதியில் காவிரிக்கரையில் கோவிந்தபுரத்தில் ஜீவசமாதியில் அமர்ந்துவிட்டார்.





# பண்டாசுரனை அழித்த ஸ்ரீ லலிதாம்பிகை

**1.**




**2.** பிரம்மன் தன் கமண்டல நீரை மன்மதன் எரிந்த சாம்பல் குவியல் மீது தெளித்தார்.




பிரம்மதேவரின் கமண்டல நீர் மன்மதன் எரிந்த சாம்பல் மீதுபட்டது. அதிலிருந்து மன்மதனுக்குப் பதிலாக ஒரு கொடிய அசுரன் தோன்றினான்.

**3.**



4. அந்த அசுரன் கடுந்தவம் இயற்றி பல வரங்கள் பெற்றான்.
அவனை அசுர குருவாகிய சுக்கிராச்சாரியார் பாராட்டினார்.




சுக்கிராச்சாரியார் அசுரனை 'பலே! (பண்ட்)' என்று பாராட்டியதால், அந்த அசுரன் பண்டாசுரன் என்று பெயர் பெற்றான்.

5. இந்திரன், தேவர்களின் குருவான பிரகஸ்பதியிடம் சென்று முறையிட்டான்...




6. பிரகஸ்பதியின் யோசனைப்படி தேவர்கள் தேவிக்குரிய யாகங்களைச் செய்தார்கள். யாக குண்டத்திலிருந்து லலிதாம்பிகை தோன்றினாள்.




7. லலிதாம்பிகையின் 'ஸ்ரீசக்கர ரதம்' என்ற தேர் தயாராக நிற்கிறது.
அவள் தன் படைவீரர்களுக்கு கட்டளையிட்டாள்...



**8.** அரசவையில்
பண்டாசுரன் அமர்ந்திருக்கிறான்.
போர்க்களத்திலிருந்து ஒரு தூதன்
வந்து கூறுகிறான்:




**9.** விசுக்கிரன் பண்டாசுரனின் அரசவைக்கு
வந்தான்.




**10.** விசுக்கிரன், 'ஜயவிக்கின யந்திரம்' என்ற யந்திரத்தை தேவியின் படைகள் தங்கியிருந்த
படைவீட்டில் மறைத்து வைத்தான்.
அதனால் அடுத்த நாள் போரில் லலிதாம்பிகையின் படைகள் பயந்துபோய் பின் வாங்கின.

**11.** லலிதாம்பிகையின் முன்பு விநாயகர்
தோன்றினார்.




**12.** கணபதியின் துதிக்கை நீண்டு சென்றது.
அதில் அகப்பட்ட ஜயவிக்கின
யந்திரம் தூளாயிற்று.



13.




14. சூன்ய நகரம் கொழுந்துவிட்டு எரிந்தது.




15. பண்டாசுரனை லலிதாம்பிகையின் அஸ்திரம் கொன்றது.
தேவி வெற்றி வீராங்கனையாக அமர்ந்திருக்கிறாள்.



# ஸ்ரீநாராயண பட்டத்திரியின் குருபக்தி



**1** சுமார் 400 வருடங்களுக்கு முன்பு கேரளாவில் மேப்பத்தூரில் ஸ்ரீநாராயண பட்டத்திரி பிறந்தார். சிறுவயதிலேயே பல கலைகளையும் கற்று சாஸ்திர ஞானமும் பெற்றார்.

உனக்கு எல்லா விபக்திகளும் (இலக்கண வேற்றுமைகள்) தெரியுமா?

குருவே, 'கிருஷ்ண' என்ற சப்தத்திலேயே எல்லா விபக்திகளும் வந்து விடுகின்றனவே.

பட்டத்திரி எல்லா விபக்திகளும் வரக்கூடிய ஒரு சுலோகத்தைக் கூறினார். அதன் முடிவில்...

**2** ஹே கிருஷ்ணா! உன்னிடத்தில் எனக்கு அசையாத பக்தி இருக்கட்டும்.

ஆஹா! ஒரே சுலோகத்தில் அனைத்து வேற்றுமை உருபுகளையும் சொல்லிவிட்டாயே! இனி நான் உனக்குக் கற்பிக்க என்ன உள்ளது?

எல்லாம் தங்கள் அருள்தான் குருநாதா. ஒரு சிறந்த காவியத்தைப் படைக்கத் தங்கள் கிருபை வேண்டி பிரார்த்திக்கிறேன்.

உனக்குப் பரிபூரண ஆசிகள். பிஷாரடி சிறந்த காவியகர்த்தா. அவரைச் சென்று பார். எல்லாம் நல்லபடியே நடக்கும்.

**3** அதன்படி பட்டத்திரி பிஷாரடியிடம் சென்று இலக்கணம் கற்பிக்குமாறு வேண்டினார்.

மகனே, நீயோ மேற்குலத்தவன். உனக்கு நான் சொல்லித் தருவது தகாது.

தாங்கள் அவ்வாறு சொல்லக் கூடாது. தங்களைத்தான் நான் குருவாக ஏற்றுள்ளேன்.

என்ன செய்வது? நீ மிகப் பிடிவாதமாகவும் ஆர்வத்துடனும் இருக்கிறாய். சரி, உனக்குப் பாடம் நடத்தச் சம்மதிக்கிறேன். எல்லாம் குருவாயூரப்பன் விட்ட வழி.

**4** ஒரு திரைக்குப் பின்னால் இருந்து கொண்டு பிஷாரடி பாடம் நடத்தினார். பட்டத்திரி மிகுந்த சிரத்தையுடன் கற்றுத் தேறித் தம் ஊருக்குச் சென்றார்.

**5** சில காலம் கழித்து பட்டத்திரி குருவாயூரப்பனைத் தரிசிக்கச் சென்றார். அப்போது ஒருவர் அவரைத் தேடி வந்தார்.




**6** பிஷாரடி படுத்த படுக்கையில் இருந்தார்.




**7**




பிஷாரடி பார்த்துக் கொண்டிருக்கும்போதே, பட்டத்திரி அவசர அவசரமாகக் கையில் நீரும் அக்ஷதையும் எடுத்துக் கொண்டு பிஷாரடியின் நோயைத் தம் மேல் ஆவாஹனம் செய்து கொண்டார். அதனால் அந்த நோய் பிஷாரடியை விட்டு நீங்கி பட்டத்திரியை உடனே பற்றிக் கொண்டுவிட்டது.

8




உன் வாயால் குருவாயூரப்பன் பாடல்களைக் கேட்க விரும்புகிறான் போலும். அதற்கு முதலில் நீ சிறந்த பக்திமானும் கவியுமான துஞ்சத்து ராமானுஜ எழுத்தச்சனின் ஆசியைப் பெற்று வா.

9

அதன்படி சென்றதில், 'மத்ஸ்ய அவதாரத்திலிருந்து தொடங்கிப்' பாடச் சொன்னார் எழுத்தச்சன். பிறகு குருவாயூரில் நாராயண சரஸில் நீராடினார் நாராயண பட்டத்திரி. குருவாயூரப்பன் சன்னதியில் ஸ்ரீமந் நாராயணீயத்தை இயற்ற ஆரம்பித்தார் அவர். அதற்கு முன்...




ஸ்ரீகிருஷ்ணனிடம் பாகவதச் சம்பவங்களைக் குறித்து, 'இவ்விதம் நடந்ததா? இது சாத்தியமா?' என்று பட்டத்திரி கேட்டதற்கெல்லாம், ஸ்ரீகிருஷ்ணன் 'ஆம்' என தலையை ஆட்டி அங்கீகரித்து வந்தார்.

10

நாராயண பட்டத்திரி சுலோகங்களை இயற்றும் போது ஸ்ரீநரசிம்மாவதார படலத்தில், குருவாயூரப்பனைப் பார்த்து 'ஹே ப்ரஹ்லாத ப்ரியா' என்று பாடினார். ஆனால் குருவாயூரப்பன் பதிலளிக்கவில்லை. நாராயண பட்டத்திரி மிக வருந்தினார்.



11

அப்போது, 'நான் பிரகலாதனிடம் மட்டும் அன்பு வைத்தவன் அல்ல. சாதுக்கள் அனைவருமே என் அன்பர்கள்தான்' என்று ஓர் அசரீரி கேட்டது. உடனே நாராயண பட்டத்திரிக்கு ஸ்ரீநரசிம்மாவதார தரிசனம் கிடைத்தது. அவர் பரவசமடைந்தார்.



**12** பட்டத்திரி பக்தி சொட்டச் சொட்ட 1,034 சுலோகங்களில் ஸ்ரீமந் நாராயணீயத்தை இயற்றினார். 99-வது தசகத்தில் தமது நோயை நீக்கிடுமாறு பிரார்த்தனை செய்தார். அந்தக் கணத்திலேயே குருவாயூரப்பன் வைகுண்டவாசியாக அவருக்குக் காட்சியளித்தார்.
அந்தக் காட்சியைக் கடைசி சுலோகமாகப் பாடியதும் அவரைப் பற்றியிருந்த நோய் முற்றிலுமாக அகன்று விட்டது!



**13** நோய் நீங்கிய பட்டத்திரி குருவாயூரப்பனுக்குப் பல வகையிலும் சேவையாற்றி வந்தார். சில காலம் கழித்து ஒரு பக்தர் அவரை வந்து சந்தித்தார்.



ஐயா, பிஷாரடி சுவாமிகள் தங்களை மிகவும் அவசரமாகக் காண விரும்புகிறார்.

**14** பட்டத்திரி உடனே புறப்பட்டார். பிஷாரடி மரணப் படுக்கையில் இருந்தார். ஸ்ரீபரமேஸ்வரனைக் குறித்து அவர் கீழ்க்கண்ட பாடலைப் பாடினார்.



'என் சரீரம் ஓய்ந்து வருகிறது. நெஞ்சில் கபம் கட்டிவிட்டது. வாய் பேச முடியவில்லை. கண் செருகிவிட்டது. மூச்சு மெல்ல மெல்ல அடங்கி வருகிறது. இந்தச் சமயத்தில் காத்யாயனியின் பிராணநாதனான ஸ்ரீபரமேஸ்வரன் கருணையுடன் என்னிடம் வந்து சம்சார பயத்திலிருந்து கரையேற்றுகிற ராமநாம தாரகத்தை என் காதில் சொல்ல வேண்டும்'.

**15** இந்தப் பாடலின் கடைசி வரியில் 'தாரகம்' என்ற சொல்லைச் சொல்லிக் கொண்டிருந்தபோது பிஷாரடியின் வாய் குழறியது. அப்போது அங்கு வேகமாக நுழைந்த பட்டத்திரி 'தாரகம்' என்று கூறிப் பாடலை நிறைவு செய்தார்.
இதைக் கேட்ட பிஷாரடி கண்ணீர் வடித்து அவரை ஆசீர்வதித்து இறைவனடி சேர்ந்தார்.



**16** மற்றவர்களுக்காக நாம் மேற்கொள்ளும் மிகக் குறைந்த அளவு உழைப்பும் நமக்குள்ளே இருக்கும் சக்தியைத் தட்டி எழுப்புகிறது...
மற்றவர்களுடைய நன்மையைக் குறித்துச் சிறிதளவு நினைப்பதும்கூட சிங்கத்திற்குச் சமமான ஆற்றலை நமது இதயத்திற்குப் படிப்படியாகத் தருகிறது.
-சுவாமி விவேகானந்தர்



# துளசிதாசர்

**1** உத்திர பிரதேசத்தில் அலகாபாத்திற்கு அருகிலுள்ள ஊர் ராஜ்பூர்.
அங்கு வாழ்ந்து வந்த ஆத்மாராம், ஹுலஸிபாய் தம்பதிகள் தங்களுக்கு ஆஞ்சநேயரின் அருளால் பிறந்த குழந்தைக்கு "ராம் போலா" என்று பெயரிட்டார்கள்.
குழந்தை பிறந்த சில நாட்களில் ஹுலஸிபாய் காலமானார்.
ஆத்மாராம் குழந்தையை அதன் பாட்டியின் பொறுப்பில் விட்டு விட்டு எங்கோ சென்றுவிட்டார்.




**2** பாட்டியின் அரவணைப்பில் குழந்தை வளர்ந்தான்.
நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு பாட்டியும் இறந்துவிட்டாள்.
சிறுவன் ராம்போலா சாப்பாட்டிற்கு ஊரார் தயவை நாட வேண்டிய நிலை ஏற்பட்டது.
அவன் ஆஞ்சநேயரையே நம்பி கோயிலில் தங்கிவிட்டான்.




**3** நரஹரிதாசர் என்பவர் ஒரு சமயம் ராஜ்பூர் வந்தார்.
அவர் ஆஞ்சநேயர் கோயிலில் புராணச் சொற்பொழிவுகளும், ராம பஜனையும் செய்தார்.
அவற்றில் ராம்போலா ஆர்வத்துடன் கலந்துகொண்டான்.




**4**






**5** நரஹரிதாசர் புராணச் சொற்பொழிவுகளுக்குச் செல்லும் இடங்களுக்கெல்லாம் ராம்போலாவும் உடன் சென்றான்.
நரஹரிதாசர் புராணச் சொற்பொழிவை ஆரம்பிப்பதற்கு முன்பு, ராம்போலா ராம பஜனை செய்வது வழக்கம்.
இப்போது அவன் பெயர் 'துலாராம்' என்று ஆயிற்று.

**6** துலாராம் பதினான்கு ஆண்டுகள் நரஹரிதாசருடன் இருந்து வடமொழி, வேதம், உபநிடதம், தத்துவம், புராணம் ஆகியவற்றில் நல்ல தேர்ச்சி பெற்றார்.
குருவைப் போலவே மிகவும் நல்ல முறையில் புராணச் சொற்பொழிவுகள் செய்தார்.




**7** இளமை, அழகு, அறிவு, நல்ல வருமானம், அழகிய மனைவி ஆகியவற்றால் துலாராமின் மனம் கடவுள் பக்தியில் ஈடுபடாமல் மனைவியையே சுற்றிக்கொண்டிருந்தது.
ரத்னாவளியை அவர் பிறந்த வீட்டுக்கும் அனுப்ப விரும்பவில்லை.

**8** ஒரு நாள் துலாராம் கதாகாலட்சேபம் செய்வதற்காக வெளியூர் சென்றார்.
அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி ரத்னாவளியின் சகோதரர், அவளை இரண்டு நாட்களுக்கு ஊருக்கு அழைத்துச் செல்ல விரும்பினார்.




**9** ரத்னாவளி தன் தாய் வீட்டுக்குச் சகோதரனுடன் சென்ற பிறகு, துலாராம் வந்தார்.
இரவு வந்ததும் மனைவி இல்லாத வீட்டில் துலாராமுக்கு இருக்கவே பிடிக்கவில்லை.
ஆதலால் அவர் மனைவியைப் பார்ப்பதற்கு அப்போதே புறப்பட்டார்.

**10** அன்றிரவு ஒரே மழை. ஊரே வெள்ளக்காடாக இருந்தது. கங்கையில் வெள்ளம் கரைபுரண்டோடியது.

ஓடக்காரா! ஓடத்தை எடு. நான் அவசரமாக மறு கரைக்குப் போக வேண்டும்!

சாமி! என்னால் முடியாது. காற்று வேறு பலமாக அடிக்கிறது...

**11** மனைவியைப் பார்க்க வேண்டும் என்று துலாராமின் மனம் தவிதவித்தது. அதனால் அவர் கங்கையில் குதித்து நீந்தி மறுகரையை அடைந்தார். துணியைக் கூடப் பிழியாமல் ரத்னாவளியின் வீட்டுக்குச் சென்று கதவைத் தட்டினார்.

யார் இந்த நேரத்தில்? நீங்களா? இந்த மழையிலும் வெள்ளத்திலும் எப்படி வந்தீர்கள்?

நீ இல்லாமல் என்னால் வீட்டில் தனியாக இருக்க முடியவில்லையே!

ஆ! இது என்ன பைத்தியக்காரத்தனம்? நீங்கள் என்மீது வைத்த மோகத்தில் ஒரு சிறிது அந்த ஸ்ரீராமர் மீது பக்தி வையுங்கள். அதனால் பிறவித்துன்பத்திலிருந்து விடுபடுவீர்கள்!

**12** மனைவி கூறிய சொற்கள் துலாராமின் கண்களைத் திறந்தன. அதனால் அவர் துளசிதாசர் ஆனார்.

என் கண்களை மூடியிருந்த திரை அறுந்துவிட்டது. மோகம் என்னை விட்டு நீங்கியது. இனிமேல் ஸ்ரீராமபிரானின் புகழைப் பாடுவேன். ராம பக்தியைப் பரப்புவேன்.



**13** துளசிதாசர் மக்கள் பேசும் மொழியில் பாடல்கள், கதைகள் இயற்றிப் பாடினார். அவர் காசிக்குச் சென்றார்.

**14** ‘ஆஞ்சநேயர் மூலமாக ஸ்ரீராமரின் தரிசனம் பெற வேண்டும்’ என்ற எண்ணம் துளசிதாசருக்குத் தோன்றியது.
அவர் தினந்தோறும் காசி விசுவநாதரை வழிபட்ட பிறகு, வழியிலுள்ள ஒரு மரத்தின் வேரில் நீரூற்றுவது வழக்கம்.
அப்படி அவர் ஒரு நாள் செய்தபோது பிரம்மராட்சசன் அவர் முன்னால் தோன்றி.....




தினமும் நீங்கள் ஸ்ரீராமரைப் பற்றிக் கதா காலட்சேபம் செய்ய ஆரம்பிப்பதற்கு முன்பு, வயதான கிழவர் ஒருவர் வந்து உட்காருகிறார்.
கதை முடிந்து எல்லோரும் சென்ற பிறகே அவர் அங்கிருந்து செல்கிறார்.
அவர்தான் ஆஞ்சநேயர்.

**15** துளசிதாசர் மறுநாள் ஸ்ரீராமர் கதையைச் சொல்லி முடித்ததும் கிழவரின் பின்னால் சென்றார்.
கிழவரும் நகரத்தை விட்டுக் காட்டுக்குள் சென்றார்.
துளசிதாசர் ஓடிச் சென்று கிழவரின் கால்களைப் பற்றிக் கொண்டார்.




**16** கிழவர் தன் சுய உருவத்தில் ஆஞ்சநேயராகத் தரிசனம் தந்தார்.




**17** துளசிதாசருக்கு அயோத்தியில் ஸ்ரீராமரின் தரிசனம் கிடைத்தது.
அவர் காசிக்குத் திரும்பி வந்து ‘ராமசரித மானஸ்’ என்ற பெயரில் ராமாயணம் எழுதினார்.
அவர் எழுதிய துளசி ராமாயணம் இன்றும் மக்களிடையே மகத்தான செல்வாக்குடன் விளங்கி வருகிறது.

# குங்குலியக் கலய நாயனார்

**1** திருக்கடவூர் திருத்தலத்தில் அன்னை அபிராமியும், ஐயன் அமிர்தகடேசுவரரும் எழுந்தருளி அருள் புரிந்து வருகிறார்கள்.
அவர்களுக்கு நாள்தோறும் குங்குலியம் வழங்கும் பணியைக் கலயனார் செய்து வந்தார்.



**2** பல ஆண்டுகளாக நடந்து வந்த இந்தத் திருத்தொண்டுக்கு ஒரு சமயம் சோதனை ஏற்பட்டது.
கலயனாரின் குடும்பத்தில் வறுமை தலைகாட்டத் தொடங்கியது.




**3** நாளுக்கு நாள் வறுமையின் கொடுமை அதிகரித்தது.
எனவே கலயனார் வெள்ளிப் பாத்திரங்களையும், மாடு கன்றுகளையும் விற்றார்.



**4** முடிவில் தனக்குச் சொந்தமான நிலத்தையும் விற்று, எப்போதும் போல் இறைபணியைச் செய்து வந்தார்.



**5** கலயனாரின் மனைவி ஒரு முடிவுக்கு வந்தாள். தாலிச்சரட்டிலிருந்து மாங்கல்யத்தைக் கழற்றி எடுத்து, அதற்குப் பதிலாக மஞ்சளைக் கட்டிக்கொண்டாள்.




**6** வேறு வழியின்றி, கலங்கிய கண்களோடு கலயனார் புறப்பட்டார்.




**7** திருமாங்கல்யத்துடன் வீதியில் சென்ற கலயனார் ஆலய கோபுரத்தைப் பார்த்தார். 'ஆகா! இன்று இறைவனுக்கும் இறைவிக்கும் குங்குலியம் அனுப்பவில்லையே! இன்று சோமவாரம் ஆயிற்றே!' என்று நினைத்தார். அப்போது ஒரு வணிகன் குங்குலியப் பொதியுடன் வந்தான். அதைப் பார்த்ததும், கலயனார் பசியால் வாடும் மனைவி மக்களை மறந்தார்.




**8**



9 அபிராமிவல்லியின் சந்நிதியில் குங்குலிய தூபம் போட்டபடி.....




10 குங்குலியத் திருப்பணியைச் செய்து முடித்த மகிழ்ச்சியில் கலயனார் கோயில் மண்டபத்தில் படுத்து, அப்படியே உறங்கிவிட்டார்.




11 அந்தச் சமயத்தில் இறைவனும் இறைவியும் கலயனார் வீட்டில் அஷ்ட ஐசுவரியங்களையும் பொழிந்தனர்.




12 உறக்கம் கலைந்து, பதறியடித்துக் கொண்டு கலயனார் வீடு திரும்பியபோது.....



**13** இந்த விஷயம் ஒரு நொடியில் ஊர் முழுவதும் பரவியது. ஊர்ப் பிரமுகர்கள் கோயிலிலே கூடினார்கள். ஆலயத்தில் ஆராதனைகள் நடந்தன.




**14** திருப்பனந்தாள் என்ற தலத்திலே ஒரு பக்தைக்காக சிவலிங்கப் பெருமான் தம் திருமேனியைச் சற்றுச் சாய்த்துக் கொடுத்தார்.
சோழ மன்னன் அந்தச் சிவலிங்கத்தை நிமிர்த்தி நிறுத்த முயன்றான்; யானைகளைக் கொண்டும் இழுத்துப் பார்த்தான்; என்ன முயன்றும் முடியவில்லை.



**15** திருப்பனந்தாளுக்குச் சென்ற கலயனார் அங்கு சாய்ந்திருக்கும் சிவலிங்கப் பெருமானை வழிபட்டார்.
அவர் ஒரு தாம்புக் கயிற்றைப் பூச்சரத்தால் சுற்றி ஒரு முனையை சிவலிங்கத்தைச் சுற்றிக் கட்டினார்; மறுபுறத்தைத் தம் கழுத்தில் கட்டிக்கொண்டு சிவலிங்கத்தை நிமிர்த்த முயன்றார்.




**16** அடுத்த கணமே சிவலிங்கத்தின் சாய்ந்த நிலை நேராகியது.
சோழ மன்னன் கலயனாருக்குப் போதிய செல்வத்தை ராஜமரியாதையுடன் அளித்து திருக்கடையூருக்கு அனுப்பி வைத்தான்.



# ஜடபரதகர்

**1** ரிஷபதேவர் என்ற அரசருக்கும், இந்திரனின் மகள் ஜயந்திக்கும் பிறந்தவர் பரதர்.
அவர் பஞ்சஜனி என்பவளைத் திருமணம் செய்துகொண்டார்.
பரதர் தன் மகன்களிடம் அரசாட்சியை ஒப்படைத்து விட்டு, 'புலஹாசிரமம்'
சென்று தியானத்தில் ஈடுபட்டார்.



**2** அவர் ஒரு நாள் கண்டகி நதியில் குளித்து முடித்து ஜபம் செய்து கொண்டிருந்தார்.
அங்கு கருவுற்றிருந்த ஒரு பெண் மான் வந்து நதியில் தண்ணீர் குடித்தது.
அப்போது தூரத்தில் எங்கோ சிங்கத்தின் கர்ஜனை கேட்டது.

**3** சிங்கத்தின் கர்ஜனையைக் கேட்டு பயந்த மான் நதியை வேகமாகத் தாண்டுகிறது...




**4** பரதர் கருணை மிகுதியால் சிசு மானைக் காப்பாற்றினார்.
அதை வளர்ப்பதிலேயே கவனம் செலுத்தினார்.
அதனால் அவரது தவ வாழ்க்கை பெரிதும் பாதிக்கப்பட்டது.

**5** சில சமயங்களில் அவர் மானைக் காணாவிட்டால்...




மான் ஆசிரமம் திரும்பும் வரையில் அதைப் பற்றியே நினைத்துக் கவலைப்பட்டுக்கொண்டிருப்பார். அதன் வருகையை எதிர்பார்த்துக் காத்திருப்பார்.

**6** அவர் தமது இறுதி காலத்தில் மானை நினைத்துக்கொண்டே உயிர் துறந்தார். அதனால் அவர் அடுத்த பிறவியில் ஒரு மானாகப் பிறக்க வேண்டிய நிலை ஏற்பட்டது.

மானாகப் பிறந்த நிலையிலும் — அவர் முன்பு செய்த தவம் காரணமாக — அவருக்கு முற்பிறவியின் நினைவிருந்தது.

அதனால் பழைய புலஹாசிரமத்திற்கே சென்று, அங்கிருந்த ரிஷிகளுடன் ஒரு மான் வாழ வேண்டிய காலம் வரையில் வாழ்ந்து மான் உடலை நீத்தார்.



**7** அடுத்த பிறவியில் பணக்கார அந்தணர் ஒருவருக்கு பரதர் இளைய மகனாகப் பிறந்தார். இந்தப் பிறவியிலும் அவருக்குத் தான் அரசராக இருந்தது, தவ வாழ்க்கை வாழ்ந்தது, மானை வளர்த்தது, மானாகப் பிறந்தது போன்றவை நினைவில் இருந்தன.

நான் இந்தப் பிறவியில் யாரிடமும் பேசாமல் மௌனமாக இருந்து, இறைவன் நினைவுடனேயே வாழப் போகிறேன்.
எந்த உலக ஆசையும், பற்றும் ஏற்படாமல் வாழப் போகிறேன்!
என்னுடைய ஆன்மிக வாழ்க்கைக்கு மற்றவர்களால் இடையூறு ஏற்படக் கூடாது.
ஆகவே மற்றவர்கள் என்னை, 'இவன் ஒரு பைத்தியம், முட்டாள், ஜடம்' என்று நினைக்கும் வகையில் நடந்துகொள்ளப் போகிறேன்.



மற்றவர்களிடம் அதிகம் பழகாமல் அவர் தனிமையில் இறைவன் நினைவில் இருந்து வந்தார்.
அவருடைய உண்மையான மனநிலையை அறியாத மக்கள் அவரை ஒரு ஜடம் என்றே நினைத்தார்கள்.

**8** ஒரு சமயம் திருடர்களின் தலைவன் ஒருவன், காளிதேவிக்கு நர பலியிட்டு பிள்ளை வரம் பெற விரும்பினான்.
அவனது கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் பரதரைத் தங்கள் தலைவன் முன் கொண்டுபோய் நிறுத்தினார்கள்.



**9**




**10** பரதரை காளிதேவியின் முன்பு கொண்டு வந்து நிறுத்தினார்கள். அவர் தலையைத் திருடர்கள் வெட்ட வந்தார்கள். அந்த நிலையிலும் பரதர் உணர்ச்சியற்று அசையாமல் ஜடம் போல இருந்தார்.



**11** பரதர் ஒரு பூரண ஞானி. அவரைத் திருடர்கள் தனக்குப் பலியிட முற்பட்டதைக் கண்டு காளிதேவி கோபம் கொண்டாள். எனவே அவள் அங்குள்ள திருடர்களின் தலைகளைப் பந்தாடி பரதரை விடுவித்தாள்.



**12** பரதரின் அண்ணிகளும், சகோதரர்களும் பரதரை மிகவும் கொடுமைப்படுத்தினார்கள்.



**13** பரதர் கோபமோ, வெறுப்போ இல்லாமல் யார் என்ன வேலை கொடுத்தாலும் செய்வார்.
ஒரு நாள் அவர் வேலைகளை முடித்துவிட்டு ஒரு மர நிழலில் ஓய்வெடுத்துக்கொண்டிருந்தார்.
அப்போது அந்த வழியாக ரகுகணன் என்ற அரசன் கபில முனிவரிடம் ஞான உபதேசம் பெறுவதற்காகப் பல்லக்கில் சென்றுகொண்டிருந்தான்.




**14** பரதர் மறுப்பு எதுவும் சொல்லாமல் பல்லக்கைத் தூக்கிச் சென்றார்.
அவர் தரையில் இருந்த புழு, பூச்சிகள் மீது தன் கால் படாமல் இருக்கும் பொருட்டு அவற்றைத் தாண்டி தாண்டிச் சென்றார்.
ஆதலால் பல்லக்குச் சீராகச் செல்லாமல் மேலும் கீழும் ஆடியது.




**15** அரசன், பரதரைக் கடுமையாகத் திட்டினான்.
ஆனால் பரதர் பதில் எதுவும் சொல்லாமல் மௌனமாகவே பல்லக்கைத் தூக்கிச் சென்றார்.




**16** பிறந்ததிலிருந்து அது வரையில் யாரிடமும் பேசாமல் இருந்த பரதர், முதல் முறையாக வாய் திறந்து ரகுகணனிடம் பேசினார்.




**17** பரதர் தொடர்ந்து ஆத்ம தத்துவம் குறித்து பேசினார்.
அதைக் கேட்ட மன்னன்...




பரதர், ரகுகணனுக்குச் செய்த ஆத்ம தத்துவம் குறித்த உபதேசங்கள் பாகவதத்தில் இடம் பெற்றுள்ளன.
பரதர் ஜடம் போன்று இருந்ததால் அவருக்கு 'ஜடபரதர்' என்ற பெயர் ஏற்பட்டது.

# திருமழிசை ஆழ்வார்

1 திருமழிசை ஆழ்வார் காஞ்சிபுரத்தைச் சேர்ந்த திருவெ:.கா என்னும் தலத்தில் தங்கியிருந்தார்.
அங்கே அவருக்குக் கணிகண்ணன் என்ற சீடர் தொண்டு புரிந்து வந்தார்.




2 திருமழிசைப் பிரானின் பெருமையைக் கிழவி ஒருத்தி கேட்டறிந்தாள்.
அவள் திருக்கோயிலில் அவர் இருந்த இடத்தை நாள்தோறும் கூட்டிப் பெருக்கிச் சுத்தம் செய்து கோலமிட்டுத் தொண்டு புரிந்து வந்தாள்.



3 அந்தக் கிழவியின் தொண்டைக் கண்டு மகிழ்ந்த திருமழிசை ஆழ்வார்.....




4 ஒரு நாள் காஞ்சியை ஆண்ட பல்லவ மன்னன் யானை மீது பவனி வந்து கொண்டிருந்தான்.
அதைப் பேரழகியாக மாறிய இளமங்கை மேல்மாடத்தில் நின்று வேடிக்கைப் பார்த்தாள்.
அப்போது மன்னன் அவளைக் கண்டான்.




5 மன்னன் பிறகு தூதர்கள் மூலம் அவள் சம்மதம் பெற்று அவளைத் திருமணம் செய்து கொண்டான்.
சில ஆண்டுகளுக்குப் பிறகு......



6 மன்னன் அந்தக் கணிகண்ணனை அழைத்து வரச் செய்து, அவரை வரவேற்று உபசரித்தான்.




7 அதனால் என்ன? நீங்களே குருவின் திருவருளைப் பூரணமாகப் பெற்றவராயிற்றே. தங்கள் வாயால் நான் இளமை பெறும்படி தாங்கள் ஒரு பாடலைப் பாடலாமே!




8 "நாடாளும் மன்னர்கள் நாராயணின் அம்சம் போன்றவர்கள் ஆயிற்றே! அதனால் என்னைப் பற்றிப் பாடுவதில் தவறு என்ன?" என்று மன்னன் கேட்டான்.
கணிகண்ணன் பாட இசைந்து ஒரு பாடலைப் பாடினார்.




9 மன்னன் பெரும் கோபம் கொண்டான்.




10 கணிகண்ணன் அரண்மனையில் நடந்தவற்றை அப்படியே திருமழிசை ஆழ்வாரிடம் தெரிவித்தான்.



11 இவ்வாறு சொல்லிவிட்டு, திருக்கோயிலுக்குள் சென்று, பெருமாள் முன் நின்று பாடினார்.




12 திருமழிசையார் பாடியதுமே பெருமாள் தமது பாம்பணையைச் சுருட்டிக்கொண்டு அவர் பின்னால் புறப்பட்டு வந்தார்.



13 மூவரும் நகருக்கு வெளியே ஒரு சோலையில் வந்து தங்கினார்கள்.



14 மற்ற ஆலயங்களில் உள்ள தெய்வங்களும் நகரைவிட்டுப் புறப்பட்டார்கள்.
அதனால் நகரமே களையிழந்தது. சூரியனும் நீங்கவே எங்கும் இருள் சூழ்ந்தது.



15 மன்னன் தவற்றை உணர்ந்து மனம் பதைத்தான். அவன் மதியமைச்சரோடு ஆழ்வார் தங்கியிருந்த சோலைக்குச் சென்றான். காவலாக கணிகண்ணன் நின்றிருந்தார்.




16 கணிகண்ணன் திருமழிசை ஆழ்வாரை வேண்ட, அவர் திருமாலை வேண்டிப் பாடினார்.




17 எல்லோரும் நகருக்குத் திரும்புகிறார்கள். மற்றத் தெய்வங்களும் திரும்பி வந்தார்கள். திருமால் ஆலயத்திற்குள் நுழைந்தார். நகரம் மீண்டும் பொலிவு பெற்றது.



18



ஆலயத்தில் நுழைந்த பெருமாள் முன்பு போலவே அனைவருக்கும் பள்ளி கொண்டு காட்சியளிக்கிறார். அன்று முதல் அங்கு திருமாலைப் பக்தர்கள் “சொன்ன வண்ணம் செய்த பெருமாள்” என்று போற்றி வருகிறார்கள்.

# நக்கீரர் கண்ட கயிலைக் காட்சி

**1** அரசவையில் பாண்டிய மன்னனும், மண்டபத்தில் மற்ற புலவர்களும் அமர்ந்திருக்கிறார்கள்.

**2**




**3**




**4** சிவபெருமானின் நெற்றிக்கண்ணிலிருந்து வெளிப்பட்ட வெப்பம் நக்கீரரைத் தாக்கியது. அதனால் அவர் உடலில் நெருப்புப் பற்றி எரிவது போன்ற துன்பத்தை அனுபவித்தார். அதோடு அவருக்குத் தொழுநோயும் வந்துவிட்டது.
உடலின் வெப்பம் தணிவதற்காக நக்கீரர், மதுரை மீனாட்சி கோயிலுள்ள பொற்றாமரைக் குளத்தில் சென்று விழுந்தார்.
அப்போது அவருக்கு சிவபெருமானின் கிருபையால் நல்லறிவு தோன்றியது.



**5** மதுரைத் தமிழ்ச்சங்க புலவர்கள் நக்கீரருக்கு அருள் புரியும்படி சோமசுந்தரக் கடவுளிடம் பிரார்த்தனை செய்தார்கள்.
அவர்களின் பிரார்த்தனைக்கிணங்க நக்கீரருக்கு இறைவன் காட்சி கொடுத்தார்...



**6** சிவபெருமான் கூறியபடியே கயிலையைத் தரிசிக்கும் பொருட்டு நக்கீரர் மதுரையிலிருந்து புறப்பட்டார்.
அவர் வழியில் திருப்பரங்குன்றத்தில் திருமுருகனைத் துதித்து 'திருமுருகாற்றுப்படை' என்னும் நூலை இயற்றினார்.

**7**






**8** திருப்பரங்குன்றத்திலிருந்து புறப்பட்ட நக்கீரர் வழியில் பழனி, திருவாரூர், சுவாமிமலை, சிதம்பரம், விருத்தாசலம், திருவண்ணாமலை, காஞ்சீபுரம், திருத்தணி போன்ற பல திருத்தலங்களுக்குச் சென்று ஆலய வழிபாடு செய்தார்.



முருகன் அருளாலும் பார்வதி பரமேஸ்வரர்களின் அருளாலும், நக்கீரருக்குக் கயிலையின் காட்சி கிடைப்பதற்குரிய நேரம் நெருங்கியது.

**9** திருக்காளத்தியில் இறைவனும் இறைவியும், காளத்தீஸ்வரர் – ஞானப்ரசூனாம்பிகை ஆகிய பெயர்களில் எழுந்தருளி அருள் புரிகிறார்கள்.
அவர்கள் நக்கீரருக்குக் கயிலையின் தரிசனம் அருளத் திருவுள்ளம் கொண்டனர்.

சுவாமி! நமது குழந்தை நக்கீரன் திருக்காளத்தியில் எழுந்தருளியிருக்கும் நம்மைத் தரிசிப்பதற்காக வந்து கொண்டிருக்கிறான். அவனுக்குத் தாங்கள் கயிலைக் காட்சியை இங்கேயே தந்து அருள் புரியுங்கள்.



நன்றாகச் சொன்னாய் தேவி! இப்போது நக்கீரன் தன் உண்மை நிலையை உணர்ந்துவிட்டான். இனி நாம் அவனுக்கு அருள் செய்வோம்.

**10** நக்கீரர் திருக்காளத்தியை அடைந்து இறைவனையும் இறைவியையும் வழிபட்டார்.







**11** காளத்தீஸ்வரரும் ஞானபிரசூனாம்பிகையும், திருக்காளத்தியில் நக்கீரருக்குக் கயிலாய தரிசனம் வழங்கினார்கள்.

**12** கயிலையின் தரிசனம் பெற்ற நக்கீரர் தாம் பெற்ற ஆன்மிக அனுபவத்தை 'கயிலை பாதி, காளத்தி பாதி அந்தாதி' என்னும் நூலாகப் பாடினார்.

**13** திருக்காளத்தியில் இறைவனும் இறைவியும் நக்கீரருக்குக் காட்சி தந்து . . .




**14** நக்கீரர் தனது எஞ்சிய வாழ்நாள் முழுவதும் காளத்தியில் சிவ தியானத்தில் ஈடுபட்டார். அங்கேயே அவர் உடலை உகுத்து முக்தி பெற்றார்.



# ஸ்ரீராமகிருஷ்ணருக்காக வாழ்ந்த தம்பதிகள்

**1** 1882-ஆம் வருடம். பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசிக்க,வங்காளத்தைச் சேர்ந்த நவகோபால் கோஷும் அவரது மனைவி நிஸ்தாரிணியும் சென்றார்கள்.




**2** மூன்று வருடங்களுக்குப் பின்னர்...




**3** இத்தனை நாட்களுக்குப் பிறகும் ஸ்ரீராமகிருஷ்ணர் தம்மைப் பற்றி விசாரித்தார் என்று அறிந்து நவகோபால் நெகிழ்ந்தார். உடனே குடும்பத்தோடு சென்று ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசித்தார்.

**4** ஒரு நாள் நவகோபாலின் வீட்டில் பாகவத உபன்யாசமும் கிருஷ்ண கீர்த்தனையும் நடந்தன. அதில் கலந்து கொண்ட குருதேவர் தி[illegible] கிருஷ்ண பாவத்தில் மூழ்கி நடனமாடினார்.



5

உடனே குருதேவருக்கு மாலை அணிவித்து நவகோபால் வணங்கி பிரார்த்தித்தார்.

பிரபோ, சம்சாரத்தில் மூழ்கியுள்ள என்னைக் காத்தருள வேண்டும்.



வேறு எதுவும் செய்ய முடியவில்லை என்றால், தினம் ஒரு முறையாவது என்னை நினைத்துக் கொள்.

6

தூய உள்ளம் படைத்த நிஸ்தாரிணியிடம் குருதேவர் அன்புடன் பேசுவார். ஒரு நாள்...

எதைக் கண்டு நீ இந்த அளவிற்கு என்னிடம் பக்தி செலுத்துகிறாய் அம்மா?



பெருமானே, அதை விளக்குவது சிரமம். பிரகலாதனையும் துருவனையும் எது அவர்களது பெற்றோர்களை மறக்கச் செய்ததோ, அதையே நான் உங்களிடம் காண்கிறேன்.

7

மற்றொரு நாள்... குருதேவரையே தஞ்சமடைந்திருந்த ஒரு பூனையையும் அதன் குட்டிகளையும் அவர் நிஸ்தாரிணியிடம் ஒப்படைத்து, ''இவை என்னைச் சரணடைந்தவை. நீ இவற்றைப் பத்திரமாக வளர்த்து வா'' என்று கூறி நிஸ்தாரிணியை ஆசீர்வதித்தார்.

உனக்கு எல்லா மங்களமும் உண்டாகட்டும். இஷ்டதெய்வ தரிசனம் உனக்கு சித்திக்கும்.



8

சில வருடங்களுக்குப் பின்னர்... ஒரு நாள் நிஸ்தாரிணி ஜபம் செய்து கொண்டிருந்தபோது ஸ்ரீராமர் அவருக்குக் காட்சி அளித்தார்.



9

ஸ்ரீராமபிரானின் பாதம் தொட்டு வணங்க நிஸ்தாரிணி எழுந்தபோது, அங்கே திடீரென ஸ்ரீராமகிருஷ்ணர் தோன்றினார்.




10

ஸ்ரீராமகிருஷ்ணர் ஸ்ரீராமனில் கலந்தார். ‘இஷ்ட தெய்வத்தைக் காட்டிய பிறகு குரு அவரிலேயே லயமடைவார்’ என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவார்.



11

நிஸ்தாரிணி கர்ப்பமாக இருந்தபோது அவர், தமக்கு மகன் பிறந்தால் ஸ்ரீராமகிருஷ்ணரின் சேவைக்காக அவனை அர்ப்பணிப்பதாக முடிவெடுத்திருந்தார்.

**12**

ஐயனே, உங்களுக்கு இந்தக் குழந்தையைக் காணிக்கை யாக்குகிறேன். ஏற்றுக் கொள்ள வேண்டும்.



ஆஹா, என்ன அழகான குழந்தை! நல்லது, சமயம் வரும்போது இவனை நானே ஏற்றுக் கொள்கிறேன்.

அந்தக் குழந்தை பின்னர் சுவாமி அம்பிகானந்தர் என்ற பெயரில் ராமகிருஷ்ண மடத்தில் துறவியானார்.

**13**

ஸ்ரீராமகிருஷ்ணரின் மறைவிற்குப் பிறகு, நவகோபால் தினந்தோறும் 'ஜெய் ராமகிருஷ்ணா' என்று கூறும் சிறுவர்களுக்கு இனிப்புகள் வழங்குவார்.






**14**

1898, பிப்ரவரி 6. நவகோபால் வீட்டில் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு நடந்த பூஜையில் சுவாமி விவேகானந்தர் கலந்து கொண்டு ஆடிப் பாடினார். ஆழ்ந்த தியானத்திற்குப் பிறகு 'ஸ்தாபகாய ச தர்மஸ்ய...' என்ற குருதேவரின் மந்திரத்தை அவர் வெளிப்படுத்தினார்.

**15**

தள்ளாத வயதிலும் குருதேவருக்குத் தினமும் நிவேதனம் செய்வதற்காக நிஸ்தாரிணி தாமே 'சந்தேஷ்' என்ற இனிப்பைத் தயாரிப்பார்.

இறுதியில், குருதேவரின் திருநாமத்தை ஓதிக் கொண்டே அவரது பாதாரவிந்தங்களை அடைந்தார்.



ஆதார நூல்: *They lived with God.*



# உபகோசலன்

**1**

சத்யகாம ஜாபாலி என்ற முனிவர் தமது சீடர்களின் தகுதிக்கேற்ப கல்வி போதிப்பதில் சிறந்தவர். அவரிடம் உபகோசலன் என்பவன் சீடனாகச் சேர வந்தான்.




**2**




**3**

உபகோசலன், சத்யகாமருடைய ஆசிரமத்தில் அவரது வேள்வித் தீயை மிகுந்த சிரத்தையுடன் பேணி வந்தான். கல்வி கேள்விகளிலும் ஆசிரமப் பணிகளிலும் சிறந்து விளங்கினான்.



**4**

சில வருடங்களுக்குப் பிறகு சத்யகாமர், உபகோசலனைத் தவிர தமது மற்ற சீடர்களுக்கு விடைகொடுத்து வீடு திரும்ப அனுமதி அளித்தார்.



**5** குருபத்தினிக்குத் தன் கணவர் உபகோசலனை உதாசீனம் செய்தது வருத்தம் அளித்தது.




**6** மனைவி கூறியதைக் கேட்ட பின்பும் சத்யகாமர் பதில் ஏதும் கூறவில்லை. சில நாட்களில் தீர்த்த யாத்திரை சென்றார். மனம் வருந்திய உபகோசலன் உணவு உண்பதை நிறுத்திவிட்டான். ஆனாலும் தமது கடமையான அக்னிகளைப் பேணி பாதுகாப்பதில் சிரத்தையுடன் இருந்தான்.

குழந்தாய், ஏன் பட்டினி கிடக்கிறாய்?

தாயே! நிறைவேறாத விருப்பங்களால் மனஅமைதி இல்லை. அதோடு பசிக்கவில்லை. குருநாதர் எனது பணியில் திருப்தி அடையவில்லையோ என்று நினைக்கிறேன். என்றாலும் எனக்கு குருநாதர் பணித்த கடமையைச் செய்து வருவேன்.

உன் விருப்பம் அவசியம் நிறைவேறும் மகனே. வந்து உணவு அருந்து.

**7** குருபத்தினி ஆறுதல் கூறிய பிறகு உபகோசலன் சிந்தனைவயப்பட்டான். அப்போது....

**8** மூன்று அக்னிகளான கார்ஹபத்தியம், தக்ஷிணாக்னி, ஆஹவனீயம் இவற்றின் தலைமை தேவதை உபகோசலனின் நிலைமையை உணர்ந்தது. சத்தியகாமரின் எண்ணத்தையும் அறிந்திருந்தது. அதனால் உபகோசலனுக்குத் தானே பிரம்மஞானம் வழங்கி அருளியது.




**9** பிரம்மஞானம் பெற்ற உபகோசலன் மிகவும் ஒளி[illegible]ந்[illegible]ான். சில நாட்களுக்குப் பிறகு சத்தியகாமர் ஆசிர[illegible] [illegible]ரும்பினார். தமது சீடன் பிரம்ம தேஜஸுடன் விள[illegible]குவதைக் கண்டு வியந்தார்.




**10** என்ன நடந்தது என்பதை குரு புரிந்து கொண்டார். அவர் குருகுல வாசத்தின்போது தாமும் அக்னியிடம் உபதேசம் பெற்றதை நினைவு கூர்ந்தார்.



11 அக்னிதேவனிடமிருந்து தான் கற்றதை உபகோசலன் விளக்கினான்.

மிகவும் மகிழ்ச்சி மகனே, நீ பக்குவம் அடைந்துவிட்டாய். உன் ஞானம் மேலும் பெருக நான் கற்பிக்கிறேன்.




ஓம், கண்ணினுள் காணப்படும் புருஷனே ஆத்மா. அவன் மரணமற்றவன். அச்சம் அற்றவன்- அவனே பிரம்மம்.

12 உபகோசலா! நானும் உன் போல் அக்னியின் வாயிலாகப் போதிக்கப் பெற்றவன்தான். சிறந்த மாணவனாகிய உனக்கும் அந்தப் பேறு கிடைக்க வேண்டியே இப்படி உன்னைச் சோதனைக்கு உள்ளாக்கினேன்.



சுவாமி! அக்னிதேவனைத் தரிசிக்கும் பாக்கியமும், அவரிடம் உபதேசம் பெறும் பேறும், தங்கள் கிருபையால்தான் அடைந்தேன்.

13 உபகோசலா! உன் பணிவும் பண்பும் ஞானமும் போற்றுதற்குரியன. நீ அக்னியிடம் கற்ற வித்யை 'உபகோசலப் பிரம்ம வித்யை' என்று இனி வருங்காலத்தில் அழைக்கப்படும்.



தன்யனானேன் சுவாமி.

14 **எ**தையும் அவசரப்பட்டுச் செய்துவிடக் கூடாது. தூய்மை, பொறுமை, விடாமுயற்சி இவையே வெற்றிக்கு இன்றியமையாத மூன்று. இவை அனைத்திற்கும் மேலாக வேண்டுவது அன்பு. எல்லையற்ற காலம் உன் முன் உள்ளது, தேவையற்ற அவசரம் வேண்டாம். தூய்மையும், நேர்மையும்



உன்னிடம் இருக்குமானால் எல்லாம் சரியாக அமையும். உன்னைப் போன்ற நூற்றுக்கணக்கானோர் நமக்குத் தேவை. அவர்கள் சமூகத்தின்மீது பாய்ந்து அதை அதிரச் செய்ய வேண்டும்; எங்கு சென்றாலும் புதுவாழ்வையும் பேராற்றலையும் வழங்க வேண்டும்.

- சுவாமி விவேகானந்தர்

# சோமாசி மாறனார்

**1** திருவாரூரில் சுந்தரரின் மனைவி பாவை நாச்சியார் கணவருக்கு உணவு பரிமாறிக் கொண்டிருந்தார்.

பாவை, நீ பரி
மாறும் உணவில்
தினமும் தூது
வளைக் கீரையும்
பாகற்காயும்
உனக்கு எப்படிக்
கிடைக்கிறது?



ஐயனே! சோமாசிமாறர் என்ற
சிவனடியார் அம்பர் மாகாளம் என்ற
கிராமத்திலிருந்து அவைகளைக்
கொண்டு வந்து தருகிறார். அவர் பல
சோம யாகங்கள் செய்தவராம்!
சிறந்த பக்தராகக் காணப்படுகிறார்.

**2** தினமும் இந்தக் கீரையும் கறியும் என் உணவில்
நீ சேர்ப்பது தெரிந்தே, அவர் கொண்டு வந்து தருகிறார்
போலிருக்கிறது!



ஆம் ஐயனே, அதோடு அவர் உங்களைச் சந்திக்க
விரும்பியே இங்கு வருவதாக நான் கருதுகிறேன்.



பாவை, சோமாசிமாறர் நாளை வந்தால் நான் அவரைப் பார்க்க விரும்புவதாகக் கூறு!

**3** சிவமே போற்றி! அடியவரே!
உள்ளே வாருங்கள்! முதலில் சற்று அமர்ந்து
இளைப்பாறுங்கள்.



மிக்க நன்றி ஐயனே! தங்களைத் தரிசித்தது என்
பாக்கியம்.



அடியவரே! முதலில் தாகத்திற்கு இந்த
மோரைப் பருகுங்கள்.

**4** அடியவரே! தங்களைப் பற்றி பாவை என்னிடம் கூறினாள். தினமும் நான் அறுசுவை உணவு உண்ண தாங்கள் கீரையும் கறியும் கொடுத்து உதவுகிறீர்கள். இதற்கு நான் பிரதியுபகாரமாக என்ன செய்வேன்?



ஐயனே! தாங்கள் கருணை கூர்ந்து ஆற்ற வேண்டியது ஒன்று உண்டு. தியாகேசப் பெருமானே நேரில் வந்து அடியேன் செய்யும் சோம யாகத்தின் அவிர்பாகத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டும்! அதற்குத் தாங்கள்தான் அவரிடம் விண்ணப்பித்து உதவ வேண்டும்.

**5** அடியவரே, தியாகேசப் பெருமான் அலகிலா விளையாட்டு உடையவர். அவர் எந்த உருவில் எப்படி வருவார் என்பது தெரியாது. அவர் செய்யும் சோதனையில் தவறினால் பழியும் பாவமும் வந்து சேருமே!



தியாகவிடங்கரைத் தாங்கள் வரச் செய்தால் போதும். அவர் எந்த வடிவில் வந்தாலும் தவறாமல் நான் உபசரிப்பேன்.

**6** இறைவனை அழைத்து வருவதாக சுந்தரர் உறுதியளித்தார். சோமாசிமாறர் ஊர் திரும்பி யாகத்துக்கான ஏற்பாடுகளைப் பெருமளவில் செய்யலானார்.

எனக்குப் பயமாக இருக்கிறது சுவாமி. இறைவனின் சோதனையில் நாம் தேறுவோமா?



7

யாகசாலையில் சுப வேளையில் வேள்வி தொடங்கியது.




8

யாகத்தில் அவிர்பாகம் அளிக்கத் தொடங்கும் நேரம். அப்போது திடீரென்று வெளியே பறைக்கொட்டும் சத்தம் பலமாகக் கேட்டது.




9

யாகசாலைக்கு வெளியே வந்து பரபரப்பாக எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே நீசன் யாகசாலைக்கு உள்ளேயே வந்துவிட்டான்.

10

யாகசாலையில் இருந்த அந்தணர்கள் வெளியே ஓடலானார்கள்.



**11** நீசனாக வந்தது சிவபெருமானே. அவர் சிரித்தவாறு யாகசாலைக்குள் வர பெண்களும் புரோகிதர்களும் திகைத்து நின்றார்கள். கையில் அவிர்பாகத்துடன் சோமாசிமாறரும் சிலையாக நின்றார்.




**12** இனம் புரியாத சக்தியால் அச்சம் நீங்கிய சோமாசிமாறர் மிகுந்த பக்தியுடன் அவிர்பாகத்தை நீச வடிவில் வந்த இறைவனிடம் நீட்டினார்.




**13** உடனே இறைவன் தமது திருக்காட்சியைக் காட்டி அருளினார். ஆனந்தக் கண்ணீர் மேலிட சோமாசிமாறர் இறைவன் பாதத்தில் விழுந்தார்.




**14** அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராக விளங்கும் சோமாசிமாறரை சுந்தரர் 'அம்பரான் சோமாசிமாறன் அடியார்க்கும் அடியேன்!' என்று பாராட்டுகிறார்.

"விக்கிரகத்தில் மட்டுமே சிவபெருமானைக் காண்பவனின் வழிபாடு ஆரம்ப நிலையில் உள்ளது. ஒரே ஓர் ஏழைக்காவது, அவனது ஜாதி, இனம், மதம் என்று எதையும் பாராமல், அவனிடம் சிவபெருமானைக் கண்டு அவனுக்கு உதவிகள் செய்து தொண்டாற்றுபவனிடம் சிவபெருமான் மிகவும் திருப்தி கொள்கிறார்."



- சுவாமி விவேகானந்தர்

(ஞானதீபம்-5 பக்கம் 46)

# மகாராணி சீதையின் கட்டளை!

1 வனவாசம் முடிந்து பட்டாபிஷேகமும் ஆயிற்று. அதன் பிறகு ஒரு நாள் ஸ்ரீராமரும் சீதையும் அரண்மனை உப்பரிகையில் நின்றிருந்தார்கள்.
அப்போது ஸ்ரீராமர் அயோத்தியின் அழகை சீதைக்குக் காட்டிக் கொண்டிருந்தார். உயர்ந்த ஆடையும் அணிகலன்களும் அணிந்து குடிமக்கள் மகிழ்ச்சியோடு உலாவிக்கொண்டிருந்தனர்.




2 சீதாதேவியின் கண்ணில் ஒரு காட்சி தென்பட்டது. திடுக்கிட்டாள்.




3 சீதையின் முகத்தில் இருள் கவிந்தது.




சீதை காட்டிய திசையில் பார்த்த ஸ்ரீராமச்சந்திரரும் திடுக்கிட்டார்... உடலில் ஒரு பொட்டு நகை இல்லாமல் உடுத்தியிருந்த கந்தல் புடவையுடன், இடுப்பில் மெலிந்த ஒரு குழந்தையுடன் பரிதாபமாக ஒரு பிச்சைக்காரி!

**4** சீதை தன் தோழியை அழைத்தாள்.




**5** பிச்சைக்காரி அழைத்து வரப்பட்டாள்.




**6** சீதை, பிச்சைக்காரியிடம் கனிவாகத் தாயன்புடன் விசாரித்தாள்...







**7** பிச்சைக்காரி தொடர்ந்து கூறினாள்...




**8** சீதை உடனே தன் நகைகளைக் கழற்றி அந்தப் பெண்ணிடம் தந்தாள்...



9

பிச்சைக்காரி லட்சுமணனிடம் சென்றாள். லட்சுமணன் அவளது வரலாற்றைக் கேட்டார்.




10

லட்சுமணன் அந்தப் பெண்ணுக்கு லட்சம் பொற்காசுகளும், ஏராளமான ஆடையணிகலன்களும் தந்து அனுப்பி வைத்தார்.



11




லட்சுமணன் அந்தச் செய்தியை வாங்கிப் படித்தார்.

12

சீதையிடமிருந்து வந்த ஓலையை வாங்கி லட்சுமணன் படித்தார். அதில் சீதையின் கட்டளை எழுதப்பட்டிருந்தது...

... ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியின் ஆட்சிக்கு உட்பட்ட எந்த ராஜ்யத்திலும் இருக்கும் ஆடவரோ பெண்டிரோ குழந்தைகளோ போதிய உடையும் ஆபரணமும் இல்லாமல் இருக்கக் கூடாது.
எனது இந்த உத்தரவை எல்லாச் சிற்றரசர்களுக்கும் அனுப்பி வை.
ஏழு தீவுகளிலும் இருக்கும் எல்லா நாடுகளிலும் இது பறைசாற்றப்பட வேண்டும்.



**13** லட்சுமணன் சீதையின் கடிதத்தைத் தொடர்ந்து படித்தார்.

... இதைக் கண்காணிக்க
நமது ஒற்றர்கள் எப்போதும்
சுற்றிக்கொண்டே இருக்க
வேண்டும்.

ஆடை ஆபரணம் இல்லாமல்
எந்த நகரத்திலோ ராஜ்யத்திலோ
ஆணோ பெண்ணோ காணப்பட்டால்,
அந்த ராஜ்யத்தின் ஆளுநர் மிகவும்
கடுமையாகத் தண்டிக்கப்படுவார்.

நானும் ராஜா ராமச்சந்திரரும்
இதைக் கடுமையான குற்றமாகக்
கருதித் தண்டிப்போம்.



**14** ... இந்த என் கட்டளைப்படி எல்லா
நாட்டு அரசர்களும் தங்கள் பொக்கிஷப்
பணத்தைச் செலவு செய்து நகைகளும்
துணிகளும் வாங்கிக் குடிமக்களுக்கு
இலவசமாகக் கொடுக்க வேண்டும்.
இது மகாராணி சீதாதேவியின் உத்தரவு!



**15** மகாராணி சீதாதேவியின் கண்காணிப்பினால் ராம ராஜ்யத்தில், பெண்கள் உடைப் பஞ்சமின்றி ஆடை ஆபரணங்களோடு மகிழ்ச்சியாக வாழ்ந்தார்கள்.



**16** சீதாதேவியின் கட்டளையையும் கருணை மனதையும் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி பெரிதும் பாராட்டினார்.



# ராவணன் வெட்டு

1  இலங்கையிலுள்ள புகழ் பெற்ற சிவத்தலம் திருக்கோணமலை. 'திருக்கோணமலை தல புராணம்' கூறும் ஒரு நிகழ்ச்சி இது.

2 லங்காபுரியை ஆண்டு வந்த ராவணன் சிறந்த சிவ பக்தன்.
அவன் சிவனருள் பெற்று மூன்று உலகங்களையும் வென்றவன். இசைக்கலையில் வல்லவன்.
அவன் தாய் கேகசி. அவள் நாள்தோறும் அரிசி மாவினால் சிவலிங்கம் அமைத்து, சிவ பூஜை செய்வது வழக்கம்.
பூஜை முடிந்ததும் அந்த சிவலிங்கத்தை அவள் நதியில் சேர்த்துவிடுவாள்.
இதை ராவணன் பார்த்தான்.




3 ராவணன் திருக்கயிலாயம் சென்று கைலாசபதியைக் குறித்து கடுந்தவம் புரிந்தான். அதனால் ஈசன் மனம் மகிழ்ந்து ஒரு சிவலிங்கத்தை ராவணனுக்குத் தந்தார்.



4 ராவணன் சிவலிங்கம் பெற்ற செய்தி தேவர்களுக்குத் தெரிய வந்தது. அதனால் அவர்கள் பயந்தார்கள்; விநாயகரின் உதவியை நாடினார்கள்.




5 சிவலிங்கத்தைக் கையில் எடுத்துக்கொண்டு ராவணன் இலங்கைக்குச் சென்றுகொண்டிருந்தான். அவன் எதிரில் வழியில் விநாயகர் ஒரு வயோதிக பிராம்மணன் வடிவத்தில் எதிர்பட்டார். அதோடு அவர் ராவணன் வயிற்றில் உபாதை உண்டாகும்படியும் செய்தார்.




6 ராவணனால் விரைவில் திரும்ப முடியவில்லை. விநாயகர் தான் சொன்னபடியே மூன்று முறை கூவியழைத்தார்.



7. அங்கிருந்து பிள்ளையார் மறைந்துவிட்டார்.
ராவணன் திரும்பி வந்து பார்த்தான். என்ன செய்தும் அவனால் சிவலிங்கத்தை நிலத்திலிருந்து அசைக்கக் கூட முடியவில்லை.
அந்த சிவலிங்கம் பசுவின் காதுபோல் நீண்டதேயன்றி நிலத்தைவிட்டு அசையவேயில்லை.
(அந்த சிவலிங்கம் இருக்கும் இடமே 'கோகர்ணம்' என்ற சிவத்தலம். கோ-பசு, கர்ணம் - காது.)




8. மனம் வருந்திக்கொண்டிருந்த ராவணன் முன்பு மகாவிஷ்ணு தோன்றி...




9. மகாவிஷ்ணு கூறியபடியே ராவணன் தட்சிண கயிலாயமாகிய திருக்கோணமலைக்குச் சென்று தவமிருந்தான்.
ஆனால் இறைவனின் காட்சி கிடைக்கவில்லை.




10. ராவணன் மலையைப் பிளந்து எடுப்பதற்காகத் தன் வாளால் வெட்டவே, இறைவன் தன் கால் விரலால் மலையை அழுத்தினார். அதனால் ராவணன் மலையின் அடிவாரத்திலுள்ள கடலில் அமுங்கி, திணறித் தத்தளித்தான்.




11. அந்தச் சமயம் நாரதர் அங்கு தோன்றினார்.



12 ராவணன் தன் ஒரு தலையையும் ஒரு கையையும் கிள்ளி, யாழாக அமைத்து, சாமகானம் செய்தான்.
அந்த இசையில் மகிழ்ந்த இறைவன் அவனுக்குக் காட்சித் தந்தார்.




13 ராவணனின் தாயாகிய கேகசிக்கு, "ராவணன் சமுத்திரத்தில் அமிழ்ந்து இறந்துவிட்டான்!" என்ற தவறான செய்தி கிடைத்தது.
அவள் அழுது புலம்பி இறந்துவிட்டாள்.




14 திருக்கோணமலையிலிருந்து வந்துகொண்டிருந்த ராவணனிடம்...




15 ராவணன் திருக்கோணமலைக்கு அருகிலுள்ள 'கண்ணியாய்' என்னும் இடத்திற்குச் சென்றான்.
அங்கு அவன், இறந்து போன தன் தாயாருக்கு நீர்க்கடன், தீக்கடன் செய்வதற்காகத் தனது வாளினால் ஏழு இடங்களில் நிலத்தைக் குத்தினான்.
அந்த ஏழு இடங்களிலுமிருந்து வெந்நீரூற்றுகள் தோன்றின.
அந்த வெந்நீரூற்றில் அந்தணர்களைக் கொண்டு தன் தாய்க்கு ராவணன் நீர்க்கடன், தீக்கடன்களைச் செய்தான்.
(இன்றும் இலங்கையிலுள்ள இந்த இடத்தில் மக்கள், இறந்து போன தங்கள் உறவினர்களுக்குச் சிரார்த்தம் போன்றவற்றைச் செய்கிறார்கள்.)

16 திருக்கோணமலையில் ராவணன் தன் வாளால் மலையைப் பிளக்க வெட்டிய இடம் 'ராவணன் வெட்டு' என்று இப்போதும் அழைக்கப்படுகிறது.

# குரு காணிக்கை





1 வரதந்து முனிவரின் குருகுலத்தில் மாணவர்கள் கல்வி பயின்று வந்தார்கள்.




2 அடுத்த நாள் காலையில் மாணவர்கள் முனிவரிடம் விடை பெற்றுச் செல்ல வந்தார்கள்.










5 குரு கோபத்தில்...
அப்படியானால் நீ சென்று 14 கோடி தங்க நாணயங்களைக் காணிக்கையாகக் கொண்டு வா! நான் ஏற்றுக்கொள்கிறேன்.


6 14 கோடி தங்க நாணயங்களை நான் எப்படி குருவிற்குக் கொடுப்பேன்? சரி! குருவின் கட்டளைப்படியே முயன்று பார்ப்போம்.


7 மனம் குழம்பிய நிலையில் கௌத்ச முனிவர் ரகு மன்னரிடம் சென்று யாசிக்கலாம் என்று கிளம்பினார்.
ரகு மன்னர் அப்போதுதான் விஸ்வஜித் யாகம் நடத்தி, தமது செல்வம் அனைத்தையும் தானம் அளித்திருந்தார். அவருடைய கஜானா முழுவதும் அப்போது காலியாகி இருந்தது.


8 முனிவரே! தங்கள் வரவு நல்வரவு ஆகட்டும்! தங்கள் ஆசியால் நாட்டு மக்கள் க்ஷேமத்துடன் இருக்கிறார்கள். தங்களுக்கு நான் என்ன சேவை செய்ய வேண்டும்?
மன்னா! தாங்களும், தங்கள் ராஜ்யமும் சிறந்து விளங்க வாழ்த்துகிறேன்!
மன்னா! நான் தாமதமாக வந்துவிட்டேன். உங்களிடமிருந்து செல்வத்தைத் தானமாகப் பெற வந்தேன். இனி இயலாது என்று நினைக்கிறேன். நான் வருகிறேன்.
இல்லை முனிவரே! என்னை நாடி வந்த உங்களை வெறுங்கையுடன் அனுப்ப மாட்டேன். தங்களுக்குத் தேவையான செல்வம் எவ்வளவு என்று கூறுங்கள்?

9

கௌத்சர் தம்முடைய குருகுலத்தில் நடந்தவற்றை மன்னரிடம் விவரமாகக் கூறினார். தமக்கு 14 கோடி தங்க நாணயங்கள் தேவை என்பதையும் கூறினார். கௌத்சரின் முரட்டுத் தனமான குருபக்தியையும் அரசர் உணர்ந்தார்.




11

யட்ச லோகத்தில் குபேரனுக்கு ரகு மன்னன் போர் தொடுக்கப்போகும் செய்தி எட்டியது.



12

அமைச்சரே! ரகு மன்னனுடன் போர் செய்ய நேரிட்டால் மிகப் பெரிய அழிவு நமக்கு ஏற்படும்.









15




16




17

கௌத்சர் தமது குருவிடம் சென்றார்...






ஆதாரம்: காளிதாசர் இயற்றிய ரகுவம்சம் என்ற நூலிலிருந்து.

# அசுரகுலகுரு சுக்கிராச்சாரியார்

**1** ஒரு சமயம் வேதாரண்யம் சிவாலயத்தில், சிவன் சன்னதி விளக்கு அணையும் நிலையில் இருந்தது.

அப்போது தற்செயலாக அங்கு வந்த ஓர் எலி...




**2** எலியின் மூக்குப் பட்டவுடன் விளக்குத் தூண்டப்பட்டு பிரகாசமாக எரிய ஆரம்பித்தது.




**3**



**4** எலி அடுத்த பிறவியில் அசுரர் குல மன்னன் மகாபலியாகப் பிறந்தது.
ஒரு நாள் மகாபலி சக்கரவர்த்தி தன் குலகுரு சுக்கிராச்சாரியாரிடம் கூறினான்...




**5** மகாபலி பெரிய யாகம் நடத்தினான்.
யாகத்திற்கு வந்தவர்களுக்கு அவன் ஏராளமான தான தர்மங்கள் செய்தான்.

**6** அப்போது வாமன வடிவத்தில் திருமால் யாகசாலைக்கு வருகிறார்.

வாமனச் சிறுவரே! வாருங்கள்! தங்களுக்கு எது வேண்டுமானாலும் என்னிடம் கேட்டுப் பெற்றுக்கொள்ளுங்கள்.

எனக்கு என் காலால் மூன்றடி நிலம் கொடுத்தால் போதும். வேறு எதுவும் எனக்கு வேண்டாம்.

7 ஹஹ்... ஹஹ்... ஹஹ்... ஹா! உங்கள் காலால் மூன்றடி நிலமா? வேறு ஏதாவது பெரியதாக என்னிடம் கேளுங்கள்!

எனக்கு வேறு எதுவும் வேண்டாம்! மூன்றடி நிலம் மட்டும் நீங்கள் எனக்குக் கொடுத்தால் போதும். தங்களால் முடிந்தால் கொடுங்கள்...

தங்கள் விருப்பப்படியே உங்களுக்கு மூன்றடி நிலம் தருகிறேன்.

8 மகாபலி தானம் கொடுக்கும் பொருட்டு தாரை வார்க்கக் கமண்டலத்தை எடுத்தான்.

அரசே! அவசரப்பட்டு அவனுக்குத் தானம் தராதீர்கள். வந்திருப்பவன் வாமனன் அல்ல; திருமால். உங்களை ஏமாற்றி விடுவான். ஜாக்கிரதை!

9 குருதேவா! வாமனன் வடிவத்தில் வந்திருப்பவர் திருமாலாகவே இருந்தாலும், அவர் கேட்டபடி மூன்றடி நிலம் தருவேன். நான் தானம் செய்வதை நீங்கள் தடுக்காதீர்கள்.

எப்படியும் இந்த தானத்தைத் தடுப்பேன்! இதோ வண்டு வடிவத்தில் சென்று கமண்டலத்தின் வாயை அடைத்து விடுகிறேன்.

**10** சுக்கிராச்சாரியார் வண்டு வடிவம் எடுத்து கமண்டலத்தின் வாயை அடைத்தார். கமண்டலத்தின் அடைபட்ட துவாரத்தைத் திருமால் தர்ப்பையால் குத்தினார். அதனால் சுக்கிராச்சாரியார் தன் கண்களை இழந்தார். கமண்டலத்திலிருந்து நீர் வெளிப்பட்டது.



**11** வாமனர் திருவிக்கிரமனாகி இரண்டடியால் மூன்று உலகங்களையும் அளந்தார். பின்னர் மூன்றாவது அடியை மகாபலியின் தலையின் மீது வைத்து அருள் புரிந்தார்.

**12** மயிலாப்பூர் வந்த சுக்கிராச்சாரியார் குருந்த மரத்தின் அடியில் சிவலிங்கம் அமைத்து பூஜை செய்தார்.

**13**




**14** மும்மூர்த்திகளும் சுக்கிராச்சாரியார் இருந்த இடத்திற்குச் சென்று அருள் புரிந்தார்கள். சிவன் அருளால் சுக்கிராச்சாரியாருக்குக் கண்பார்வை கிடைத்தது.





# கணபதி தந்த காவிரி

1 திருக்கயிலையில் ஓலைச் சுவடிகள் வைக்கப்பட்டிருந்த ஒரு மண்டபத்திற்குச் சிவபெருமானும் பார்வதிதேவியும் சென்றார்கள். அந்தச் சமயம் தரிசனத்திற்கு வந்திருந்த அகத்திய முனிவரையும் அவர்கள் தங்களுடன் அழைத்துச் சென்றார்கள்.









5 ஈசனிடம் அகத்தியர் தென்னாட்டில் இருக்கும்போது சிவபூஜைக்கும், மக்கள் நீராடுவதற்கும் ஏற்ற புண்ணிய தீர்த்தம் ஒன்று வேண்டுமென்று கேட்டிருந்தார். அதற்காக ஈசன் கயிலையில் இருக்கும் ஏழு புண்ணிய நதிகளில் ஒன்றான காவிரியை அழைத்தார்.







8 சூரபத்மன் இந்திரனை வென்று அமராவதியைக் கைப்பற்றியிருந்தான். தேவர்கள் சிறைப்பட்டிருந்தார்கள். சூரனுக்குப் பயந்த இந்திரன் பூவுலகத்தில், சீர்காழியில் ஒளிந்து வாழ்ந்து வந்தான். அப்போது நாரதர் அவனைக் காண வந்தார்.

அவரிடம் இந்திரன் தன் குறைகளைக் கூறினான்.

**9**

நாரதரே! நான் சிவபூஜை செய்து வருகிறேன்.
பூஜைக்குரிய மலர்களைத் தரும் நந்தவனம் போதிய நீர் இல்லாமல் வாடுகிறது. அதைக் காப்பாற்றத் தாங்கள்தான் ஏதேனும் வழி கூறியருள வேண்டும்.



இந்திரா! கவலையை விடு.
விநாயகப் பெருமானை
வேண்டிக்கொள். அவர்
அகத்தியரின் கமண்டலத்தில்
இருக்கும் காவிரியைக்
கொடுத்தருள்வார்.

**10**

அவ்வாறே இந்திரன் கணபதியைப் பூஜித்தான். அதனால் திருவுளம் மகிழ்ந்த கணபதி காகத்தின் வடிவத்தை எடுத்துக்கொண்டு குடகுமலைக்குச் சென்றார். அங்கே அகத்தியர் சிவ தியானத்தில் ஆழ்ந்திருந்தார்.

**11**

இதோ அகத்தியர் பக்கத்தில்
கமண்டலம் இருக்கிறதே! அவருக்குத்
தெரியாமல் அதைக் கவிழ்க்கிறேன்.



அடே யாரது, என் கமண்டலத்தைக்
கவிழ்த்தது?

உடனே கணபதி ஓர் அந்தணச் சிறுவனாக உருவமெடுத்து, சிரித்தபடி நின்றார்.

**12**

சிறுவனே! என்ன விளையாட்டுப் புத்தி
உனக்கு! உன் தலையில் குட்டுகிறேன் பார்.



குட்டுங்கள் பார்க்கலாம்!

அகத்தியர் குட்ட கையை ஓங்கியதும் சிறுவன் மறைந்துவிட்டான். அங்கே மகாகணபதி காட்சி தந்தார்.

13




14




15




**ஆதார நூல்கள்: கம்ப ராமாயணம், அகத்தியப் படலம், வை.மு.கோ.உரை மற்றும் கச்சியப்பர் கந்தபுராணம்.**

# வரகுண பாண்டியன்

1 மதுரையை ஆண்ட மன்னன் வரகுண பாண்டியன்.
அவன் ஒரு சிறந்த சிவ பக்தன்.




2. ஒரு நாள் வரகுண பாண்டியன் காட்டிற்குச் சென்று வேட்டையாடினான்.
காட்டில் வேட்டையாடிவிட்டு மன்னன், நள்ளிரவில் தன் குதிரை மீது விரைவாக அரண்மனைக்குத் திரும்பிக் கொண்டிருந்தான்.
அப்போது வழியில் அந்தணர் ஒருவர் தூங்கிக்கொண்டிருந்தார். அவரைப் பாண்டியனின் குதிரைத் தவறி மிதித்துவிட்டது. அதனால் அந்தணர் இறந்து போனார்.
அதன் காரணமாகப் பாண்டியனை 'பிரம்மஹத்தி தோஷம்' வந்தடைந்தது.




3 மன்னன் அரண்மனை திரும்பியதும் நடந்த தவற்றுக்கு மிகவும் மனம் வருந்தினான். அவன் வேதம் உணர்ந்த மறையோர்களை அழைத்து...

சான்றோர்களே! நான் வேட்டையாடிவிட்டுத் திரும்பும் வழியில் என் குதிரை மிதித்து அந்தணர் ஒருவர் இறந்துவிட்டார். அந்தப் பாவம் இப்போது என்னை பிரம்மஹத்தி தோஷமாகப் பிடித்திருக்கிறது.
இந்தப் பாவத்திலிருந்து நான் விடுபடுவதற்கு ஏதாவது பரிகாரம் சொல்லும்படி உங்களைக் கேட்டுக்கொள்கிறேன்.



அரசே! நீங்கள் நமது மதுரை சோமசுந்தரப் பெருமானை ஆயிரத்தெட்டு முறை வலம் வந்து பத்து நாட்கள் விரதம் இருங்கள். அப்படி நீங்கள் செய்தால் 'பிரம்மஹத்தி தோஷம்' உங்களை விட்டு நீங்கிவிடும்.

**4** மறையவர்கள் கூறியபடியே மன்னன் செய்து முடித்தான்.




**5** இறைவன் கூறியபடியே சில நாட்களில் சோழ மன்னன் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து வந்தான். அவனை வரகுணன் போரில் வென்று துரத்தி அடித்தான்.



**6** அதன் பிறகு வரகுண பாண்டியன் திருவிடைமருதூருக்குச் சென்றான். அங்கு அவன் கோயிலுக்குள் நுழைய முற்பட்டபோது சிவபெருமானின் குரல் அசரீரியாகக் கேட்டது.




**7** இறைவன் சொன்னபடியே மன்னன் மேற்கு கோபுர வழியாகச் சென்று இறைவனை வழிபட்டான்.




**8** சிவபெருமானின் பெயரைக் கேட்டாலே மனம் உருகும் இயல்புடையவன் வரகுண பாண்டியன்.
ஒரு நாள் அரண்மனைக் காவலர்கள் விசாரணையின் பொருட்டு, திருடன் ஒருவனை அரசவைக்கு இழுத்து வந்தார்கள்.




மன்னனின் ஆணைப்படி வீரர்கள் திருடனை விடுவித்தனர்.

**9** வரகுணன் எப்போதும் மனம் ஒன்றி சிவநாமம் ஜபிக்கும் இயல்புடையவன்.
ஒரு நாள் அவன் வயல்வெளிகளில் நரிகள் குளிர் காரணமாக, "ஓ" என்று ஊளையிடும் சப்தத்தைக் கேட்டான்.
அந்த சப்தம் அவனுக்கு நரிகள் "சம்போ!" என்று சிவனை அழைப்பது போல் தோன்றியது.




மன்னன் நரிகளுக்குப் பட்டுப் போர்வைகளைப் போர்த்தினான்.

**10** ஒரு சமயம் பாண்டியன் குளத்தில் தவளைகள் கத்தும், "கரகர" என்ற சப்தத்தைக் கேட்டான். அந்த ஒலி அவனுக்கு, "ஹர ஹர" என்ற சிவநாமத்தை நினைவுபடுத்தியது.




**11** சிவன் கோயிலில் சிவலிங்கத்திற்குத் தைல அபிஷேகம் செய்யும் பொருட்டு எள் காய வைத்திருந்தார்கள்.
அதை எடுத்துச் சாப்பிட்ட ஒருவனை வீரர்கள் குற்றவாளியாக அரசன் முன்பு கொண்டு வந்து நிறுத்தினார்கள்.



**12** மன்னர் பெருமானே! எள்ளை எவர் வீட்டில் திருடித் தின்னாலும், அவர் வீட்டில் அடுத்த பிறவியில் மாடாகப் பிறந்து உழைக்க வேண்டும்.
ஆதலால் அடுத்த பிறவியில் சிவனுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்பதற்காகவே சிவன் கோயிலுக்குச் சொந்தமான எள்ளை எடுத்துச் சாப்பிட்டேன்.




பாண்டியன் திருடன் வாயில் ஒட்டியிருந்த எள்ளை எடுத்துத் தன் வாயில் போட்டுக் கொண்டான்.

**13** மற்றொரு சமயம் வரகுண பாண்டியன், வேப்ப மரம் இருந்த ஒரு பாதை வழியாக நடந்து போய்க்கொண்டிருந்தான்.
அங்கு வேப்பம் பழங்கள் தரையில் உதிர்ந்து பாதி மண்ணில் புதைந்த நிலையில், மீதி பாதி மட்டும் சிவலிங்கம் போன்று வெளியே தெரிந்தன.




மன்னனின் கட்டளையைக் காவலர்கள் நிறைவேற்றினார்கள்.

**14** பாண்டிய மன்னன் சோமசுந்தரப் பெருமானின் சந்நிதியில் நின்று பிரார்த்தனை செய்தான்.




உன் விருப்பம் நிறைவேறும்.

**15** இறைவன் நந்திகேசுவரரை அழைத்து, வரகுணனுக்கு மதுரையிலேயே சிவலோகக் காட்சியைக் காட்டும்படி கூறினார்.
அதன்படியே மன்னனுக்குச் சிவலோக தரிசனம் கிடைத்தது. அதைக் கண்டு மன்னன் மனம் நெகிழ்ந்து சிவானந்தம் பெற்றான்.



வரகுண பாண்டியனின் [illegible] விளையாடல் புராணத்திலும்,
பட்டினத்தார் இயற்றிய [illegible]ம்மணிக்கோ[illegible]யிலும் இடம் பெற்றுள்ளது.



# தேவியின் அருள் பெற்ற சரளாதாசர்









3 எல்லோரும் சென்ற பிறகு அம்மா சித்துவுக்கு ஆறுதல் கூறினார்.



4

சித்து, நீயா? உன்னை இந்த வேலைக்கெல்லாம் அனுப்ப மாட்டார்களே?

எல்லோரும் சந்தைக்குப் போய்விட்டார்கள். அதனால் நீர் பாய்ச்ச நான் வந்துள்ளேன்.



சித்து, நீ வந்தாலே சந்தோஷம்தான். ஏதாவது பாடு. உன் பாட்டைக் கேட்டுக் கொண்டே வேலை செய்தால் அலுப்பே தெரியாது.

5

சித்து பாடினான். பாட்டின் இனிமையால் சுற்றுப்புறமே அமைதியானது. பறவைகள் பறப்பதை நிறுத்தி கிளைகளில் அமர்ந்து கேட்டன. மாடுகள் அசைபோட மறந்தன. உழவர்கள் தங்களை மறந்து நின்றார்கள்.

உலக உயிர்கள் மட்டுமல்ல, சரளா தேவியும் சித்துவின் சங்கீதத்தில் லயித்துப் போனார்.

6

சித்து பாடுவதைக் கிணற்றின் மீது அமர்ந்து மெய் மறந்து கேட்டுக் கொண்டிருந்தாள் சரளா தேவி.



7

ஒரு நேரத்தில் தேவி தன்னை மறந்து கைத் தாளமிட்டாள். சித்து திடுக்கிட்டான். வந்திருப்பது தேவிதான் என்பதை அவன் அறியவில்லை. மற்றவர்கள் மெய்மறந்து பாட்டில் லயித்து இருந்தார்கள். அவர்களுக்கு தேவியின் தரிசனமும் கிடைக்கவில்லை.

8

சித்து ஏன் பாட்டை நிறுத்திவிட்டாய்? அருமையாகப் பாடுகிறாய்! வேண்டும் வரம் கேள்?




9

நீதான் சரளா தேவி என்று எப்படி நம்புவது? அதோடு இப்படி திடீரென்று வரம் தருகிறேன் என்றால் எதைக் கேட்பது? யோசித்து அப்புறம் கேட்கிறேன்.




10
சித்து பாடிக் கொண்டே நீர் இறைத்ததால் மூங்கில் கிணற்றில் விழுந்துவிட்டது. அதனால் அப்பாவும் அண்ணன்களும் சித்துவை நன்றாக அடித்து தண்டித்தார்கள்.
எதையும் ஒழுங்காகச் செய்ய மாட்டாய் நீ. மூங்கிலையும் தொலைத்துவிட்டு நிற்கிறாயே!


11
ஆ! வலி தாங்க முடியவில்லையே! அந்தத் தேவி வரம் தருவதாகக் கூறினாளே, இப்போது கூப்பிட்டால் அந்த தேவி வரம் தருவாளா?


12
நினைத்ததும் சரளா தேவி பிரசன்னமானார்.
என் அருமைச் சித்து, என்ன வரம் கேட்பது என்று முடிவு செய்தாயா?
தேவி, முதலில் உடல்வலியைப் போக்கு. அதுபோதும்.


13
உனக்கு இனிமேல் வலிக்காது. உனக்கு என்ன வேண்டும் என்பதை நானே முடிவு செய்துவிட்டேன். இங்கே வா. உன் நாக்கை நீட்டு.
தேவி சித்துவின் நாக்கின் மீது திரிசூலத்தை எழுதுகோலாக்கி எழுதினார்.

**14**

இனி நீ மாடு மேய்க்கும் சித்து அல்ல. உன் நாவில் வால்மீகியும் வியாசரும் குடி கொள்ளப் போகிறார்கள். ஒரிய மொழியில் இறவாத இலக்கியங்களைப் படைத்து உன்னத நிலையை அடைவாய்.



தேவியின் அருள் பெற்றதும் சித்து மயங்கி விழுந்தான்.

**15**

சரளா தேவியின் அருளால் சித்து அறிவிற் சிறந்த சான்றோன் ஆனார்.

எல்லோருக்கும் ஏளனப் பொருளாக இருந்த சித்து ஒரிய மொழியில் கவி மழை பொழிந்தார். ராமாயணத்தையும் மகாபாரதத்தையும் ஒரிய மொழியில் பாமரருக்கும் புரியும்படிப் படைத்து மக்கள் போற்றும் சரளாதாசர் ஆனார்.

**16** பல பக்தி காவியங்களைப் படைத்த சரளாதாசர் சமுதாயப் பொறுப்புணர்வு மிக்கவராகவும் விளங்கினார். ஒருநாள் அவரைத் தேடி அந்த நாட்டு படை வீரர்கள் வந்தார்கள்.

மன்னிக்க வேண்டும் கவிஞரே! நம் நாட்டின் மீது பகைவர்கள் படையெடுத்து வருகிறார்கள். வீட்டுக்கு ஒருவர் படையில் சேர வேண்டும் என்பது மன்னர் உத்தரவு. திருவுளச் சீட்டு தங்கள் பெயருக்கு விழுந்திருக்கிறது.



வேண்டாம் மகனே! நீ கவி பாடு. போருக்குப் போகாதே. நானோ, உன் அண்ணன்களோ போகிறோம். உன் கவிதைத் தொண்டு தடைபட வேண்டாம்.

**17** தந்தையைச் சமாதானப்படுத்தி சரளாதாசர் போரில் கலந்து கொண்டு நாட்டின் வெற்றிக்கு உதவினார்.

ஒரிய மொழியின் 'மக்கள் கவிஞர்' என்றும் 'இலக்கியத் தந்தை' என்றும் போற்றப்படும் சரளாதாசர் இயற்றிய ராமாயணம் 'வில்லங்க ராமாயணம்' என்று போற்றப்படுகிறது.



சீடர்: ஒருவருக்கு எப்படி இறைக் காட்சி கிட்டும்?



அன்னை ஸ்ரீசாரதா தேவி: இறைவனின் கருணையால்தான் இறைக் காட்சி கிட்டும். ஆனால் தியானமும் ஜபமும் செய்து கொண்டிருக்க வேண்டும். இவை மனதிலுள்ள மாசுகளைப் போக்குகிறது. பிரார்த்தனை போன்ற ஆத்ம சாதனைகளைச் செய்தல் வேண்டும். மலரை உபயோகிக்கும் பொழுது அதிலிருந்து நறுமணம் வருகிறது. சந்தனக் கட்டையைக் கல்லில் உரைக்கும்பொழுது நறுமணம் கிளம்புகிறது. அதே போன்று இடையறாது நினைத்துக் கொண்டிருப்பது ஆன்மிக விழிப்பை நல்குகிறது. ஆசையற்ற நிலை உன்னிடம் வருமானால், நீ அந்தக் கணத்திலேயே இறையனுபூதி பெறுவாய்.

# வீரத்தாய் சாந்தாபாய்




1
வீரர்களே! நமது சிவாஜி மகாராஜா தலைநகரில் இல்லாத இந்தச் சமயம் பார்த்து நம் எதிரி அவுரங்கசீப் நமது நாட்டின்மீது படையெடுத்து வருகிறான்.
நாம் வீர மராட்டியர் என்பதை அவுரங்கசீப்பிற்குப் புரியவைப்போம்.
ஆம்! மன்னர் இல்லை என்பதால் நாம் கோழைகளா என்ன?


2
நமது வீரத்தையும் தேசபக்தியையும் நிரூபிக்க இதுவே ஏற்ற நேரம்.
பகைவனை முறியடித்து நாம் வெற்றியடைவது உறுதி. சத்ரபதி சிவாஜி மகாராஜா வாழ்க!


3
நாட்டின் பல குடும்பங்களிலிருந்தும் வாலிபர்கள் படையில் சேர்வதற்கு முன் வந்தார்கள். சாந்தாபாய் என்பவரின் வீட்டில்...
மகனே! உனக்கு வீரத் திலகம் இடுகிறேன். எதிரியை வென்று வெற்றி வீரனாகத் திரும்பி வா. ஜெய் பவானி!
ஆம் தாயே! நம் தாய்நாட்டைக் காப்பதைவிட வேறு என்ன பாக்கியம் இருக்க முடியும்?
மகனே! உன்னைப் பெற்றதன் பயனை இன்றுதான் உணர்கிறேன். நீயும் நானும் நாட்டிற்கான கடமையை நிறைவேற்றுவதற்கான தக்க தருணம் வந்துள்ளது.


4
சிறிது நேரம் கழித்து சாந்தாபாய் தன் தோழியிடம்...
தோழி, அன்னை பவானியின் அருளால் என் மகன் எதிரிகளை நிச்சயம் புறமுதுகிட்டு ஓடச் செய்வான்.
உன் மகன் சிறந்த வீரன்தான். அவன் வெற்றியுடன் திரும்புவான்.

5

சாந்தாபாயின் வீட்டுத் திண்ணையில் அப்போது ஒரு சந்நியாசி வந்தமர்ந்தார்.
சாந்தாபாய் அவரை உபசரித்து, பேசிக் கொண்டிருந்தார்.

சுவாமிஜி, இந்த முகலாயர்களின் தீய எண்ணத்தைப் பாருங்கள். நம் மன்னர் தலைநகரில் இல்லாத சமயம் பார்த்துப் படையெடுத்து வருகிறார்களாமே?

ஆம் அம்மா, உன் மகனைக்கூட நீ போருக்கு அனுப்பி இருக்கிறாய் போல் இருக்கிறதே.

எனக்கு அவன் ஒரே மகன் சுவாமி. இருந்தாலும் தாய் நாட்டுச் சேவை மிக முக்கியமல்லவா?

6

அப்போது சாந்தாபாயின் மகன் சென்ற வேகத்தில் சோர்ந்தவாறு திரும்பி வந்தான்.

மகனே, என்ன நடந்தது?

அம்மா! என்னைப் படையில் சேர்த்துக் கொள்ள மறுத்துவிட்டார்கள்.

ஏன்?

நான் உனக்கு ஒரே மகனாம். உன்னைக் காக்கும் கடமை எனக்குள்ளதால்...

7

ஒரே மகனென்றால் நாட்டிற்கு அர்ப்பணிக்கக் கூடாதா?

இல்லையம்மா! போரில் எனக்கு ஏதாவது நேர்ந்துவிட்டால் உங்களைக் கவனித்துக் கொள்ள எவரும் இருக்க மாட்டார்களே!

8

இதென்ன விந்தை! நாம் பிறந்த புண்ணிய பூமிதான் நம் தாய். பெற்ற தாயின் சேவையைவிடப் தாய் நாட்டின் சேவை பெரிதல்லவா! நாடு பிறர் கைவசமாகக் கூடாது. நாட்டைக் காப்பாற்ற நீ போருக்குச் செல்லத்தான் வேண்டும்.

நான் எவ்வளவு மன்றாடியும் என்னை நம் தளபதிகள் சேர்த்துக் கொள்ள மறுத்துவிட்டார்கள் அம்மா. நான் என்ன செய்வேன்?

9

அதைக் கேட்டு சாந்தாபாய் ஒரு கணம் ஆழ்ந்து யோசித்தார். பிறகு...




10

சாந்தாபாய் வேகமாக உள்ளே சென்று பளபளக்கும் வாளுடன் திரும்பினார். மகனும் சந்நியாசியும் திகைத்து நின்ற ஒரு கணத்தில் ....




இவ்வாறு கூறியபடி மகனும் சந்நியாசியும் தடுப்பதற்குள் வாளால் தன் சிரத்தைக் வெட்டிக் கொண்டார் சாந்தாபாய்.

11

அதிர்ச்சியடைந்த மகன் சிறிது நேரம் அழுதான். பிறகு வீராவேசத்துடன்...



12 அப்போது திடீரென சந்நியாசி தம் வேடத்தைக் கலைத்தார். அது சத்ரபதி சிவாஜியேதான். சாந்தாபாயின் மகன் அதிர்ந்து நின்றான். மகாராஜா அவனைத் தழுவிக் கொண்டார்.




13




14

என் மகனே! மரணம் நேர்வதைத் தடுப்பதற்கில்லை என்றால் கற்களைப் போலவும் கட்டைகளைப் போலவும் செத்து மடிவதைவிட வீரர்களைப் போல இறப்பது மேலானதல்லவா?

நிலையில்லாத இந்த உலகிலே இரண்டொரு நாள் அதிகமாகவே வாழ்ந்து விடுவதனால் பெறப் போகிற பயன்தான் என்ன? வாழ்க்கை என்னும் கத்தி துருப்பிடித்து அழிந்து போவதைவிட, தேய்ந்து அழிவதே மேலானது. அதிலும் குறிப்பாக, மற்றவர்களுக்குச் சிறிதளவாவது நன்மை செய்வதற்காக அழிவதே மேல்.

-சுவாமி விவேகானந்தர்





# மாங்குடி மருதனார்

**1** மாங்குடி மருதனார் தலைமையில் புலவர்கள் கூடியிருந்தனர்.




**2**




**3**



4




மன்னர் அதைக் கேட்டுக் கொண்டதாகத் தெரியவில்லை.

5




6

மதுரைவாழ் சொக்கநாதப் பெருமானே! மன்னரின் பொறுப்பின்மையை நீக்க நீயே அருள வேண்டும்.

7

புலவரே பாருங்கள், எவ்வளவு அழகான ஓவியங்கள்! எல்லாம் பேசாமல் பேசுகின்றன! மனதில் தோன்றும் சிந்தனைகளுக்கும் காணும் காட்சிகளுக்கும்கூட வீர உணர்வுகளைத் தட்டியெழுப்பும் சக்தி உண்டு என்பதை நிரூபித்துக் காட்டியுள்ளார் நம் ஓவியர். ஓவியரே,காலங்கடந்து நிலைத்திருக்கப் போகும் உங்கள் படைப்புகளுக்கு இதோ எனது பரிசு.

8

மன்னரிடமிருந்து முத்து மாலையை வாங்குமுன் முத்துமணி திடீரென மயக்கமடைந்து கீழே சாய்ந்தார்.




9




10

சில நாட்களுக்குப் பிறகு...




11



12




13




இதன் பிறகு பாண்டியன் நெடுஞ்செழியனின் ஆட்சியில் மக்களிடம் அமைதியும் மகிழ்ச்சியும் நிலவின.

14

மாங்குடி மருதனாரின் 'மதுரைக் காஞ்சி' என்ற நூல் 782 அடிகள் உடையது. மதுரையின் தொன்மையையும் பெருமையையும் பாண்டிய மன்னர்களின் வீரத்தையும் பாடும் இதன் இறுதிப் பகுதி மனித வாழ்க்கையின் நிலையாமையையும் உணர்த்துகிறது. இது பத்துப் பாட்டில் 6-வது நூலாக இடம் பெற்றுள்ளது.

15

''வாழ்க்கை நிலையற்றது.
கலைகின்ற கனவு அது.
அழகும் வாலிபமும் வாடிவிடும்...
செல்வம் போய்விடும்,
அழகு அழிந்துவிடும்,
வாழ்க்கை வாடிவிடும்,
ஆற்றல்கள் அழிந்துவிடும்.
ஆனால் கடவுள் என்றும் இருக்கிறார்,
அன்பு எப்போதும் இருக்கிறது.''

- சுவாமி விவேகானந்தர்



# அறிவுத் தாகம் அனைத்தையும் தரும்

**1**

ஜனகரின் குலத்தில் தோன்றிய கேசித்வஜன், காண்டிக்ரீவன் என்ற இரண்டு அரசர்களும் ஒன்றுவிட்ட சகோதரர்கள். கேசித்வஜன் ஆன்ம வித்யையிலும், காண்டிக்ரீவன் வைதிகச் சடங்குகளிலும் தேர்ந்தவர்கள். கேசித்வஜன் திடீரென காண்டிக்ரீவன் மீது படையெடுத்து அவனது நாட்டைக் கைப்பற்றினான். தோற்ற காண்டிக்ரீவன் தன் மக்களுடன் காட்டில் ஒளிந்து வாழ்ந்து வந்தான்.

**2**




**3**




**4**

முனிவரிடம் நடந்ததைக் கூறி அவரிடம் பரிகாரத்தைக் கூற வேண்டினர்.



5 மந்திரிகள், புரோகிதர்கள் சூழ அரசன் பார்கவ முனிவரிடம் சென்று கேட்டான். அவர் தமக்கும் தெரியாது என்றும் சுனக முனிவரிடம் கேட்டால் பரிகாரம் கிடைக்கும் என்றும் கூறினார். அரசன் சுனக முனிவரிடம் சென்றான்.




6




7




8 காண்டிக்ரீவர், கேசித்வஜனைத் தனிமையில் அழைத்து பரிகாரத்தைக் கூறி அனுப்பினார். யாகம் இனிதே நிறைவுற்றது.




9
காண்டிக்ரீவரின் பேருதவியால் யாகம் இனிதே நிறைவேறி விட்டது. யாகத்தில் பங்கேற்ற அனைவருக்கும் திருப்தியாக தட்சிணைகள் வழங்க ஏற்பாடு செய்யுங்கள்.
அப்படியே செய்கிறேன் மன்னா.


10
முனிவர்களே, அனைவருக்கும் தட்சிணைகள் தந்தும் என் மனம் ஏனோ அமைதி பெறவில்லையே?
மன்னா, உங்களுக்குத் தோஷ பரிகாரம் உபதேசித்த காண்டிக்ரீவர் குருவுக்கு ஒப்பானவர். அவருக்கு குரு தட்சிணை கொடுக்க வேண்டாமா?
ஆம்! என் மன அமைதியின்மைக்கு அதுதான் காரணம். காண்டிக்ரீவருக்கு தட்சிணை தர இதோ செல்கிறேன்.


11
ஆ, யாகம் முடிந்த பின் காரியம் ஆகி விட்டதென்று என்னைக் கொல்ல வருகிறானோ!
காண்டிக்ரீவா, பொறுமை! இப்போதும் நான் உன்னைக் கொல்ல வரவில்லை. உன் உதவியால் என் யாகம் பூர்த்தியானது. அதனால் உனக்குத் தட்சிணை தரவே வந்தேன். என்ன வேண்டும்? யோசித்துச் சொல். தருகிறேன்.

11

காண்டிக்ரீவர், மந்திரிகளுடன் தனிமையில் ஆலோசித்தார்.




12




13




14

கேசித்வஜரிடம் ஆன்ம சாதனைகளைக் கற்றார் காண்டிக்ரீவர்.




15



உலகிற்கு யார் ஒளி தரப் போகிறார்கள்? பண்டைக் காலத்தில் தியாகம்தான் வாழ்க்கைக்கு உரிய விதியாக இருந்தது. இனி வரப் போகும் பலகோடி நூற்றாண்டுகளுக்கும் இந்த விதி அப்படியேதான் இருக்கப்போகிறது. பலரின் நன்மைக்காக, அனைவரின் சுகத்திற்காக, உலகில் தைரியமும் சிறப்பும் பெருமளவில் பெற்றிருப்பவர்கள் தங்களைத் தியாகம் செய்து கொண்டுதான் ஆக வேண்டும். என்றென்றும் நிலைத்த மாறாத அன்பும் கருணையும் பொருந்திய பல நூறு புத்தபிரான்கள் இப்போது தேவைப்படுகிறார்கள்.

- சுவாமி விவேகானந்தர்



# ஜப பலன்

**1** கௌசிக முனிவர் பல வருடங்கள் காயத்ரி ஜபம் செய்து வந்தார். அதனால் மகிழ்ந்து காயத்ரி தேவி அவருக்குக் காட்சி அளித்தார்.




**2** கௌசிக மகரிஷி மீண்டும் ஜப சாதனை மேற்கொண்டார். ஆயிரம் வருடங்கள் கழிந்தன. ஒரு நாள் தர்மதேவன் கௌசிகர் முன் தோன்றினார்.

முனிவரே! உங்களது ஜப சாதனை முடிவடைந்தது. இனி நீங்கள் இந்த மண்ணுலகை விட்டு என்னுடன் சொர்க்கத்திற்கு வாருங்கள்.



வணங்குகிறேன் தர்மதேவா! நான் எதையும் கருதி ஜபம் செய்யவில்லை. இவ்வளவு காலம் ஆன்மிகச் சாதனைகள் செய்வதற்குத் துணையாக இருந்த என் உடலை விட்டு நான் சொர்க்கம் செல்ல விரும்பவில்லை.

**3** ஆச்சரியமாக உள்ளதே! இந்த உடல் ஏதோ ஒரு நாள் கட்டாயமாக விடவேண்டிய கேவலமான ஒன்று. சொர்க்க சுகங்கள் முன்பு இந்த உடல் எம்மாத்திரம்?

சொர்க்க சுகங்கள் உயர்ந்தவையாக இருக்கலாம்; ஆனால் நிலையற்றவை. அதனால் நான் சொர்க்கம் செல்ல விரும்பவில்லை.



4

அந்த நேரத்தில் இக்ஷ்வாகு மகாராஜா அங்கு வந்தார். அவரை கௌசிக முனிவர் வரவேற்றார்.




முனிவரே! நாங்கள்தான் தங்களைப் போன்றவர்களுக்குக் கொடுக்க வேண்டும். அதனால் தங்களுக்கு என்ன வேண்டுமோ அதைக் கேளுங்கள். செய்து தருகிறேன்.

5




6

மகரிஷி! அப்படியானால் உங்களுடைய ஜப பலனைத் தருவீர்களா?

ஓ, அதற்கென்ன? தாராளமாக ஏற்றுக் கொள்ளுங்கள்!





7

முனிவரே! உங்களது ஜப பலனைப் பெறுவதற்கு முன்பு அதன் பயனைச் சற்று விவரியுங்கள்.




8

சற்று முன்பு என் ஜப பலனை வேண்டுமென்று கேட்டீர்கள். அதற்குள் அதை வேண்டாம் என்கிறீர்களே? இது தர்மத்திற்கு முரண்பாடு அல்லவா?



இதில் என்ன முரண்பாடு? போரிடுவது அரசனின் இயல்பு. இதுவரை நான் உங்களிடம் வாக்கு யுத்தம் செய் ததாக நினைத்துக் கொள்ளுங்கள்.

9




10

இருவருக்கும் இடையில் வாக்கு வாதங்கள் அதிகரித்தன. அந்த நேரத்தில் தர்மதேவன் அங்கு வருகை தந்தார். சொர்க்கமே அவரோடு உடல் தரித்து வந்தது.




11

தர்மதேவன் இருவரது வாதங்களையும் கேட்டு ஆராய்ந்து ஒரு முடிவு கூறினார்.




12

அதன்படி மகரிஷி இக்ஷ்வாகு மன்னரின் யாக பலனை ஏற்க வேண்டியதாயிற்று. மன்னரும் அவ்வாறே மகரிஷியின் ஜப பலனை ஏற்றுக் கொண்டார். அதனால் தேவர்கள் மகிழ்ந்தனர்.



**13** மன்னரது யாக பலனை ஏற்றுக் கொண்ட கௌசிக முனிவர் யோக நிஷ்டை அடைந்தார். அவரது ஆன்மா ஜோதி ரூபத்தில் தோன்றி பரப்பிரம்மத்தில் லயமானது.



**14** முனிவரின் ஜப பலனை ஏற்ற மன்னர் பிரம்மதேவனின் வாயில் நுழைந்து பிரம்மசித்தி பெற்ற யோகியானார். ஜப பலனைப் பெற்றவர்களும்கூட யோகிகளின் நற்கதியை அடைவார்கள் என்பது நிரூபணமானது.



**15** இந்திரியங்களைக் கட்டுப்படுத்தி அகங்காரத்தை விட்டுவிட்டு தூய மனதுடன் பிரம்ம நிஷ்டையுடன் மந்திர ஜபம் செய்பவர்கள் உத்தம கதியைப் பெறுவர். என்னே காயத்ரி மந்திரத்தின் மகிமை!



**16** மந்திரம் உடலைத் தூய்மையாக்குகிறது. இறைநாமத்தை உச்சரிப்பதால் மனிதன் தூயவனாகிறான். ஆகையால் அவரது திருநாமத்தை எப்போதும் ஜபித்துக் கொண்டிரு.

மன ஒருமைப்பாட்டுடன் இரண்டு நிமிட நேரம் கடவுளைப் பிரார்த்திப்பதும் தியானிப்பதும், அதில்லாமல் பல மணி நேரம் செய்வதைவிடச் சிறந்தது.

– அன்னை ஸ்ரீசாரதாதேவி



# பக்தகோகிலம் பூந்தானம்



**1** கிருஷ்ண பக்தர் பூந்தானத்திற்கு குருவாயூரப்பன் கண்கண்ட தெய்வம். அவர் 1547-இல் கேரளாவிலுள்ள அங்காடிபுரம் என்ற ஊரில் நம்பூதிரி பிராமண குலத்தில் பிறந்தார்.

**2** குருவாயூரில் அவரது ஒரே மகனுக்கு அன்னபிராசனம் செய்தபோது சூடான பாயசத்தில் அவன் தவறி விழுந்து இறந்துவிட்டான். பூந்தானத்திற்கு இந்தத் துயரத்தால் பகவான் மீது பக்தி பெருகியதேயன்றிக் குறையவில்லை.



**3** இந்த பக்த சிரோமணிக்கா இந்தச் சோதனை!



குருவாயூரப்பா, குழந்தையைக் கொடுத்ததும் நீ; அதைத் திரும்ப எடுத்துக் கொண்டதும் நீதான். எது நடந்தாலும், உன் புகழ் பாடுவதை மட்டும் நான் நிறுத்த மாட்டேன்.

இந்தக் காலகட்டத்தில் பக்தி ரசம் சொட்டும் பாடல்கள் பலவற்றை பூந்தானம் இயற்றினார். ‘ஞானப்பானா’ என்ற புகழ் பெற்ற அப்பாடல்கள் கோவில்களிலும் இல்லங்களிலும் பாடப்பட்டு வந்தன.

**4** ஸ்ரீகிருஷ்ணன் மீது ஆழ்ந்த பக்தியுடன் பூந்தானம் தியானித்தார். அதனால் ஸ்ரீகிருஷ்ணன் தன் பால லீலைகளை அவருக்குக் காட்டி அருளினான்.






6

பூந்தானம் 'பாஷாகவி' என்று பெயர் பெற்று, 'நூற்றெட்டு ஹரி', 'ஸ்ரீகிருஷ்ண கர்ணாம்ருதம்', 'குசேல விருத்தம்' போன்ற பல மலையாளக் காவியங்களை இயற்றினார். அவற்றை 'ஸ்ரீநாராயணீயம்' இயற்றிய சம்ஸ்கிருத பண்டிதரான கவி மேப்பத்தூர் ஸ்ரீநாராயண பட்டத்திரி அங்கீகரித்தால் நல்லதென்று நினைத்து பூந்தானம் அவரிடம் சென்றார்.




7

பூந்தானம் அவ்வாறு கூறியதும் பட்டத்திரிக்குக் கோபம் வந்துவிட்டது.




8

பூந்தானம் எவ்வளவோ வேண்டியும் அவர் கோபம் தணியவில்லை.



**9**

சில வருடங்களுக்கு முன்பு நாராயண பட்டத்திரி முடக்குவாதத்தால் அவதிப்பட்டுக் கொண்டு இருந்தார். அந்த நோய் நீங்க குருவாயூரப்பனை உருக்கமாக வேண்டினார். அந்தப் பிரார்த்தனைதான் 'ஸ்ரீமந் நாராயணீயம்' என்று பெயர் பெற்றது. பிரார்த்தனையினால் நோய் நீங்கி குணமடைந்தார். ஆனால்..., இப்போது திடீரென்று மீண்டும் அதே நோய் அவரைப் பற்றிக் கொண்டது.

**10**




பட்டத்திரி வருந்தியவாறே உறங்கிவிட்டார்.

**11**

கனவில் ...






**12**



**13** பட்டத்திரி அந்தப் பாடல்களைப் படித்துச் சுவைத்தார். அவற்றின் பக்தி ரசத்தில் பரவசமானார்.




**14** சிறிது காலத்திற்குள் பட்டத்திரியைப் பீடித்திருந்த நோயும் அகன்றது. தள்ளாத வயதிலும் பூந்தானம் தவறாது குருவாயூர் சென்று தரிசனம் செய்தார். பிறகு அவரால் செல்ல இயலவில்லை.




**15** ஸ்ரீகுருவாயூரப்பன் பூந்தானத்தை வைகுந்தத்திற்கு அழைத்துச் செல்ல அருள்பாலித்தார். அவர் வைகுந்தம் செல்கிறார் என்பதை யாரும் நம்பவில்லை.

ஆனால் அவரது வேலைக்காரிக்குப் பக்தியும் நம்பிக்கையும் இருந்தது. அதனால் அவருடன் அவள் வைகுந்தம் சென்றாள்.



பூந்தானம் 93 ஆண்டுகள் வாழ்ந்து 1640-இல் இறைவனடி சேர்ந்தார்.

**16** குளத்தில் மீன்கள் எவ்வளவு தூரத்திலிருந்தாலும் ஓர் இரையைப் போட்டதும் நாலா பக்கங்களிலிருந்தும் அதனிடம் ஓடி வருகின்றன. அதுபோல பக்தியும் சிரத்தையும் உடைய பக்தனிடம் ஈசுவரன் வெகு வேகமாக வருகிறான்.

-பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்



# சவம் உண்ட தேவன்





ஆதாரம்: வால்மீகி ராமாயணம், உத்தர காண்டம் 77-வது அத்தியாயம்.

1 ஒருமுறை அகத்தியரின் ஆசிரமத்திற்கு ராம லட்சுமணர்கள் விஜயம் செய்தார்கள். அகத்தியர் அவர்களை உபசரித்தார்.







4 அகத்தியர் தாம் ஆபரணங்களைப் பெற்ற விசித்திரமான வரலாற்றைக் கூற ஆரம்பித்தார்.









அகத்தியர் ஏரிக்கரையை அடைந்ததும் அங்கு வலிமையும் வனப்பும் வாய்ந்த ஒரு சவத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டு நின்றார்.




8 அப்போது தேவலோகத்திலிருந்து ரதத்தில் ஒருவர் வந்து இறங்கினார். அவர் ஏரியில் நீராடி அங்கு கிடந்த பிணத்தை நகங்களால் கிழித்து உண்டார். பிறகு மீண்டும் ஏரியில் மூழ்கிவிட்டு கரை ஏறினார். சவம் எவ்வித மாறுதலுமின்றி முன்போல் ஆகிவிட்டது. அதை அகத்தியர் கவனித்தார்.





10



அதோ, அந்த உடலில்தான் நான் விதர்ப்ப
நாட்டு மன்னனாக இருந்தேன். நான்
ஆண்ட பிறகு என் தம்பிக்கு முடிசூட்டி
னேன். பிறகு காட்டிற்குச் சென்று கடுந்
தவம் செய்தேன். யோக முறையில்
உடலை நீத்து பிரம்மலோகம் அடைந்
தேன்... ஆனால் என் விதி மிகவும் வலியது.

11

பிரம்மலோகத்தில் இருந்தபோதும் விதர்ப்ப மன்னன் கடும்
பசியாலும் தாகத்தாலும் அவதியுற்றான். தன் துன்பத்தை
நீக்குமாறு பிரம்மாவிடம் சென்று முறையிட்டான்.






விதர்ப்பா, உன் சுயநலத்திற்காகவே நீ தவம் செய்தாய்.
தவம் செய்திருந்தாலும் நீ தான தர்மம் செய்யவில்லை. அதன்
விளைவுதான் இது. இனி நீ பூலோகம் சென்று தினமும் உன்
சவத்தையே உண்பாய். எவ்வளவு உண்டாலும் உன் சவம்
அழியாமல் அப்படியே இருக்கும்.

12




தன் கதையை அகத்தியரிடம் கூறி முடித்தார் தேவன்.
அகத்தியர் தேவனிடம் கருணை கொண்டார்.

13

முனிவரே, என்
விமோசனத்திற்காக அகத்தியரின்
வரவை எதிர்பார்த்திருக்கிறேன்.



14

தேவன் அகத்தியரிடம் தனது ஆபரணங்களை அளித்தார்.




15




16






சுயநலம், சுயநலமின்மை என்பவற்றைத் தவிர கடவுளுக்கும் சாத்தானுக்கும் எவ்வித வேறுபாடும் இல்லை. கடவுளுக்குத் தெரிந்த அளவுக்குச் சாத்தானுக்கும் எல்லாம் தெரியும். கடவுளுக்குச் சமமான ஆற்றல்கள் சாத்தானுக்கும் உண்டு.
ஆனால் தெய்விகத்தன்மை மட்டும்தான் அதனிடம் இல்லை.
எனவே அது சாத்தானாகவே இருக்கிறது.

-சுவாமி விவேகானந்தர்





# பொன்மேனி அளித்த புனிதன்

ஆதாரம்: தட்சிணாமூர்த்தி திருவருட்பா மூலமும் வள்ளலார் கோயில் தலவரலாறும் அடங்கிய கையடக்க நூல் - தருமையாதீன வெளியீடு.

**1** கண்வ மகரிஷி குமரித் தீர்த்தத்தில் நீராடிவிட்டு, கங்கையில் நீராடச் சென்று கொண்டிருந்தார். வழியில் மயிலாடுதுறையில் காவிரியின் வடக்கே அவர் சென்று கொண்டிருந்த போது மூன்று பெண்களைக் கண்டார்.










4
தினசரி ஏராளமானோர் எங்களிடத்தில் மூழ்கித் தங்கள் பாவங்களைப் போக்கிக் கொள்கின்றனர்.


5
அந்தப் பாவங்கள் அனைத்தும் எங்களைப் பற்றிக் கொள்கின்றன.
அதனால்தான் எங்களுக்கு இந்தக் கோர வடிவம்!
நதிதேவதைகளே! இதற்குப் பரிகாரம்தான் என்ன?


6
இதோ, முதலில் இங்கு உறையும் வழிகாட்டும் வள்ளலாகிய சிவபெருமானை வழிபட வேண்டும்.
அடுத்து இங்கு ஓடும் காவிரியில் நீராட வேண்டும்.
இதுவே எங்கள் கோர உருவத்தை நீக்கும் வழி.
அப்படியா! தாயே சரஸ்வதி! வழிகாட்டும் வள்ளலாரின் பெருமையை எனக்கும் கூறி அருள் வேண்டும்!


7
ஒரு சமயம் ரிஷபதேவர்....

8




9

சிவபெருமான் தமது சடாமகுடத்திலிருந்து சிறு முடியைக் கிள்ளி ரிஷபதேவரின் மீது போட்டார். உடனே ரிஷபர் பாரம் தாங்காமல் தவித்தார்.




10

பாரம் தாங்காமல் சற்று நேரத்தில் ரிஷபதேவர் கீழே சுருண்டு விழுந்தார்.




11

அதன்படி ரிஷபதேவர் மயிலாடுதுறையில் சிவனை மனமுருகி வழிபட்டார். சிவபெருமான் அவருக்குக் காட்சி தந்தார்.



**12** சரஸ்வதி கண்வமகரிஷியிடம் வழிகாட்டும் வள்ளலாரின் பெருமையைக் கூறி முடித்தாள். உடனே மகரிஷி அவர்களிடம்...







**13** அவ்வாறு வழிபட்டதால் கண்வருக்கு ஏழு நாட்களிலேயே சிவஞானம் கிட்டியது. நதிதேவதைகள் பொன் மேனியும் புதுப் பொலிவும் பெற்றார்கள். அவர்களுக்கு சிவபெருமான் ரிஷபத்தின் மீது அமர்ந்த கோலத்தில் மேதா தட்சிணாமூர்த்தியாகக் காட்சி அளித்தார்.



**14** யாரானாலும் தன் பாவங்களை ஒரு மகாபுருஷரிடம் வாயால் சொல்லி அவற்றிலிருந்து விடுதலை பெறலாம்.
முன்வினைப் பயன் என்பது தவிர்க்க இயலாதது. ஆனாலும், இடையறாது நாம ஜபம் செய்வதன் மூலம் அதைக் குறைத்துக் கொள்ளலாம். மனம் ஒன்றிப் பிரார்த்தனை செய்ய வேண்டும். பொறுமை வேண்டும். நடுவில் வரும் சோதனைகளை அமைதியாக ஏற்கும் பக்குவம் வேண்டும்.

\- தூய அன்னை ஸ்ரீசாரதாதேவி



# கண்ணனே கதி

மூலம்: மகாபாரதம்

**1** குருக்ஷேத்திரத்தில் பதின்மூன்றாம் நாள் போரில் அபிமன்யு கொடூரமாகக் கொல்லப்பட்டான். துரோணர், கர்ணன், துச்சாதனன், துரியோதனன், கிருபர், அசுவத்தாமன் ஆகிய ஆறு பேரும் அந்த மாவீரனைக் கொன்றார்கள்

**2** இந்தச் செய்தியை அறியாத அர்ஜுனன் போர்க்களத்தில் வேறோர் இடத்தில் இருந்தான்.

கிருஷ்ணா, என்ன காரணத்தாலோ என் மனம் மிகவும் அலைபாய்கிறது. தீய சகுனங்கள் பல வற்றைக் காண்கிறேன். ஒருவேளை போரில் தர்மருக்கு ஏதாவது ஆபத்து வந்திருக்குமோ?




**3** பாண்டவர் பாசறையில் அனைவரும் துக்கத்துடன் அமைதியாக உட்கார்ந்திருந்தார்கள். பாசறையில் ஜெய முழக்கம் இல்லை, வீரநாதம் எழவில்லை என்பதை வெகுதூரத்திலிருந்தே அர்ஜுனன் கவனித்தான்.

**4** கண்ணா, நிச்சயமாக நம் படையில் ஏதோ பேரிழப்பு நிகழ்ந்திருக்கிறது. நான் போரிலிருந்து பாசறைக்குத் திரும்பி வரும்போது வழக்கமாக அபிமன்யு வந்து என்னை வரவேற்பான். அவன் இன்று வரவில்லையே...?




**5** அபிமன்யு கொல்லப்பட்டதைக் கண்ணன் அறிந்தே இருந்தார். அதை அர்ஜுனன் அறிந்தால் புத்திரசோகத்தால் உடனே உயிரை விட்டுவிடுவான் என்பதால், கண்ணன் இந்திரனை எண்ணினான்.

தமது யோக சக்தியால் அர்ஜுனனுக்குத் தெரியாமல் இந்திரனிடம் ஏதோ கூறினார். அதன்படி இந்திரன் வயோதிக வேடத்தில் தோன்றினான்.

**6** அர்ஜுனா, பிரியமான என் புத்திரன் மாண்டுவிட்டான். அவன் இறந்த பிறகு நான் உயிர் வாழ்வதில் அர்த்தமேயில்லை.



அந்தணரே, கவலைப்படாதீர்கள். உங்கள் சோகம் எனக்குப் புரிகிறது. ஆனால் நம் அனைவருக்கும் எத்தனையோ பிறப்புகள், எத்தனையோ இறப்புகள். இறப்பது உடல் மட்டுமே. ஆன்மா அழிவதில்லை. தயவுசெய்து சாகும் எண்ணத்தை நீங்கள் விட்டுவிடுங்கள்.

**7** வந்த வயோதிகர் நெருப்பு மூட்டி அதில் விழ இருந்தார். அப்போது அர்ஜுனன் ஓடிச் சென்று அவரைத் தடுத்தான்.



அந்தணரே, நில்லுங்கள்! நீங்கள் சாகக் கூடாது. உங்களுக்கு அப்படி என்ன துக்கம் நேர்ந்தது? என்னிடம் சொல்லுங்கள், நான் அதை நிவர்த்தி செய்கிறேன்.


8
அர்ஜுனா, மற்றவர்களுக்கு அறிவுரை கூறுவது சுலபம்தான். எனக்கு என் மகன் இறந்ததுபோல, உனக்கும் நடந்தால் இப்படி நீ பேச மாட்டாய்.
இல்லை அந்தணரே, நான் சொல்வது...


நீ வேறு ஒன்றும் சொல்ல வேண்டாம். இந்தக் கண்ணபிரான் சாட்சியாகச் சொல். உன் மகனோ, உன் சகோதரர்களோ போரில் மாண்டால், 'நான் என் உயிரை விடமாட்டேன்' என்று உன்னால் உறுதிமொழி கூற முடியுமா? அப்படி நீ செய்தால் இதோ நானும் தீக்குளிப்பதை நிறுத்துகிறேன்.


9
அப்படி நான் உறுதி கூறினால், நீங்கள் சாகும் எண்ணத்தைக் கைவிட்டு விடுவீர்கள் அல்லவா?
நிச்சயமாக!
இந்தக் கண்ணன் மீது ஆணை. என் மகன் அபிமன்யுவே இறந்தாலும் நான் என் உயிரை மாய்த்துக் கொள்ள மாட்டேன். இது சத்தியம். அந்தணரே தயவுசெய்து நீங்கள் தீக்குளிப்பதை நிறுத்துங்கள்.
10
கண்ணனை வணங்கிவிட்டு அந்தணனாக வந்த இந்திரன் சொர்க்கம் சென்றான்.
பிறகு கண்ணனும் அர்ஜுனனும் பாண்டவ பாசறைக்குள் சென்றார்கள். அங்கு அவன் மூர்ச்சையாகி விழும்படியான அந்தச் செய்தி சொல்லப்பட்டது.


11
அண்ணா, இவ்வளவு மாவீரர்கள் இருந்தும் என் மகனை யாரும் காப்பாற்றவில்லையே, இவ்வளவுதானா உங்கள் வீரம்?


12
தம்பி, சிவபெருமானின் வரபலத்தால் ஜயத்ரதன் எங்களைத் தடுத்துவிட்டான். ஒரு நாள் மட்டும் உன்னைத் தவிர மற்ற பாண்டவர்களை வெல்லும் வரம் அவன் பெற்றிருந்தான். அதனால் தனியாகச் சென்ற அபிமன்யுவை எங்களால் காப்பாற்ற முடியவில்லை.

**13** பிறகு அபிமன்யுவை எப்படிக் கொடூரமாகக் கொன்றார்கள் என்பதை மற்ற பாண்டவர்கள் அர்ஜுனனுக்குச் சொன்னார்கள். அதைக் கேட்க கேட்க அர்ஜுனனின் தலை சுழன்றது. கண்கள் கலங்கி மூர்ச்சையானான். மிகுந்த சோகத்தினால் தன் உயிரை விட்டுவிட நினைத்து அவன் தீயில் குதிக்கச் சென்றான்.

**14**







உடனே அர்ஜுனன் மனம் மாறினான். கண்ணனின் கைகளைப் பற்றிக்கொண்டு கண்ணீருடன்...

**15**




**16** பிறகு அர்ஜுனன் ஆறுதல் பெற்று, ஜயத்ரதனைப் போரில் கொல்லுவேன் என்று வீரசபதம் செய்தான். போரில் வீரனாக வெற்றிவாகை சூடினான். கண்ணனின் அருளால் நீங்காப் புகழைப் பெற்றான்.

# அருள்மிகு அன்னை ஸ்ரீசாரதாதேவி




சாரதை, தம்பி தங்கைகளைப் பராமரிப்பது, சமைப்பது, பூணூல் செய்வது, புல் வெட்டுவது போன்றவற்றைச் செய்வாள். பொம்மைகள் செய்து விளையாடுவாள். காளி, லட்சுமி தேவியரை மலர்களால் அலங்கரித்துத் தியானிப்பாள்.





ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேஸ்வர காளி கோயிலில் பூஜாரியாக இருந்தார். ஒரு நாள் அவரே ஜெயராம்பாடியில் தம் மனைவியாகப் போகும் பெண் இருக்கிறாள் என்றார். அதன்படி ஐந்து வயது சாரதைக்கும் இருபத்துமூன்று வயதான ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் திருமணம் நடந்தது.




ஸ்ரீராமகிருஷ்ணர் கடுந்தவத்தில் ஈடுபட்டிருந்ததை அறியாதவர்கள் அவரைப் பித்தர் என்றனர்.

இதனால் ஜெயராம்பாடியில் இருந்த சாரதை மனம் கலங்கி அவரைக் காண தட்சிணேசுவரம் புறப்பட்டார். நீண்ட பயணத்தால் வழியில் சாரதை களைப்புற்றார், ஜுரமும் வந்தது. அப்போது ஒரு பெண்மணி வந்து...

நீ யாரம்மா?

சாரதா! நீ சீக்கிரம் குணமடைவாய். உனக்காகவே உன் கணவனை நான் தட்சிணேஸ்வரத்தில் வைத்துள்ளேன்.

நான் உன் சகோதரி.

அவ்வாறு கூறிவிட்டு மறைந்தவள் தட்சிணேஸ்வரத்து பவதாரிணிதேவியே.

தட்சிணேஸ்வரம் அடைந்த சாரதையை ஸ்ரீராமகிருஷ்ணர் அன்போடு வரவேற்றார். ஊரார் அவரைப் பற்றி உரைத்தது உண்மையல்ல என்று சாரதை உணர்ந்தார்.




நஹபத்தில் சாரதை தமது 13 வருட தவ வாழ்க்கையைத் துவக்கினார். ஸ்ரீராமகிருஷ்ணர், அவரது குடும்பத்தினர் மற்றும் பக்தர்கள் அனைவருக்கும் சாரதை அயராது பணிவிடை செய்தார்.







ஸ்ரீராமகிருஷ்ணரிடம் கற்ற ஆன்மிகப் பாடங்களைச் சாரதை பயின்றார். நஹபத்தின் படிகளில் அமர்ந்து அவர் ஜபமும் பிரார்த்தனையும் செய்வார். ஒருமுறை ஓடக்காரனின் பாடல்களைக் கேட்டுச் சமாதியில் ஆழ்ந்தார்.

இறைவா, நிலவைப் போல் என் மனமும் தூய்மையாக இருக்க வேண்டும். அதிலாவது சிறிது களங்கம் உள்ளது. என் மனதில் அதுகூட இருக்கக் கூடாது.

ஒருநாள்... பலஹாரிணி காளிபூஜையன்று ஸ்ரீராமகிருஷ்ணர் சாரதையை ஷோடசி தேவியாகப் பூஜித்தார்; தமது ஆன்மிகச் சாதனைகளின் பலன்களை எல்லாம் அவரிடம் சமர்ப்பித்தார்.

அன்னையே! எல்லா ஆற்றல் களுக்கும் தலைவியான திரிபுர சுந்தரியே! இவளது உடலையும் உள்ளத்தையும் புனிதப் படுத்தி இவளிடத்தில் எழுந்தருள்வாய் அம்மா!

தேவியாக வழிபடப்பட்டாலும் அன்னை சாரதை குடும்பக் காரியங்கள் அனைத்தையும் தொடர்ந்து செய்தார். தெய்விக சக்தியோடு சீடர்களுக்கும் பக்தர்களுக்கும் அன்புத் தாயாகவும் விளங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் தமக்குப் பின்னர் அன்னை சாரதை ஆன்மிகத்தில் அனைவருக்கும் வழிகாட்ட வேண்டும் என்று எண்ணினார். அதற்காகப் பல்வேறு மந்திரங்களையும் தியான முறைகளையும் கற்பித்தார்.





ஸ்ரீராமகிருஷ்ணர் தமது
அவதாரப் பணியை
நிறைவேற்றி மறைந்தார்.
அந்தச் சோகத்தை மறக்க
அன்னை சாரதை காசி,
பிருந்தாவனம் போன்ற
தலங்களுக்குச் சென்று
தவமியற்றினார்;
இடைவிடாது பிரார்த்தனை
செய்தார்.
ஸ்ரீராமகிருஷ்ணரின்
மறைவிற்குப் பிறகு
அவரது உறவினர்களின்
புறக்கணிப்பு, வறுமை
போன்ற சூழ்நிலையிலும்
அன்னை சிறிதும்
கலங்கவில்லை.
'இறைவனை மட்டும்
எப்போதும் சார்ந்திரு'
என்ற குருதேவரின்
உபதேசத்தை அன்னை
கண்ணெனப் போற்றினார்.

சுவாமி விவேகானந்தர் சிகாகோ
சர்வ சமயப் பேரவையில் கலந்து
கொள்ளும் முன் அன்னையிடம்
அனுமதி யும் ஆசியும் பெற்றார்.
அதன் பிறகே அங்கு வேதாந்த
முழக்கம் செய்தார்.



தமது சீடர்களுக்கு ஆன்மிக சக்தி வழங்கு
வதற்காக அன்னை பஞ்சதவம் புரிந்தார்.

இந்தச் சமயத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரின் துறவிச்
சீடர்கள் தங்க இடமின்றி அல்லல்பட்டார்கள்.
அன்னை அவர்களுக்காகப் பிரார்த்தித்தார்....




இவ்வாறு ராமகிருஷ்ண சங்கம் உருவாகி அன்னை சங்கஜனனி ஆனார்.




இந்து பண்பாட்டில்
ஊறியிருந்த அன்னை,
தமது மேலை நாட்டுச்
சீடர்களை ஏற்பாரா
என்று சுவாமிஜி
தயங்கினார். ஆனால்
அவர்களைக் கண்டதும்
அன்னை மிகவும்
மகிழ்ந்து...




அன்னை
சாதகர்களுக்கு மந்திர
தீட்சை தந்தார்.
இடைவிடாது ஜபம்,
தியானம் மற்றும்
சேவையும் செய்தார்.

சிறுமை கண்டு
பொங்குவார் அன்னை.
இந்திய சுதந்திரப்
போராட்ட காலம். ஒரு
நாள் பிரிட்டிஷ்
போலீசார் ஒரு
கர்ப்பிணிப் பெண்ணைச்
சந்தேகத்தின் பேரில்
இழுத்துச் சென்றனர்.
அதைக் கேள்விப்பட்ட
அன்னை...




போலீசார் அந்தப் பெண்ணை விடுவித்த பிறகே அன்னை அமைதி அடைந்தார்.

எளியோரிடம் இரங்குபவர் அன்னை. ஏழை முஸ்லீமான அம்ஜத் அன்னை மீது பக்தி கொண்டவன். வறுமை காரணமாகத் திருடி, அடிக்கடி சிறைக்குச் செல்வான். அன்னையைத் தரிசிக்க வரும்போது அவனுக்கு அன்னையே உணவு பரிமாறுவார்.

அத்தை, நீங்கள் இவனுக்குப் பரிமாறுவதை ஊரார் பார்த்தால் உங்களை ஜாதியை விட்டு விலக்கி விடுவார்கள்.

வாயை மூடு. எனக்கு ஜாதியாவது, மதமாவது! சரத் (சுவாமி சாரதானந்தர்) எப்படி எனக்கு மகனோ, அதே போன்றுதான் இவனும் எனக்கு மகன்.

1911-இல் அன்னை, சுவாமி ராமகிருஷ்ணானந்தரின் பிரார்த்தனைக்கு இணங்கிச் சென்னை வந்தார். சென்னை கபாலீஸ்வரர் கோவிலுக்கும், பார்த்தசாரதி கோவிலுக்கும் சென்று தரிசித்தார்.



பின்னர் ராமேசுவரம் சென்றார். அங்குள்ள லிங்கத்திற்குக் கங்கை நீராலும் 108 தங்க வில்வ தளங்களாலும் பூஜை செய்தார்.



மடத்துப் பணிகளை குருதேவருக்கான கைங்கர்யமாகக் கருத வேண்டும் என்று அன்னை அனைவருக்கும் போதித்தார். சமுதாய உணர்வோடு அன்னை தமது கிராமத்தில் ஓர் ஆரம்பப் பள்ளியும் ஓர் அணைக்கட்டும் கட்ட ஏற்பாடு செய்தார்! மடத்து முக்கியமான விஷயங்கள் எல்லாவற்றிலும் அன்னையின் வார்த்தையே அறுதி முடிவாக இருந்தது. அதோடு, பல காலம் பரவச நிலையில் இருந்து, வந்தவர்களுக்கெல்லாம் தொடர்ந்து தீட்சை அளித்தது, தினமும் பக்தர்களுக்காகச் சமைத்துப் பரிமாறியது போன்ற இடைவிடாத உழைப்பால் அன்னையின் உடல்நலம் பாதிக்கப்பட்டது.

அன்னையின் கடைசிக் காலம். அந்தப் பலவீனமான நிலையிலும் ஒரு நாள்...




1920, ஜூலை 20-ஆம் தேதி அன்னை தமது பூத உடலை உகுத்தார். இருந்தாலும் அவரது சாந்நித்தியம் என்றென்றும் நிலைத்திருக்கும்.

'எனக்கு ஓய்வென்பதே கிடையாது. என் பிள்ளைகள் அனைவருக்காகவும் நான் உழைத்துக் கொண்டே இருப்பேன். என் உடல் மறைந்த பின்னும் அவர்களின் நலனை நான் கவனித்தே ஆக வேண்டும்'. -அன்னை ஸ்ரீசாரதாதேவி



# மூர்த்தி நாயனார்



1 மதுரையம்பதியில் சொக்கநாதர் கோயிலில் மூர்த்தி நாயனார் காப்பிடுவதற்காகச் சந்தனம் அரைத்துத் தந்து சிவத்தொண்டு புரிந்து வந்தார். பாண்டிய மன்னன் அன்று மதுரை கோயிலுக்கு விஜயம் செய்தார்.

2









3 அமைதியான பாண்டிய நாட்டின் மீது வடுக மன்னன் படையெடுத்து பாண்டியனைக் கொன்று நாட்டைக் கைப்பற்றினான்.



4



5

அரசகட்டளையால் மக்கள் பயந்து கோயில்களுக்குச் செல்வதை நிறுத்திவிட்டனர். ஆனால் மூர்த்திநாயனார் மட்டும் தமது சிவத்தொண்டைத் தொடர்ந்து செய்துவந்தார்.



6




7

மூர்த்திநாயனார் சந்தனம் கிடைக்காமல் கடைவீதியெங்கும் அலைந்தார்.

8




ஒவ்வொரு கடையாகச் சென்று எங்கேயும் சந்தனக் கட்டை கிடைக்காமல் சோர்வுடன் மூர்த்திநாயனார் கோவிலுக்குத் திரும்பி வந்தார்.



9

வேறு எந்த வழியும் தோன்றாததால், பக்தி மிகுதியால் மூர்த்தியார் ஆவேசம் கொண்டவராய்...




10

மூர்த்திநாயனார் திருக்கைகளிலிருந்து ரத்தம் கொட்டுகிறது. உடனே லிங்கத்திலிருந்து இறைவன் தோன்றி...




சிவனின் அருளால் நாயனாரின் கைகளில் இருந்த ரணங்கள் நீங்கி முன்போல் சரியாகிவிட்டன!

11

அன்று இரவு வடுக மன்னன் இறந்தான். மக்கட்பேறு இல்லாத அவனுக்குப் பதிலாக யாருக்கு முடிசூட்டுவது என்று மந்திரிகள் ஆலோசித்தார்கள்.





13

மூர்த்திநாயனார் சொக்கநாதர் கோயில் வாசலில் பக்திப் பரவசத்துடன் நின்று கொண்டிருந்தார். யானை அவரது கழுத்தில் மாலையிட்டது.




மூர்த்திநாயனாரை அனைவரும் பட்டத்து யானையின் மீது ஏற்றி அரண்மனைக்கு அழைத்துச் சென்றனர்.

14

மக்களே! உங்கள் நலனே எனக்கு முக்கியம். மக்களுக்கு நல்லாட்சி அளித்திட திருநீறே அபிஷேகமாகவும், ருத்ராட்சமே அணிகலனாகவும், சடைமுடியே மணிமுடியாகவும் இறையன்பு ஓங்க அரசாளுவேன்.

பாண்டிய மன்னர் வாழ்க!

மூர்த்திநாயனாரின் ஆட்சி நல்லாட்சியாக மலர்ந்தது. நாட்டில் இறைபக்தியும் கல்வியும் பெருகின. மக்கள் குறையின்றி வாழ்ந்தனர்.

15

கடவுளிடம் நம்பிக்கை வையுங்கள். திட்டம் எதுவும் தேவையில்லை. அதனால் ஆகப்போவதும் ஒன்றுமில்லை. துன்பத்தால் வாடுகிறவர்களுக்காக இரக்கம் கொள்ளுங்கள். பிறகு உதவிக்காகக் கடவுளை நோக்குங்கள். உங்களுக்குத் தேவைப்படும் உதவி நிச்சயமாக வந்தே தீரும். -சுவாமி விவேகானந்தர்



# பரம்பரைக் குணம்

ஆதாரம்: உ.வே.சா. 19.2.1855-ல் உ.வே.சா. பிறந்தார்.

**1** தமிழ்த் தாத்தா உ.வே.சா.வின் தீவிர முயற்சியால்தான் மணிமேகலை, சீவகசிந்தாமணி போன்ற பல அரிய இலக்கியங்கள் தமிழுலகத்திற்குக் கிடைத்தன.

மிக்க செல்வாக்குடன் விளங்கிய பரம்பரைக் கவிஞரான அழகிய சிற்றம்பலக் கவிராயர் மிதிலைப்பட்டியில் வசித்து வந்தார். அவரிடமிருந்த பல ஏட்டுச் சுவடிகளுள் உ.வே.சா. கண்டெடுத்த மணிமேகலையும் ஒன்றாகும். அதனைக் கவிராயர் உ.வே.சா.விற்கு வழங்கினார். அப்போது...

**2** கவிராயரே! தங்களுக்குத் தமிழ் கூறும் நல்லுலகம் மிகுந்த நன்றிக்கடன் பட்டுள்ளது.

ஐயா, பெருமை எல்லாம் என் முன்னோர்களான புலவர்களையும் அவர்களை ஆதரித்த அரசர்கள், ஜமீன்தார்களையுமே சாரும்.

**3** தங்கள் முன்னோர்களின் பெருமைகளை அறிய விரும்புகிறேன்.

அவசியம் கூறுகிறேன்.

**4** எங்கள் முன்னோர்கள் சேலம் மாவட்டம் தாரமங்கலம் அருகில் கட்டியப்ப முதலியார் என்ற வள்ளலின் ஆதரவில் இருந்தார்கள். வேறு பல சமஸ்தான அரசர்களும், ஜமீன்தார்களும் அவர்களை ஆதரித்து யானை, சிவிகை போன்ற பரிசுகளையும் வழங்கியுள்ளார்கள்.



**5** அதோ தெரிகிறதே, அக்கல்லில்தான் யானை கட்டுவது வழக்கம். அந்தச் சிவிகையும் என் முன்னோர் பரிசாகப் பெற்றதுதான்.

அப்படியா! கவிஞரான தங்களுக்கும் பல சுவையான அனுபவங்கள் இருக்குமே. அதைக் கூற வேண்டுகிறேன்.



6

எனது முப்பாட்டனார் காலத்தில் சிவகங்கை அருகேயுள்ள மிதிலைப்பட்டிக்குக் குடிபெயர்ந்தார்கள். மிதிலைப்பட்டி ஜமீன்தார் வெங்களப்ப நாயக்கர், என் முப்பாட்டனாருக்கு இந்தக் கிராமத்தைத் தானமாக வழங்கி இங்கே குடியமர்த்தினார்.

ஒரு சமயம் திருமணம் ஒன்றுக்குச் சென்றுவிட்டு வண்டியில் வீடு திரும்பிக் கொண்டிருந்தேன். அப்போது வண்டிக்காரன் என்னிடம்...

சாமி, மிதிலைப்பட்டி சேர்த்துக்குள்ளாற விடிஞ்சிடும். மூணு ரூபா வண்டி வாடகையும் காலை சாப்பாடும் கொடுத்தா வர்ரேன்.

சரி தம்பி, வண்டியைக் கட்டு.

7

வண்டிக்காரன் ஆனந்தமாகப் பாடிக் கொண்டே வண்டி ஓட்டி வந்தான். இரவெல்லாம் பயணம் தொடர்ந்தது.

தம்பி, இவ்வளவு இனிமையாக, பிழையில்லாமல் தெம்மாங்கு பாடுகிறாயே! நீ தமிழ் படித்திருக்கிறாயா?

எல்லாம் கேள்வி ஞானம்தான் சாமி. நீங்க நல்லாப் படிச்சவர் போலத் தெரியுது. உங்களப் பற்றி ஒன்றும் சொல்லலியே.

8

நான் கவிஞர் பரம்பரையப்பா. மிதிலைப்பட்டி ஜமீன்தார் வெங்களப்ப நாயக்கர் என் முப்பாட்டனாருக்கு எங்கள் கிராமத்தையே பரிசாக அளித்தார். அதைக் கொண்டுதான் பிழைத்து வருகிறேன்.

ம்..., இப்போதெல்லாம் அப்படிப்பட்ட பெருவள்ளல்கள் யாருமில்லை. அவரது வாரிசுகள் என்ன ஆனார்களோ தெரியவில்லை.



9

பேசிக் கொண்டே வந்த கவிராயர் தூங்கிவிட்டார். பொழுது விடிந்தது. ஊரும் வந்தது. வீட்டிற்கு வந்த கவிராயர் நீராடிவிட்டு வண்டிக்காரனைச் சாப்பிட அழைத்தார். அவன் சாப்பாடு வேண்டாம் என்று மறுத்தான்.

காலை ஆகாரம் செய்துவிட்டுப் புறப்படு தம்பி.

இல்ல சாமி. பசிக்கல. வழியில பாத்துக்கிறேன். நா வர்ரேன்.

10

அப்படியானால் இந்தா வண்டி வாடகை.

அதுவும் வேண்டாம் ஐயா.

11

ஏனப்பா? பணம் போதவில்லை என்றால் மேலும் தருகிறேன்.

மன்னிக்கனும். கொடுத்தத திரும்பப் பெறுவது முறையா சாமி?

தம்பி, நீ என்ன சொல்கிறாய்?

12 உங்க முன்னோர்களை ஆதரிச்ச வெங்களப்ப நாயக்கர் குலத்திலே பொறந்தவன் நான். ஏதோ என் தலவிதி வண்டி ஓட்டிப் பொழைக்கிறேன். என் முன்னோர் ஒங்களுக்குத் தந்த ஒரு துரும்பக்கூட திரும்பப் பெற என் மனசு சம்மதிக்கல. என் பாட்டனார் புலவர்களுக்குச் செய்த உபகாரம் போல் இல்லையென் றாலும் இவ்வளவாவது ஒங்களப் போன்றவர்களுக்கு உதவ கடவுள் எனக்கு அருள்பாலிச்சாரே. அதுவே எனக்குப் போதும். நான் வர்ரேன் ஐயா.



அழகிய சிற்றம்பலக் கவிராயர் இந்த நிகழ்ச்சியை உ.வே.சா.விடம் கூறியபோது அழுதேவிட்டார்.









உயர்ந்த பண்பு, ஒழுக்கம், ஆன்மிகம் ஆகிய எல்லாச் சிறந்த பெருமைகளுக்கும் பிறப்பளித்தவள் நமது இந்தியத் தாய். முனிவர்கள் பலர் வாழ்ந்த நாடு இந்த நாடு. கடவுளுக்குச் சமமான மகான்கள் இன்னமும் இந்த நாட்டிலேதான் வாழ்ந்து வருகிறார்கள். இத்தகைய இந்தியாவா அழிந்துவிடும்?

-சுவாமி விவேகானந்தர்



# ஓடோடி வரும் இறைவன்

**1** பக்த போதனா ஆந்திர மாநிலத்தின் சிறந்த கவிஞரும் பக்தரும் ஆவார். தெலுங்கு மொழியில் பல காவியங்கள், கவிதைகள் இயற்றியவர். இறையருளால் ஒருமுறை அவர் கஜேந்திரமோக்ஷம் என்ற நாடகம் இயற்றினார்.




**2**




**3**




**4** சில நாட்கள் கழித்து, ஒரு நாள் போதனாவின் தமக்கையின் கணவர் இடுப்பில் துணியுடன் எண்ணெய் ஸ்நானத்திற்குத் தயாராகிக் கொண்டிருந்தார். அவரது பேரன் வேதகிரி கிணற்றருகில் விளையாடிக் கொண்டிருந்தான்.



**5** போதனா வேண்டுமென்றே வேதகிரியை வீட்டினுள் ஒளித்து வைத்தார். (போதனா ஒரு பெரிய பாறாங்கல்லை எடுத்து, குழந்தை கிணற்றில் விழுந்ததுபோல் போட்டதாகவும் ஒரு வரலாறு உள்ளது.) பிறகு...




**6** இவ்வாறு கூறிக்கொண்டே போதனாவின் தமக்கையின் கணவர் பரபரப்புடன் கட்டிய துண்டோடு ஓடி வந்தார்.




**8** தமது தமக்கையின் கணவர் புலம்புவதை ஒரு கணம் பார்த்துவிட்டு, போதனா மெல்ல உண்மையை வெளிப்படுத்தினார்.

















குளத்தின் மீன்கள் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும் ஓர் இரையைப் போட்டதும் நாலா பக்கங்களிலிருந்தும் அதனிடம் ஓடி வருகின்றன. அதுபோல பக்தியும் சிரத்தையும் நிரம்பிய இதயத்தையுடைய பக்தனிடம் ஈசுவரன் வெகு வேகமாக வருகின்றான்.

– ஸ்ரீராமகிருஷ்ணர்



# புல் தின்ற கல் நந்தி

1

இலங்கையில் யாழ்ப்பாணப் பகுதியில் கொக்கட்டிச் சோலையில் உள்ள தான்தோன்றீஸ்வரர் கோவில் புகழ்வாய்ந்த ஒன்று.




2




3

எப்படியாவது மதமாற்றம் செய்வதில் தீவிரமாக இருந்த ஒரு பாதிரி அரசு தளபதியுடன் ஆலோசித்தார்.




4

மறுநாள் கோவிலில் பூட்ஸ் காலுடன் தளபதி சென்றான்.









அர்ச்சகர் தமது மனைவியிடம் நடந்ததைக் கூறினார்.

















11

என்ன பூஜாரி, உன் மாட்டைப் புல் தின்னச் சொல். முதலில் நான் அதை வேடிக்கை பார்க்கிறேன். பிறகு நீ என் பீரங்கியைப் பராக்கு பார். ஹ.ஹா...




அர்ச்சகர் அருகம்புல்லும், நீரும் நந்திக்குப் படைத்தார்.

12

உடனே நந்திதேவர் புல் தின்றார்; நீர் அருந்தினார்; தான் வந்த அடையாளமாகப் பாதம் பதித்து, குளம்புச் சுவட்டையும் ஏற்படுத்தினார். சாணமிட்டுப் பிறகு முன் போல் அமர்ந்தார்.



13

உடனே தளபதி வெலவெலத்துப் போனான்.

அர்ச்சகரே, தங்கள் அருமையும், தங்கள் தெய்வத்தின் மகிமையும் தெரியாமல் பிழை செய்துவிட்டேன்.

துரை அவர்களே, எங்கள் இறைவன் 'எந்நாட்டவர்க்கும் இறைவன்.' எங்களை எங்கள் பாதையில் செல்ல விடுங்கள். எங்களை உங்கள் பாதையில் இழுப்பதை விட்டு, உங்கள் ஏசுபிரான் கூறியருளியபடி முதலில் நீங்கள் நடக்கப் பாருங்கள்.



ஹர ஹர மகாதேவா! ஓம் நமச்சிவாய.

கிறிஸ்தவர் இந்துவாகவோ, பௌத்தராகவோ மாற வேண்டியதில்லை. அல்லது இந்து, பௌத்தராகவோ, கிறிஸ்தவராகவோ மாற வேண்டியது இல்லை. ஒவ்வொருவரும் மற்ற மதங்களின் நல்ல அம்சங்களைத் தனதாக்கிக் கொண்டு, தன் தனித்தன்மையைப் பாதுகாத்துக் கொண்டு, தன் வளர்ச்சி நியதியின்படி வளர வேண்டும்.

**- சுவாமி விவேகானந்தர்**





# அஷ்டாவக்கிரரின் சபதம்

**1** கஹோளர் என்ற மந்தபுத்தியுள்ள ஒருவர் உத்தாலக முனிவரின் சிஷ்யர். அவரது குருபக்தியால் மகிழ்ந்த உத்தாலகர் தம் மகள் சுஜாதாவை அவருக்கு மணமுடித்து வைத்தார். சுஜாதா கர்ப்பிணி ஆனாள்.

ஒரு நாள் இரவில் கஹோளர் தப்பும் தவறுமாக வேத பாராயணம் செய்தார். அதைப் பொறுக்க முடியாமல் கருவிலிருந்த சிசு உடலைப் பலவிதமாக வளைத்து நெளிந்தது. அந்தச் சிசு தந்தையிடம்...



**2** கர்ப்பத்திலுள்ள சிசு: தந்தையே! இரவில் வேதம் ஓதுவதும் உங்கள் உச்சரிப்பும் சரியில்லையே!

(கோபத்துடன்) நீ பிறப்பதற்கு முன்பே உனக்கு இவ்வளவு ஆணவமா? நீ இப்போது எப்படிக் கருவில்கோணிக் கொண்டிருக்கிறாயோ, அப்படியே உடலில் எட்டு கோணல்களைக் கொண்டவனாகப் பிறப்பாய்.

நாதா! நம் குழந்தையை இப்படிச் சபித்துவிட்டீர்களே! அவனைப் பார்த்து அனைவரும் கேலி செய்வார்களே!

**3** ஜனக மன்னர் சபையில் வந்தி என்ற புலவர் வாதில் வல்லவர். அவரிடம் வாதில் தோற்றவர்களை அவர் நீரில் மூழ்கடித்துக் கொன்று விடுவார். வறுமையினால் அரசனிடம் பொருள் பெற்று வரச் சென்ற கஹோளரையும் அவர் வாதத்திற்கு அழைத்து வென்று நீரில் அமிழ்த்திவிட்டார்.

**4** இதற்கிடையில், தந்தையின் சாபத்தால் எட்டு கோணல்களுடன் பிறந்த குழந்தை அஷ்டாவக்கிரன் என்ற பெயர் பெற்றது. தந்தை இறந்துவிட்டதால், அவன் தாத்தா உத்தாலக முனிவரால் வளர்க்கப்பட்டான். அவனது மாமன் சுவேதகேது.

(அஷ்டாவக்கிரர் உடலில் எட்டு கோணல்கள் இருந்தன என்று கூறப்படுகிறது. இங்கு படம் வரைவதற்கு ஏற்ற வகையில் அஷ்டாவக்கிரரை சாதாரணமாகவே சித்திரிக்கப்பட்டுள்ளது)

5 ஒரு நாள் அஷ்டாவக்கிரன் தன் தாத்தாவின் மடியில் அமர்ந்திருந்தான். அப்போது சுவேதகேது அங்கு வந்து...




உடனே அஷ்டாவக்கிரன் வருத்தத்துடன் தாத்தாவிடமிருந்து விலகி அழுதுகொண்டே தன் தாயிடம் சென்றான்.

6 அஷ்டாவக்கிரனின் தாய் முன்பு நடந்த துயரச் சம்பவங்களை அவனுக்கு விளக்கினாள். காலப்போக்கில், அஷ்டாவக்கிரன் சாஸ்திரங்களில் நிபுணன் ஆனான். ஒரு நாள் சுவேதகேதுவுடன் ஜனக மன்னரைக் காணப் புறப்பட்டான்.

மிதிலா நகரில் ரிஷிகுமாரர்கள் இருவரும் சென்று கொண்டிருக்கும்போது ஜனக மன்னர் மந்திரி பிரதானிகள் சூழச் சிவிகையில் வந்து கொண்டிருந்தார்.




7



8

ரிஷிகுமாரர்களே! நீங்கள் இங்கு வந்த காரணம் என்ன?




9

அப்போது அவையிலிருந்த வந்தி கோபத்துடன்...

அப்படியா! முதலில் என் கேள்விக்குப் பதில் கூறு. முப்பது, பன்னிரண்டு, முன்னூற்றறுபது ஆகியவை எவற்றைக் குறிக்கின்றன?




10

(சற்று கோபமாக) சரி, எது தூங்கும்போது கூடக் கண்களை மூடுவதில்லை?




11

இப்படியாகக் கேட்கப்பட்ட அனைத்து கேள்விகளுக்கும் உடனுக்குடன் அஷ்டாவக்கிரன் பதில் தந்தான். முடிவில்...




12

எப்படி இருந்தாலென்ன? என் தந்தையை நீரில் மூழ்கடித்த வந்தியும் நீரில் மூழ்கடிக்கப்பட வேண்டும்.



13

வந்தி வருணலோகம் சென்றடைந்தார். அவரால் மூழ்கடிக்கப்பட்ட பண்டிதர்கள் அனைவரையும் பூலோகத்திற்குத் திரும்ப அனுப்பி வைத்தார்.



பிறகு பண்டிதர்கள் அனைவரும் ஜனக மன்னரின் சபையில் ஒன்று கூடினர்.

நன்றி மன்னா! என் மகன் அஷ்டாவக்கிரனின் முயற்சியால் நாங்கள் யாவரும் நலமுடன் திரும்பி வர முடிந்தது.



கஹோளரே! அஷ்டாவக்கிரன் சிறந்த ரிஷிகுமாரன். அவரால் இந்தச் சபையே சிறப்புற்றது.

14

பிறகு கஹோளர் அஷ்டாவக்கிரனை அழைத்துக் கொண்டு ஒரு நதிக்கரைக்குச் சென்றார்.

மகனே! இந்தப் புனித நதியில் மூழ்கி எழு. உன் சாபம் நீங்கி உடலின் கோணல்கள் எல்லாம் சரியாகிவிடும்.



அஷ்டாவக்கிரன் நதியில் மூழ்கி எழுந்ததும் உடல் கோணல்களின்றி ஒளியுடன் திகழ்ந்தார்.

15

கஹோளரே! உங்கள் மகனால் என் சபை பெருமை பெற்றது. அனைவருக்கும் தக்க சன்மானங்கள் வழங்குகிறேன். பெற்றுக் கொண்டு என் நாட்டை ஆசீர்வதியுங்கள்.



மிகவும் மகிழ்ச்சி மன்னா. அஷ்டாவக்கிரர் புகழ் ஓங்கட்டும்.

பகவானுடைய சந்நிதானத்தில் தர்க்கம், புத்தி, படிப்பு இவைகளில் எதுவும் பிரயோசனப்பட மாட்டாது. அங்கே ஊமை பேசும், குருடு காணும், செவிடு கேட்கும். அரைப் படிப்பு படித்தவர்கள் கர்வத்தில் மதிமயங்கிப் போகின்றனர்.

கிரந்தம் என்ற வார்த்தைக்குச் சாஸ்திரம் என்ற அர்த்தம் எப்போதும் இல்லை. ஆனால் கிரந்தி



அல்லது முடிச்சு என்ற அர்த்தம் எப்போதும் உண்டு. உண்மையை அறிய வேண்டுமென்ற தீவிர புத்தியுடன், அகங்காரத்தை எல்லாம் விட்டு கிரந்தங்களைப் படிக்க வேண்டும். வெறுமனே படித்தால் வித்யா கர்வம், மமதை, தான் மேதாவி என்ற அபிப்ராயம் ஆகிய முடிச்சுகள் தான் மனதில் உண்டாகும்.

-ஸ்ரீராமகிருஷ்ணர்



# குமண வள்ளல்

**1** வள்ளல் குமணனின் தம்பி இளங்குமணன் அண்ணனுக்கு நேர்மாறானவன். தானே அரசனாக வேண்டும் என்பதால் சதி செய்து குமணனை நாட்டைவிட்டுத் துரத்திவிட்டான். குமணன் காட்டில் தனியாக வாழ்ந்து வந்தார்.

**2** இளங்குமணன் கொடுங் கோலாட்சி நடத்தி மக்களின் வெறுப்புக்கு ஆளானான். மக்கள் மிகவும் தவித்தார்கள். புலவர்களை அவன் ஆதரிக்க வில்லை.




**3** தளபதியாரே, என்னை மக்கள் தூற்றினாலும் கவலையில்லை. ஆனால் கூடவே அண்ணனைப் புகழ்கிறார்களே, அதுதான் எனக்கு எரிச்சலாக இருக்கிறது.




**4** காட்டில் குமணனின் குடிசை வாசலில் வேடர்குல மக்கள் அவரைக் காண வந்தனர்.



5 சில காலம் கழித்துப் புலவர் பெருஞ்சித்திரனார் குமணனைத் தேடி காடு சென்றார்.




6




7 பெருந்தலைச் சாத்தனார் என்ற புலவர் அமணனின் அவையில் அனுமதியின்றி நுழைந்துவிட்டார்.




8




9




10
ஆஹா, புலவரே! எத்தகைய நற்செய்தி! எனது தலைக்குப் பொற்கிழி பரிசா? புலவரே, என் தலையை உடனே கொய்து கொடுத்துப் பொற்கிழி பெற்று உங்கள் வறுமையை ஓட்டுங்கள்!


11
என்ன நினைத்தேனோ அதையே செய்யச் சொல்கிறார் குமணவள்ளல்.
தலை வேண்டாம் மன்னா! உங்கள் உடைவாள் மட்டும் போதும்.
எதற்கு புலவரே?
நான் போட்டுள்ள திட்டம் தெய்வ அருளால் கைகூடினால் நாட்டிற்கு நல்லாட்சி மீண்டும் அமையும் அரசே. உங்கள் வாளைக் கொடுங்கள். அதை அமணனிடம் காட்டுகிறேன். அவன் என்ன செய்கிறான், பார்ப்போம்.


12
கடந்த வாரம் வந்த அதே புலவரா? நற்செய்தி கொண்டு வந்துள்ளேன் என்று அவைக்குள் மீண்டும் நுழைந்துவிட்டீர்களே? இதென்ன கையில் வாள்?
மன்னா, இந்த உடைவாளைப் பாருங்கள்.


13
இளங்குமணன் உடைவாளைப் பார்த்து அதிர்ச்சியடைந்தான்.
இது அண்ணனுடையது ஆயிற்றே? எப்படி வந்தது உங்களிடம்?
பரிசளிக்க ஒன்றுமில்லாததால் தன் தலையைக் கொய்து தங்களிடம் தந்து பொற்கிழி பெற்றுக் கொள்ளச் சொல்லி வாளைக் கொடுத்தார். கொய்த தலை மூடு பல்லக்கில் வெளியில் இருக்கிறது. பார்க்கிறீர்களா?

**14** உடனே இளங்குமணனின் மனதில் ஒரு பெரும் மாற்றம் ஏற்பட்டது. பொறாமை, வெறுப்பு, பகை மறைந்து பாச உணர்வு மீறிட்டெழ புதுமனிதன் ஆனான். அவன் அழத் தொடங்கினான்.




இளங்குமணன் தன்னை மாய்த்துக்கொள்ள முயல புலவர் தடுத்து உண்மையை உணர்த்துகிறார்.

**15**




**16** குமண வள்ளலின் அவை.






அன்பு பலனளிக்காமல் போவதில்லை. என் மகனே, இன்றோ நாளையோ யுகாந்தரத்திலோ உண்மை வெல்வது நிச்சயம். அன்பு நிச்சயம் வெல்லும். உனது மனித சகோதரர்களை நேசிக்கிறாயா? கடவுளை எங்கே போய் தேடுகிறாய் நீ? ஏழைகள், துன்புறுபவர்கள், பலவீனர்கள் அனைவரும் தெய்வங்கள் அல்லவா? அவர்களை ஏன் முதலில் வழிபடக் கூடாது? ஏன் கங்கைக் கரையில் கிணறு தோண்டப் போகிறாய்? அன்பின் எல்லாம் வல்ல ஆற்றலில் நம்பிக்கை கொள்.

- சுவாமி விவேகானந்தர்



# ஸ்ரீமதுசூதன சரஸ்வதி

**1** பிரசித்தி பெற்ற அத்வைத ஆச்சாரியரான ஸ்ரீமதுசூதன சரஸ்வதி ஆரம்ப காலத்தில் எல்லோரையும் போலவே சாதாரணமான ஒரு மனிதராக வாழ்ந்து வந்தார். ஒரு நாள் அவரது இல்லத்திற்கு ஒரு துறவி வந்தார். அவரை மதுசூதனன் உபசரித்தார். அந்தத் துறவி மதுசூதனன் மீது இரக்கம் கொண்டு...




**2**




**3** மதுசூதனன் தம் வீட்டின் அருகிலிருந்த ஒரு கோவிலில் அமர்ந்து தினமும் ஜபம் செய்து வந்தார்.




**4** ஒரு நாள் மதுசூதனன் வீதியில் சென்று கொண்டிருந்தபோது அவரது காலணி அறுந்துவிட்டது. அப்போது செருப்புத் தைக்கும் ஒரு தொழிலாளியிடம் சென்று...



5

தொழிலாளி செருப்பைப் பெற்றுக் கொண்டார். ஆனால் உடனே அதைத் தைக்காமல் நிதானமாக வெற்றிலை போட்டுக் கொள்ளத் தொடங்கினார். அதனால் மதுசூதனன் பரபரப்படைந்து....

ஏனப்பா! என் அவசரம் புரியாமல் நீ சாவகாசமாக வெற்றிலை மென்று கொண்டிருக்கிறாயே?

சாமி, தங்களுக்குப் பொறுமை என்பதே சிறிதும் கிடையாது. அது மட்டும் இருந்திருந்தால் சிறந்த மகான் ஒருவர் உபதேசித்த கிருஷ்ண மந்திரத்தை ஜபிக்காமல் பாதியில் விடுவீர்களா?









9

மதுசூதனன் பூதவசிய மந்திரம் கற்றுக் கொண்டு மும்முரமாக ஜபித்தார். ஆனால் பூதம் தோன்றவில்லை.




10

அடேய், என்னையா ஏமாற்றினாய்? நானும் ஆறு மாதங்களாக ஜபம் செய்கிறேன். பூதத்தையும் காணோம், பிசாசையும் காணோம்.

சாமி, பொறுமை தேவை. பூதவசிய மந்திரம் பலன் தராததன் காரணம் உங்களுக்குத் தெரியவில்லையா?

11

ஏமாற்று வேலைக்குக் காரணம் வேறா?

இல்லை சாமி. நீங்கள் நான்காண்டுகள் ஜபம் செய்த கிருஷ்ண மந்திரத்தின் மகிமையால், உங்களைச் சுற்றி ஞானாக்கினி இருந்து கொண்டிருக்கிறது. அதனால் அல்பமான பூதங்களால் உங்கள் அருகில் வர முடியவில்லை.

12




13







14

மதுசூதனன் மேலும் சிறிது காலம் தீவிர ஜப சாதனை புரிந்தார். அதனால் ஸ்ரீகிருஷ்ணரின் தரிசனமும் ஆத்ம சாட்சாத்காரமும் பெற்றார். அதன்பின் ஸ்ரீகிருஷ்ணரின் அருளால் அவர் மிகச் சிறந்த ஞானியாகத் திகழ்ந்தார். பகவத் கீதைக்கு அவர் இயற்றிய உரை நூல் மிகவும் பிரசித்தி பெற்றது. பக்தியையும் ஞானத்தையும் நல்ல முறையில் ஒருங்கிணைத்து எழுதப்பட்ட உயர்ந்த நூல் அது.





**மனம் ஒருமைப்படாவிட்டாலும் மந்திர ஜபத்தை விட வேண்டாம். உங்கள் கடமையை நீங்கள் செய்யுங்கள். தொடர்ந்து இறைவனது திருநாமத்தை ஜபித்து வந்தால், காற்றில்லாத இடத்தில் உள்ள விளக்கின் சுடரைப்போல் மனம் தானாகவே ஒருமைப்படும். காற்றே சுடரை ஆடச் செய்கிறது. அதுபோல் நம்மிடமுள்ள ஆசைகளும் சங்கல்பங்களுமே மனதை அமைதியற்றதாக்குகின்றன.**

**- அன்னை ஸ்ரீசாரதாதேவி**



# மீண்டும் வந்த நரசிம்மர்

**1** ரோமச முனிவர் விரும்பியபோதெல்லாம் வைகுந்தம் சென்று திருமாலைத் தரிசித்து வரும் தவ ஆற்றல் பெற்றவர். ஒருமுறை நாரத முனிவரும் ரோமசரும் வைகுந்தத்திற்குச் சென்றபோது...




**2**




**3**




**4**



5

சில காலம் கழித்து நாரதரும் ரோமசரும் சந்தித்துக் கொண்டனர்.

திரிலோக சஞ்சாரியே, அடியேன் தண்டனிடுகிறேன். அன்று பெருமாளைத் தரிசித்தவுடன் கிளம்பிவிட்டீர்களே? நாரத கானத்தைப் பருகும் பேறு கிடைக்கும் என்று ஆவலோடு இருந்தேன்.



முனிவரே! பெருமாளுக்கு நாரத கானத்தைவிடவும் தங்களோடு பேசி மகிழ்வதே பேரானந்தமாக இருக்கும்போது என்ன செய்வது?

6

சுவாமி, உங்களது மனத்தாங்கலை வெளிப்படுத்துவீர்கள். அதனால் பெருமாள் கோபம் கொள்வார் என்று நான் அன்று எதிர்பார்த்தேன்.

பெருமாள் என்னைக் கோபிக்க வேண்டும் என்றா விரும்பினீர்கள்?



இல்லை நாரதரே. சதா புன்னகை பூத்த அருள் முகத்தவராக பெருமாளின் திருக்கோலத்தையே காண்கிறோம். ஒருமுறைகூட அவரது திருமுகம் சுளித்ததில்லை. மாறுதலுக்காக ஒரு முறையாவது திருமாலின் சினக்கோலத்தைக் கண்டு களிக்கப் பெரிதும் ஆசைப்படுகிறேன்.

7

இப்படியும் ஒரு விபரீத ஆசையா? உங்களுக்காகப் பாற்கடல் வாசன் எதுவும் செய்வாரே? நீங்கள் விரும்பினால் அண்டமே நடுநடுங்க, கோபம் பொங்கும் நரசிங்கராகக்கூடக் காட்சி அளிப்பாரே? எனக்கே அவரை மீண்டும் அந்தக் கோலத்தில் தரிசிக்க ஆசை. தாங்கள் மனம் வைத்தால் அது கைகூடும்.



நாரதரே, நீங்கள் சொல்லச் சொல்ல பெருமாளை உக்கிர நரசிம்மக் கோலத்தில் காணமாட்டோமா என்ற பேராசை என்னுள் பொங்கியெழுகிறது. பெருமாளிடமே இதை விண்ணப்பிக்கலாம் அல்லவா?

8

தாராளமாக. ஆனால் அவர் பக்தர்களை ஏமாற்றுவதில் சமர்த்தர். 'நான் பல யுகங்களுக்குப் பின் மீண்டும் யாரோ ஓர் அசுரனை வெல்ல நரசிங்கராக அவதாரம் எடுப்பேன். அதுவரை காத்திரு' என்று எளிதாகக் கூறிவிடலாம்.
அதைவிடத் தவம் செய்து வரம் பெற்று உங்கள் ஆசையை விரைவில் நிறைவேற்றிக் கொள்ளலாமே?



சரி. அப்படியானால் நான் தவத்தை இக்கணமே தொடங்கிவிடுகிறேன்.

**9**

தமிழகத்தில் உள்ள கஜகிரியின் அடிவாரத்தில் ரோமச முனிவர் கடுந்தவம் மேற்கொண்டார். தவத்தின் உக்கிரம் தாங்காது தேவர்கள் திருமாலைச் சரணடைந்து முறையிட்டார்கள்.



**10** முனிவர் முன் பெருமாள் காட்சி அளித்தார்.

ரோமச முனிவரே! நினைத்தபோதெல்லாம் எம்மைத் தரிசிக்கும்பேறு பெற்ற தங்களுக்கா குறை? என்ன வரம் வேண்டும் கேளுங்கள்?

பெருமானே. சர்வ வல்லமை படைத்த இரண்யகசிபுவை வதைக்க உக்ர நரசிம்மக் கோலத்தைக் கண்ணாரக் காணப் பேராவல். அருளுங்கள். பெருமானே.



அவ்வளவுதானே? இதோ மீண்டும் உங்களுக்காக நரசிம்மனாகிறேன்.

**11** கஜகிரியில் ரோமச முனிவருக்கு வானுலகம் வரை உயர்ந்த உக்ர நரசிம்ம மூர்த்தியாகக் காட்சி தந்தார் திருமால்.




**12** உக்ர நரசிம்ம மூர்த்தியின் கோபாக்கினியைத் தாங்க முடியாது உலகம் தவித்தது. இந்தத் தவிப்பிலிருந்து விடுபட நாரதர் யோசனை வழங்கினார்.

உக்கிரத்தைத் தணிக்கக்கூடிய மகாசக்தி, பக்த பிரகலாதனுக்கும் மகாலட்சுமிக்கும் மட்டுமே உண்டு.



**13** பக்த பிரகலாதனும் தேவி மகாலட்சுமியும் உக்ர நரசிம்மரிடம் பிரார்த்தித்தார்கள்.



பக்த ரட்சகா நாராயணா, பதம் பணிந்தோம். தங்களின் இந்த அவதாரம் பக்தரை மகிழ்விக்க மட்டுமே, சம்ஹரிக்க அல்ல! பாற்கடல் வாசா, சினம் தணிந்து மனமிரங்குங்கள். உக்ரம் வேண்டாம். நாராயணா, நரசிம்மா! அருட்கோலம் கொள்ளுங்கள்!

**14** உடனே லட்சுமி நரசிம்ம மூர்த்தியாக திருமால் காட்சியளித்தார்.

ரோமசரே, உமக்கு மகிழ்ச்சிதானே? இனி நான் வைகுந்தம் செல்லலாம் அல்லவா?

பெருமானே, அடியேனுக்காக மீண்டும் நரசிம்மமாக திருவுருவம் எடுத்தீர்களே! இருப்பினும் ஒரு விண்ணப்பம். வரவுள்ள கலியுகத்தில் மனவுறுதி இல்லாதவர்கள் புரியும் தவறுகளால் கிரகதோஷங்களுக்கு இலக்காகித் துன்பப்படுவார்கள். பகவானே, அப்போது தங்களது இந்தத் திருக்கோலம் கிரகதோஷங்களை நீக்குவதற்கு வழிவகுக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.



**15** ரோமசருக்காக திருமால் இரண்டாவது முறையாக உக்ர நரசிம்மத் திருக்கோலம் கொண்ட திருத்தலம் மதுரையில் உள்ள ஆனைமலை என்ற கஜகிரி ஆகும். (ஒத்தக்கடை என்றும் வழங்கப்படும்)

குறிப்பு : மதுரைக்கு வடகிழக்கே மேலூர் செல்லும் வழியில் 4 கி.மீ. தொலைவில் ஒத்தக்கடை உள்ளது.




**தெ**ருக்கூத்துக்களில் நடிப்பவர்கள், ''கிருஷ்ணா, இங்கு வா. உன்னைப் பார்க்க விரும்புகிறோம்'' என்று உரக்கப் பாடும் வரையில் கிருஷ்ண வேடம் பூண்டவன் தன்னை பிறர் அழைப்பதைப் பொருட்படுத்துவதில்லை. அவன் உள்ளே சுருட்டுப் பிடித்துக் கொண்டும், பேசிக் கொண்டும் சாவதானமாக இருக்கிறான்.

மற்ற சத்தமெல்லாம் ஓய்ந்து நாரதர் வந்து இனிய குரலில், ''உயிர்க்குயிரான கோவிந்தா! நீ வரவில்லை என்றால் நான் இறந்து விடுவேன்'' என்று பாட ஆரம்பித்ததும் கிருஷ்ணன் மேடைக்கு வராமலிருக்க முடியாது. இதுபோலத்தான் கடவுளைக் காண விரும்புபவனுடைய தன்மையும். ''இறைவா வருவாய்! காட்சி தருவாய்!'' என்று உரக்கக்கூவும் வரையில் பகவான் நெடுந்தூரத்தில் இருக்கிறார். பக்தி நிறைந்த மனதுடன் அவரை அழைக்கும்போது, அவர் பக்தன் முன் வராமல் இருக்க மாட்டார். -ஸ்ரீராமகிருஷ்ணர்





# மாற்றுரைத்த விநாயகர்

**1** சிவபெருமான் திருவாரூரில் சுந்தரருக்குத் தம்மையே தோழனாகத் தந்தருளினார். ஈசனோடு அனுதினமும் உரையாடும் பாக்கியமும் பெற்றவர் சுந்தரர்.
ஒருமுறை விருத்தாசலம் நகர எல்லையில் சுந்தரரை வரவேற்கப் பக்தர்கள் கூட்டம் கூடியிருந்தது.



**2** மணிமுத்தா நதியும் அதன் கரையில் அமைந்துள்ள பழமலைநாதன் கோயிலும் மிக அழகாக உள்ளன. இத்தலத்து மக்கள் பெரும் பாக்கியசாலிகள்!



சுந்தரர் பெருமானே! தங்கள் வருகையால் நாங்கள் மேலும் பாக்கியசாலிகள் ஆனோம்!

**3** பழமலைநாதன் சன்னதியில் சுந்தரர் பதிகம் பாடி வழிபட்டார்.



**4**



இன்னும் சில நாட்களில் திருவாரூரில் பங்குனி உத்திரத் திருவிழா தொடங்கிவிடும்! பரவை நாச்சியார் அடியார்களுக்குத் திருவமுது படைக்க ஏற்பாடுகள் செய்துகொண்டிருப்பாள். அச்செலவுக்காக பழமலை நாதனிடம் பொற்காசுகள் கேட்டுப் பெற வேண்டும்.

**5** அப்போது பழமலைநாதர் சுந்தரருடன் பேசினார்.




ஈசனே! தங்களுக்குத் தெரியாததா? எனக்கு இப்போது பன்னிரெண்டாயிரம் பொற்காசுகள் வேண்டும்!

6


அவ்வளவுதானே! இதோ!

7


பெருமானே! சிறு விண்ணப்பம். ஊர் ஊராகத் தங்களைப் பாடிச் செல்லும் என்னால் இவற்றை எடுத்துச் செல்ல இயலுமா? ஆகவே இவற்றை இங்கு மணிமுத்தா நதியில் போட்டு, திருவாரூரில் கமலாலயக் குளத்தில் எடுத்துக் கொள்வதில் தங்களுக்குச் சம்மதமா?
சரி! உன் விருப்பப்படியே செய்!

8


தோழன் என்பதால் சுந்தரர் சிவபெருமானிடம் வேடிக்கையாக.....
மாயையில் வல்லவரான தங்களை எப்படி நம்புவது? தாங்கள் திருவாரூரில் மாற்றுக் குறைந்த பொன்னைத் தந்துவிட்டாலும் ஆச்சரியப்படுவதற்கு இல்லையே!
அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?

9


பெருமானே! நீங்கள் கொடுத்த பொற்காசுகளில் சிலவற்றை நான் இடுப்பில் முடிந்து வைத்துக்கொள் கிறேன். கமலாலயத்தில் காசுகள் கிடைத்தவுடன், அவற்றை உரைத்து, இந்தக் காசுகளுடன் ஒப்பிட்டுச் சரிபார்த்துக் கொள்வேன்!
தோழனே! அப்படியே செய்!

**10** பல தலங்களையும் தரிசித்துவிட்டு சுந்தரர் திருவாரூர் வந்தார்.




**11** கமலாலயத்தில் இறங்கித் தேடினார் சுந்தரர்.




உடனே சுந்தரர் 'பொன்செய்த மேனியீர்!' என்று தொடங்கும் பதிகத்தைப் பாடினார். காசு முட்டைகள் தோன்றின. ஒவ்வொரு முட்டையாக எடுத்து, குளத்தின் படிக்கட்டுகளில் வைத்தார்.

**12** தங்கத்தின் மாற்றைச் சோதிக்க விரும்பிய சுந்தரர் முன் சிவபெருமானின் ஆணைக்கிணங்க விநாயகர் ஒரு பத்தர் உருவில் தோன்றினார். சுந்தரர் தங்கத்தை மாற்று உரைத்துப் பார்க்கும்படி அந்தப் பத்தரிடம் வேண்டினார்.



**13**

வருந்திய சுந்தரர் ‘எத்தா தடுத்தறியேன்’ என்ற திருப்பதிகம் பாடிச் சிவனை வேண்டினார். மெய்யன்பரின் பாடலைக் கேட்க விரும்பியே சிவபெருமான் இவ்வாறு செய்திருந்தார். அதன் பிறகு சரியான மாற்றுக்குறையாத பொற் காசுகளைத் தந்தருளினார். அவற்றைச் சோதித்துப் பார்க்கச் சொன்னார் சுந்தரர்.




பத்தரே, உங்கள் உதவிக்கு நன்றி. பரவையே, இந்தப் பொற்காசுகளை எடுத்துச் சென்று பங்குனி உத்திரத்திற்கான பணிகளைச் செய்!

**14**



பொற்கொல்லருக்கு உரிய கூலியைக் கொடுக்கத் திரும்பிப் பார்த்தார் சுந்தரர். ஆனால் அவர் காணப்படவில்லை! மாறாக அங்கே விநாயகப் பெருமான் காட்சி தந்தார். அவரை வணங்கி எழுந்த சுந்தரர்...

**15**

ஐயனே! பொற்கொல்லராய் வந்த தாங்கள் கமலாலயக் குளக்கரையில் மாற்று உரைத்த விநாயகர் என்ற பெயருடனேயே இனி எழுந்தருளி பக்தர்களுக்குக் காட்சி யருள வேண்டும்.



தம்பிரான் தோழரே! தங்கள் விருப்பப் படியே ஆகட்டும்.

இந்த வரலாறு திருவாரூர் தல வரலாற்றில் உள்ளது. இன்றும் திருவாரூர் கமலாலயக் குளத்தின் வடகிழக்கு மூலையில் மாற்றுரைத்த விநாயகரைத் தரிசிக்கலாம்.



நம்பிக்கை அதிகரிக்க அதிகரிக்க ஈசுவர ஞானமும் அதிகரிக்கும். நம்பிக்கை குறைவாக இருக்குமிடத்தில் ஞானம் அதிகமாக இருக்குமென்று எதிர்பார்ப்பது வீண். - பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்



# சோகாமேளர்

**1** சிவபெருமானைத் துதித்து சித்தியடைந்த நந்தனார் போல் தாழ்த்தப்பட்ட குலத்தவரான சோகாமேளர் பண்டரிபுரத்து விட்டலனைப் பாடிப் பரவசமடைந்தவர்.




**2** சோகாமேளரின் அறிவுரைகள் படிப்படியாகச் சேரி மக்களை உயர்த்தின. காலப்போக்கில் பஜனை செய்து அவர்கள் மகிழ்ந்தனர். ஆனால் சில அந்தணர்கள், சோகாமேளர் பஜனை செய்து கொண்டு கோவிலுக்குச் செல்வதைத் தடுத்தார்கள்.




அன்றிலிருந்து சோகாமேளர் கோவில் பக்கமே போக முடியவில்லை. இதயமே இறைவனின் உறைவிடம் என்பதை உணர்ந்து வீட்டிலேயே இறைவனை வழிபடத் தொடங்கினார்.

**3** ஒரு நாள் பாண்டுரங்கனைப் பற்றிப் பாடிவிட்டு சோகாமேளர் அயர்ந்து தூங்கிவிட்டார். நடு இரவு. பண்டரிநாதனே அவருக்குத் தரிசனம் அளித்தார்.




**4**



5

பரவச நிலையில் சோகாமேளர் சென்றபோது
கோவில் கதவுகள் திறந்திருந்தன. தீபங்கள் எரிய,
மணிகள் முழங்க அங்கு பண்டரிநாதன் ஒளிப்பிழம்பாய்
தரிசனம் அளித்தார். சோகாமேளர் மெய்மறந்து
இறைவன் அடிபணிந்து ஆனந்தக் கண்ணீர் பெருக,
அங்கு புரண்டு மகிழ்ந்தார்.



6

நடு இரவில் திடீரென்று பஜனைப் பாடல்களும்
மணிகளும் ஒலிப்பதைக் கேட்ட அர்ச்சகர்கள் ஓடி
வந்தார்கள். கர்ப்பகிரஹத்தில் சோகாமேளர் தியானத்தில்
இருப்பதைக் கண்டு அதிர்ச்சியுற்றனர். சோகாமேளர்
திருடவே வந்தார் என்று கூச்சலிட்டனர் சிலர். வேறு சிலர்
அவரிடம் கடுமையாக நடந்து கொண்டனர்.




7

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, சந்திரபாகா நதியின்
அக்கரையில் சோகாமேளர் வசித்து வந்தார். ஓர் ஏகாதசி
தினத்தன்று இரவு முழுவதும் பஜனை செய்துவிட்டுக்
காலையில் நீராடி, துளசி நீரும் அருந்தினார். அப்போது
திருமண் அணிந்து ஒரு பெரியவர் அங்கு வந்தார்.



8



**9**

அதன்படி ஒவ்வொரு துவாதசியும் அந்தப் பெரியவர் வந்தார். சிறிது காலத்திலேயே அந்தப் பெரியவர் எளியவர்களின் இதய தெய்வமான விட்டலனே என்பதை அந்தத் தம்பதிகள் உணர்ந்து கொண்டனர். ஒரு துவாதசியன்று சோகாமேளர் அயர்ந்து உறங்கிவிட்டார். சிறிது நேரத்தில் திடுக்கிட்டு விழித்தெழுந்து...




**10** பக்தியுடன் சந்திரபாகா நதியில் சோகாமேளர் நீராடச் சென்றபோது அங்கிருந்தவர்கள் அவரைத் தடுத்தனர்.




சோகாமேளர் இறைவனை இழிவுபடுத்துகிறார் என்று அந்தணர்கள் அரசனிடம் முறையிட்டார்கள்.

**11** சோகாமேளர் அரசர் முன்பு நிறுத்தப்பட்டார்.




அவ்வாறே சோகாமேளர் காட்டில் விடப்பட்டார். சிறந்த பக்தரான சோகாமேளருக்கு என்ன நேருமோ என்று ஒரு காவலன் மட்டும் மறைந்து நின்று கவனித்தான்.சோகாமேளரோ, விட்டல் பிரபுவை நினைத்து மெய்மறந்து பாடினார். அப்போது...

**12**



13 உடனே காவலன் ஓடிச் சென்று அரசனிடம் தான் கண்டதைக் கூறினான். அரசனும் சோகாமேளரின் மேன்மையை உணர்ந்தவனாக அவரைக் காண ஓடி வந்தான்; அவரை விடுதலை செய்தான். சோகாமேளர் அதே மகிழ்ச்சியுடன் வீடு வந்து சேர்ந்தார்.

வழக்கம்போல் ஒரு துவாதசியன்று இறைவன் பெரியவர் உருவில் உணவருந்த வந்தார். அப்போது...




இந்த உரையாடலை வீதியில் சென்று கொண்டிருந்த ஓர் அந்தணர் கேட்டார். அவர் தாழ்த்தப்பட்டவரான சோகாமேளரின் வீட்டில் பகவான் உண்டார் என்று கூறியதைச் சகிக்க முடியாமல் கோபத்துடன் சோகாமேளரை அறைந்துவிட்டார்.

பிறகு அவர் நீராடிவிட்டுக் கோவிலுக்குச் சென்றார்.

14 என்ன ஆச்சரியம்! அந்த அந்தணர் கோவிலுக்குச் சென்றபோது, இறைவனின் இடக்கன்னம் வீங்கி இருந்தது. அவரது பீதாம்பரத்தில் தயிர் ஒட்டிக் கொண்டிருந்தது. இவற்றைக் கண்டு அர்ச்சகர்களும் பக்தர்களும் அதிர்ந்து நின்றார்கள்.

முடிவில், தீர விசாரித்ததில் பகவானின் கன்னம் வீங்கி இருப்பதன் காரணம் சோகாமேளரை அந்த அந்தணர் அடித்ததுதான் என்று அனைவரும் அறிந்தனர்.

15 பூர்ணகும்ப மரியாதையுடன் சோகாமேளரை அழைத்துவர பண்டரிநாதன் அர்ச்சகரைப் பணித்தார்.




16 **'ஊனக்கண் கொண்டு கடவுளைக் காண முடியுமா?'**

**ஸ்ரீராமகிருஷ்ணர்: 'இல்லை, ஊனக்கண்களால் காண முடியாது. சாதனை செய்யும்போது அன்பு மயமான சரீரம் ஒன்று நமக்குள் உண்டாகின்றது. அச்சரீரத்திற்கு அன்புமயமான கண்களும் காதுகளும் உண்டு. அவற்றால் நீ இறைவனைக் காணவும் இறைவன் பேசுவதைக் கேட்கவும் முடியும்.**



என் அருமைக் குழந்தைகளே! உண்மையாகவே பகவத் தரிசனம் பெற முடியும். நாம் எப்படி உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கிறோமோ, அதுபோலவே கடவுளைக் கண்டு அவரோடு பேசமுடியும். நான் இப்படிச் சொல்வது வெறும் வார்த்தையல்ல; சத்தியமான வார்த்தைகளேயாகும்.'



# ஸ்ரீநம்பியாண்டார் நம்பி

**1** திருநாரையூர் திருத்தலத்தில் பொள்ளாப் பிள்ளையார் எழுந்தருளியிருந்தார். அவருக்கு ஆதி சைவ குலத் தம்பதியர் நித்திய பூஜை செய்து வந்தனர். அந்தத் தம்பதிக்குத் தெய்வ அருளால் நம்பி என்ற மகன் இருந்தான்.



**2**




**3** மறுநாள் நம்பி பிள்ளையாருக்கு அபிஷேகம் செய்தபின் நைவேத்தியம் படைத்தான்.




**4** நம்பி நீண்ட நேரம் பொறுத்திருந்தும் பிள்ளையார் பிரசன்னமாகவில்லை. முடிவில் நம்பி பக்தி மிகுதியினால்...



**5** பிள்ளையார் திருவமுது செய்தார். நம்பி அவரோடு உரையாடி மகிழ்ந்தான். அப்போது திடீரென்று நம்பிக்குப் பாடசாலை நினைவு வந்தது.

பெருமானே! இன்று தங்களுக்கு வழிபாடு செய்ததால் அடியேன் பாடசாலைக்குச் செல்ல நேரமாகிவிட்டதே, என்ன செய்வேன்?



கவலைப்படாதே குழந்தாய், நானே உனக்கு எல்லாக் கலைகளையும் அருள்வேன்.

**6** நம்பி பொள்ளாப் பிள்ளையாரால் ஆட்கொள்ளப் பட்டதால் 'நம்பியாண்டார் நம்பி' என்று அழைக்கப் பட்டார். நம்பியின் பக்தியை அறிந்த சோழ மன்னன் ராஜராஜன் திருநாரையூரில் அவரைக் காண வந்தார்.

நம்பியாரே! பொள்ளாப் பிள்ளையாருக்கு இப்பழங்களை நிவேதனம் செய்தருளுங்கள்.




நம்பி நிவேதனம் செய்தார்; அவற்றை பிள்ளையார் ஏற்று திருவருள் பாலித்தார். அது கண்டு மன்னன் மகிழ்ந்தான்.

**7** நம்பிகளே! சைவம் செழிக்க அப்பர், சுந்தரர், சம்பந்தர் ஆகிய சமயக்குரவர் மூவர் அருளிச் செய்த தேவாரங்கள் உலகிற்குப் பயன்படாது மறைந்துள்ளன. அவற்றைத் தாங்கள்தான் வெளிக் கொணர வேண்டும்.



அவன் அருள்படி எல்லாம் நடக்கும் மன்னா!

**8** நம்பிகள் பிள்ளையாரிடம் சென்று வேண்டினார்.

எம்பெருமானே! தேவாரத் திருமுறைகள் இருக்கும் இடத்தை அடியேனுக்குக் காட்டி அருள வேண்டும்.




பொள்ளாப் பிள்ளையார் பல திருத்தொண்டர்களின் வரலாறுகளையும் திருவாய் மலர்ந்தருளினார்.

**9**

நம்பியும் ராஜராஜ சோழனும் தில்லையை அடைந்து கூத்தபெருமானை வணங்கி, தில்லைவாழ் அந்தணர்களிடம் முத்திரை பதித்த கதவைத் திறக்கும்படி வேண்டினர்.




**10**

மன்னர் உடனடியாக அம்பலவாணருக்கும் மூவர் திருவுருவங்களுக்கும் விமரிசையாகத் தாமே முன்னின்று வழிபாடு செய்தார்; திருவீதி உலா நடத்தி மூவரையும் பூட்டிய அறையின் முன்பு எழுந்தருளச் செய்தார்.




திருமூவர் சிலையாகத்தானே வந்துள்ளனர் என்று அந்தணர்கள் முதலில் தயங்கினர். பிறகு நம்பிகளும் ராஜராஜனும் விளக்கிக் கூறியதால் அந்தணர்கள் தெளிந்தனர். மூவரது சாந்நித்தியமும் அங்கு உணரப்பட்டது. முடிவில் அந்தணர்கள் அறையைத் திறந்தனர்.

**11**

அறையின் உள்ளே நுழைந்ததும் மன்னரும் நம்பிகளும் அதிர்ச்சி அடைந்தனர். ஏனெனில் ஏடுகள் பலவும் கரையான் அரித்துச் சிதைந்திருந்தன. அப்போது தெய்வவாணி ஒன்று ஒலித்தது.



12 அசரீரி கூற்றின்படி மிஞ்சியிருந்த ஏடுகளைத் திரட்டினர்.




13 நம்பிகள் அப்பர், சுந்தரர், சம்பந்தர் பாடிய பதிகங்களை வரிசைப்படுத்தி ஏழு திருமுறைகளாகத் தொகுத்தார். பிறகு காலத்தால் முந்திய பிரபந்தங்களையும், மன்னன் விரும்பியபடியே தாம் இயற்றிய பத்து பிரபந்தங்களையும் சேர்த்து பதினொரு திருமுறைகளாக வகுத்தார்.



14 பிற்காலத்தில் வந்த சேக்கிழார் பெருமான் மன்னன் அநபாய சோழனின் விருப்பப்படி பெரிய புராணத்தை இயற்றி சிதம்பரத்தில் அரங்கேற்றினார்.
அநபாய சோழன் பெரிய புராணத்தைச் செப்பேட்டில் எழுதி பதினொரு திருமுறைகளுடனும் சேர்த்துப் பன்னிரண்டாம் திருமுறையாக வைத்துச் சிறப்பித்தார். பல்லாயிரம் தேவாரப் பாடல்களுக்கும் மேல் செல்லரிக்கப்பட்ட நிலையில் 8,250 பாடல்கள் மட்டுமே இன்று பாதுகாக்கப்பட்டுள்ளன.





15
- முற்றாத மூங்கிலை எளிதில் வளைக்கலாம். முற்றின மூங்கிலைப் பலவந்தமாக வளைக்க முயன்றால் ஒடிந்து போகும். அதுபோல் இளமையான மனதை ஈசுவரனிடம் செல்லும்படித் திருப்புவது எளிது.
- உலகத்தில் பரிபூரணமடைந்தவர்கள் இருவகையினர். உண்மையை அறிந்து, பின், பிறரைப் பற்றிய சிந்தனையேயில்லாமல், தாம் மட்டும் அந்த உண்மையை அனுபவித்துக் கொண்டு மௌனமாக இருப்பவர்கள் ஒரு வகையினர்.

பெற்ற உண்மையைத் தாம் மட்டும் அனுபவிப்பதில் சந்தோஷமடையாமல் 'நம்மோடு உண்மையை அனுபவிக்க வாருங்கள்' என்று மற்றவர்களையும் கூவியழைக்கும் சுபாவமுடையவர்கள் மற்றொரு வகையினர்.

- பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்



# ஸ்ரீராமரின் குசேலர்

**1**

கண்ணன் - குசேலன் நட்புபோல் ராமன்- ஆனந்தன் நட்பும் பிரசித்தி பெற்றது.

அண்ணா, நம் ஆனந்தன் எதிலும் அதிக அக்கறையுடன் உழைத்து, குருவின் மதிப்பைப் பெற்றுவிடுகிறானே.



ஆம் தம்பி. ஆனந்தன் மிக எளிய குடும்பத்திலிருந்து வந்தவன். என்னைவிட மூத்தவன் என்றாலும் என் மீது மிகுந்த அன்புள்ளவன்.

**2**

குழந்தைகளே, பெரும் யாகம் ஒன்று நிறைவேற்ற மிகவும் நல்ல தர்ப்பைப் புல் அதிக அளவில் தேவைப்படுகிறது. யார் கொண்டு வருவது?



குருவே, இதோ, நான் இவர்களுடன் காட்டிற்குச் சென்று வேண்டிய புல்லைக் கொண்டு வருகிறேன்.

**3**

ஆனந்தனும் மற்ற சீடர்களும் காட்டிற்குச் சென்றனர். பல நாட்களாகியும் அவர்கள் ஆசிரமம் திரும்பவில்லை.

**4**

இதற்கிடையில் ராமனுக்கும் மற்றவர்களுக்கும் குருகுலவாசம் முடிந்தது.

குருதேவா, தங்கள் அருளால் நாங்கள் கற்க வேண்டியவற்றைக் கற்றுக் கொண்டோம். எங்களுக்கு விடை அயோத்தி திரும்ப தாருங்கள்.

அன்புக் குழந்தைகளே, மாணவர்களுக்கு இலக்கணமாகத் திகழ்ந்தீர்கள். வீட்டிலும் நாட்டிலும் நன்மக்களாய்த் திகழ்ந்து நீங்கள் எல்லோரது மதிப்பைப் பெற இறைவனை வேண்டுகிறேன்.



இந்த நேரத்தில் ஆனந்தனிடம் விடை பெறாமல் போவது பெரும் குறையாக இருக்கிறது, குருவே.

அவனிடம் நான் சொல்லிக்கொள்கிறேன். நீங்கள் புறப்படுங்கள்.

**5** சில நாட்களுக்குப் பிறகு காட்டிலிருந்து ஆனந்தன் திரும்பி வந்தான்.

வணக்கம் குருவே. தாங்கள் பணித்தபடி தர்ப்பையைக் கொண்டு வந்துள்ளோம். குருவே, நான் உடனடியாக ராமனைப் பார்க்க வேண்டுமே. எங்கே என் ராமன்?



ஆனந்தா, குருகுல வாசம் முடித்துக் கொண்டு அயோத்தி இளவரசர்கள் நாடு திரும்பிவிட்டனர்.

அதைக் கேட்டதும் ஆனந்தன் மூர்ச்சையானான். ராமனது பிரிவைத் தாங்க முடியாமல் ஆனந்தன் குரு குலத்தைவிட்டு வெளியே வந்துவிட்டான். வெகுதூரத் திற்கப்பாலுள்ள அயோத்திக்குக் கால்நடையாகவே சென்றடைந்தான். அங்கே அரண்மனையின் முன்பு...

**6** ஏய் நில், நீ யார்?



ஐயா, ராமனும் நானும் குருகுலத் தோழர்கள். என் அன்பு ராமனைக் காண வந்தேன்.

அரண்மனைக் காவல்காரர்களிடம் ஆனந்தன் தன்னைப் பற்றிக் கூறினான். அவர்கள் அவனது அன்பால் ஈர்க்கப்பட்டார்கள்.

**7** தம்பி, ராமரிடம் நீ கொண்டுள்ளது வெறும் அன்பல்ல, பக்தி. அடடா, நீ வந்த நேரம் இளவரசர்கள் இருவரும் மகரிஷி விசுவாமித்திரருடன் வனம் சென்றுள்ளார்களே.



ஐயோ! கொடிய விலங்குகளும் கொடும் பூதங்களும் உலவும் வனத்திற்குச் செல்லும்படியான சோதனையா என் ராமனுக்கு! இப்போதே அங்கு சென்று அவனைக் காண்பேன்.

**8** காட்டில் பல நாட்கள் அலைந்தான் ஆனந்தன். முடிவில் பசியாலும் தாகத்தாலும் மெலிந்து தளர்ந்து ஒரு மரத்தடியில் அமர்ந்தான். அவன் மனம் முழுவதையும் ராமன் மட்டுமே ஆக்கிரமித்திருந்தான்.




இவ்வாறு ஏங்கிக் கொண்டே தியானத்தில் ஆழ்ந்து விட்டான் ஆனந்தன். அவனது 'ராமா ராமா' என்ற அன்புச் சொற்கள் காடு முழுவதும் எதிரொலித்தன.

**9**

காலம் கடந்தது. புற உலகை முற்றிலும் மறந்திருந்த ஆனந்தனைச் சுற்றி ஒரு புற்றே உண்டாகிவிட்டது. இந்தக் காலகட்டத்திற்குள் ராமன் சீதையை மணந்து -14 வருடம் வனவாசம் செய்து- ராவணனை வதைத்து அயோத்தி திரும்பியிருந்தார். அவருக்கு முடி சூட்டும் நாளும் வந்தது.



**10**

முடி சூட்டு விழாவில் பங்கேற்பதற்காகக் காட்டு வழியே பல முனிவர்கள் ராமநாமம் ஜபித்துக்கொண்டே சென்று கொண்டிருந்தார்கள்.




**11**

ஆனந்தன் இருந்த புற்றைப் பார்க்காமல் ஒரு முனிவர் அதன் மீது காலை வைத்துவிட, உள்ளே ஆனந்தனின் தியான நிலை கலைந்தது.

ஓ, ராமா! என்ன பாவம் செய்துவிட்டேன்? முனிவரே, அறியாமல் செய்த தவறை மன்னிக்க வேண்டுகிறேன்.




**12**

ஐயனே, ஸ்ரீராமனுக்கு அயோத்தியில் முடி சூட்டு விழா. அங்கு சென்று கொண்டிருக்கிறோம்.




அப்படியா! என் அருமை ராமனைத் தரிசிக்க நானும் உங்களுடன் வரலாமா, முனிவர்களே?

**13** அயோத்தியில், அரண்மனையில் அனைவரின் முன்னிலையில் அகத்தியரும் விசுவாமித்திரரும் ராமனுக்கு சூடி முடிசூட்ட அழைத்து வந்தனர்.




**14** அப்போது கூட்டத்தில் திடீரென ஆனந்தன் 'ஓ ராமா!' என்று சபை அதிரக் கூவிக் கொண்டே ராமனை நோக்கி ஓடினான். அவனைத் தடுத்து நிறுத்த முயன்றனர் சேவகர்கள். அப்போது...




**15** ராமன் மிகவும் மகிழ்ந்து அவையோரைப் பார்த்து...




**16** இதைக் கேட்ட எல்லோரும் ராமனின் ஆழ்ந்த அன்பை மெச்சினர். மரியாதையை ஏற்க மறுத்த ஆனந்தனை ராமன் அணுகிப் பணிவுடன் அவனது காலில் வீழ்ந்து பாத பூஜை செய்து ஆனந்தனின் ஆசிகளைப் பெற்றான். அதன் பின்னரே ராமன் முடிசூட்டிக் கொண்டான்.



ஸக்ய பக்தி, நட்பு நிலை - 'நீ எங்கள் அன்பிற்குகந்த நண்பன்'; தான் செய்த குற்றங்களுக்காகத் தன்னைக் கடிந்து கொள்ளாமல், தனக்குத் தேவைப்படுகின்ற உதவிகளை எப்போதும் செய்துவருகின்ற உண்மை நண்பனிடம் ஒருவன் தன் உள்ளத்தைத் திறந்து காட்டுகிறான். அது போன்றது இந்த நிலை. உண்மை நண்பர்களுக்கிடையே சமத்துவம் நிலவுவதுபோல், இங்கே இறைவனுக்கும் பக்தனுக்கும் இடையே உள்ளும் புறமும் ஒத்த அன்பு நிலவுகிறது. இங்கே இறைவன் நமக்கு உற்ற நண்பன் ஆகிறான்; உயிர் நண்பன் ஆகிறான்.

இங்கே பக்தன் பகவானைத் தனக்குச் சமமாகக் கொள்கிறான்; விளையாட்டுத் தோழனாகக் கருதுகிறான். இந்த உலகில் நாம் அனைவரும் விளையாடிக் கொண்டிருக்கிறோம். சின்னஞ்சிறு குழந்தைகள் தங்கள் விளையாட்டை விளையாடுவது போல் பெரிய பெரிய மன்னர்களும் சக்கர வர்த்திகளும் விளையாடுவதுபோல், அன்பே வடிவான இறைவனும் இந்தப் பிரபஞ்சத்துடன் விளையாடி வருகிறான். - சுவாமி விவேகானந்தர்





# சொர்க்கம் வேண்டாம்!

1

முத்கல முனிவர் சிறந்த ஞானி, தியாகசீலர். வயல்வெளிகளில் உதிர்ந்து கிடக்கும் தானியங்களைச் சேகரித்து வந்து, அவரும் அவரது குடும்பத்தினரும் பத்து நாட்களுக்கு ஒரு முறை முழு உணவு உண்பர். மற்ற நாட்களில் அவர்கள் உண்பது அரை வயிற்றுக் கஞ்சி மட்டுமே.



2

ஒருமுறை துர்வாச முனிவர் அவர்களின் குடிலுக்கு வந்தார்.




3



4



5

உணவு மிகவும் சுவையாக இருக்கிறது. எனக்கும் அகோரப் பசி. உங்கள் விருந்தோம்பலையும் சாதுசேவையையும் பாராட்டுகிறேன்.




6

உணவு அருந்திய பின் துர்வாசர் எதுவும் பேசாமல் சென்றுவிட்டார்.

சுவாமி! மகரிஷிக்கு நல்ல பசி! உணவு முழுவதையும் அவர் உண்டது நமது பாக்கியமே!

ஆம்! வராத விருந்தாளி, மிகச் சிறந்த மகான்! நீ கவலைப்படாதே. பத்து நாட்களுக்குப் பிறகு நமக்கு உணவு கிடைத்துவிடுமே!



7

ஆனால், பத்து நாட்கள் கழித்து துர்வாசர் மீண்டும் வந்தார்.

முத்கலரே! இன்றும் உங்கள் வீட்டில்தான் எனக்கு பிக்ஷை.

ஆஹா! இறைவனது கருணையே கருணை. மீண்டும் எங்களுக்குத் தங்களை உபசரிக்கும் பாக்கியம் கிடைத்துள்ளது.



8

அவ்வாறு ஏழுமுறை துர்வாசர் முத்கலரின் இல்லத்தில் விருந்துண்டார். முத்கலரும் அவரது குடும்பத்தினரும் சிறிதும் வருத்தமின்றி முனிவரை உபசரித்தனர். கடைசியாக முனிவர் வந்தபோது..

முத்கலரே! சற்று உங்கள் வீட்டு வாயிலைப் பாருங்கள்!



முத்கலரின் வீட்டு வாயிலில் தேவர்கள் நின்றார்கள்


9
சுவாமி! இவர்கள் யார்?
முனிவரே! இவர்கள் உங்களைச் சொர்க்கத்துக்கு அழைத்துச் செல்ல வந்திருக்கும் தேவதூதர்கள்.


10
அதைக் கேட்டதும் முத்கலர் ஆழ்ந்து யோசித்தார்.
சொர்க்கத்தில் எங்களால் பிறருக்கு ஏதேனும் உதவி செய்ய முடியுமா?
அங்கு யாருக்கும் எந்த உதவியும் தேவைப் படாது. எழுபது நாட்கள் தாங்களும் தங்கள் குடும்பத்தினரும் உணவு உட்கொள்ளா மல், சாதுவை உபசரித்தீர்கள் அல்லவா? அதனால் சொர்க்கம் உங்களுக்காகக் காத்திருக்கிறது.


11
முத்கலர் சிறிது மௌனமாக இருந்துவிட்டு...
சுவாமி! சொர்க்கத்தில் குறைபாடுகளும் உண்டா? அதன் தன்மைகளை விளக்கியருள வேண்டும்.
அவரவர் புண்ணியத்திற்குத் தக்கபடி சொர்க்கத்தில் போகங்களை அனுபவிக்கலாம். புண்ணியம் தீர்ந்தபின் மீண்டும் பூமியில் பிறக்க வேண்டும். புண்ணியத்தைப் பெருக்கிக்கொள்ள முடியாது.


12
அப்படியா! புண்ணியத்தைப் பெருக்கிக்கொள்ள வாய்ப்பில்லாத சொர்க்கம் எங்களுக்கு வேண் டாம்! உழைப்பு,பக்தி, சேவை, விருந்தோம்பல் போன்ற நற்செயல்களைச் செய்ய ஏற்ற பூவுலகமே போதும்!

**13** துர்வாசர் முத்கலருக்குப் பலவிதமாக ஆசை காட்டினார். ஆனால் முத்கலரும் அவரது குடும்பத்தினரும் எடுத்த முடிவில் உறுதியாகவே இருந்தனர். கடைசியில்...



**14** முத்கலரே! உங்கள் உறுதியைப் பாராட்டுகிறேன். தன்னலமற்ற சேவையால் மண்ணுலகை விண்ணுலகாக்கலாம் என்பதைப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். உங்களைச் சோதிக்கவே நான் இவ்வாறு பேசினேன். உங்கள் எல்லோருக்கும் எனது ஆசிகள். வாழ்க!



நம்மைப் பற்றியே முதலில் நினைத்துக் கொள்ளும் சுயநலம்தான் மிகப் பெரிய பாவமாகும்.

'நான்தான் முதலில் சாப்பிடு வேன், நான்தான் மற்றவர்களைவிட அதிகச் செல்வம் பெற்றவனாக இருப் பேன், எல்லாவற்றையும் நானே வைத் திருக்க வேண்டும்' என்றும், 'மற்றவர் களுக்கு முன்பு நான்தான் சொர்க்கம் போவேன், மற்றவர்களுக்குக் கிடைப் பதற்கு முன்பு நான் முக்தியை அடை வேன்' என்றும் நினைப்பவன்தான் சுயநலவாதி ஆவான்.



'நான்தான் கடைசி ஆளாக இருப்பேன், சொர்க்கத்திற்குப் போவதைப் பற்றியும் நான் பொருட் படுத்தவில்லை. நரகத்திற்குச் செல்வதன் மூலமாக என்னுடைய சகோதரர்களுக்கு என்னால் உதவி செய்ய முடியுமானால், நரகத்திற் குச் செல்லவும் நான் தயாராக இருக்கிறேன்' என்று சுயநலம் இல்லாதவன் சொல்கிறான்.

–சுவாமி விவேகானந்தர்

# காயத்ரீ மந்திர மகிமை




**1** கேரள மன்னர் ஒருவரின் அரண்மனை.




**2** அரசே, இறைவன் மனமிரங்கினால் நடக்காததும் உண்டோ? நீங்கள் விரைவில் குணமடைய அனைவரும் பிரார்த்திக்கிறோம்.




**3** மன்னரின் கனவில் திருமால் தோன்றினார்.







**4**




**5** அடுத்த நாள் நாட்டு மக்களுக்கு முரசறிவிப்பு செய்யப்பட்டது.

நாட்டு மக்களே, நமது மன்னரிடம் உங்கள் அன்பை வெளிப்படுத்த ஓர் அரிய வாய்ப்பு!! தங்கத்தால் நிரப்பப்பட்ட தமது உருவத்தை மன்னர் தானமாகத் தர இருக்கிறார். தானம் பெறுவோரிடம் அவரது நோயும் போய்ச் சேரும். மன்னர் குணமடைய தவசீலர்கள் உதவ முன்வருமாறு கேட்டுக் கொள்கிறோம்.



6




7




8

அரசே, ஒரு நற்செய்தி. கன்னட நாட்டிலிருந்து பிரம்மசாரி ஒருவர் தானம் பெற முன்வந்திருக்கிறார்.




9

எள்ளினால் ஆன மன்னரின் உருவத்தைக் கொண்டு வந்து நிறுத்தினார்கள்.



10

பிரம்மசாரி தானபிம்பத்தை உற்றுநோக்கிச் சைகையால் அதனிடம் ஏதோ கேட்டார்.



11

உருவம் தனது வலது கையைத் தூக்கி மூன்று விரல்களைக் காட்டியது!!




12

தானபிம்பம் இரண்டு விரல்களைக் காட்டியது!




13

கடைசியில் ஒரு விரலை மட்டும் காட்டியது!




பிரம்மசாரி உடனே மன்னரிடம் சென்றார்.

14




15

பிரம்மசாரி தானம் பெற்றதும் மன்னர் உடனே நோயிலிருந்து விடுபட்டார்!




16

சிறிது நேரத்திற்குப் பின்னர்...




17




தானம் வாங்கிய தங்கத்தைக் கொண்டு அந்த பிரம்மசாரி, அகத்திய முனிவரின் அறிவுரைப்படி, மக்களுக்குப் பயன்படும் வகையில் வெட்டிய கால்வாயே 'கன்னடியன் கால்வாய்' என்று இன்றும் பயன்பட்டு வருகிறது.

18

பக்தியுடன் இறைநாமத்தைப் பாடு. அப்போது மலைபோலக் குவிந்திருக்கும் உன் பாவங்கள் எல்லாம் நெருப்புப் பொறி ஒன்றால், மலை போலக் குவிந்த பஞ்சுப் பொதிகள் எரிந்து சாம்பலாவதைப் போல் நசித்துப் போய்விடும்.

- ஸ்ரீராமகிருஷ்ணர்



# விநாயகருக்கு  அர்ச்சித்த அறுகு

**1** விநாயகப் பெருமானுக்கு மாமுனிவர் கௌண்டின்யர் பூஜை செய்து கொண்டிருந்தார். ஆசிரியை என்பவர் அவரது மனைவி.




**2** முனிவர் அவளது மனஓட்டத்தை உணர்ந்தார். பூஜை முடிந்தது. அர்ச்சிக்கப்பட்ட அறுகம்புல்லில் ஒன்றை மனைவியிடம் அளித்தார் முனிவர்.




**3** முனிவரின் பத்தினியை இந்திரன் தக்கபடி வரவேற்று அவர் வந்த விவரம் அறிந்தார்.




**4** குபேரன் இருவரையும் வரவேற்றார். வருகையின் நோக்கத்தை அறிந்ததும் மிக அலட்சியமாக...




5
துலாக்கோலில் அறுகு ஒரு தட்டில் வைக்கப்பட்டது. மறு தட்டில் குபேரன் பொற்காசை வைத்தார்.
இந்திரரே, அந்தப் பக்கத்தட்டில் அறுகை வையுங்கள். இந்தப் பக்கத்தட்டில் குபேரபுரிப் பொற்காசை வைக்கிறேன்.


6
என்ன இது! என் பொற்காசைவிடவா அறுகு கனம்! சரி, இரண்டு காசுகளை வைக்கிறேன்.
இன்னமுமா துலாமுள் உயரவில்லை! இதோ நூறு காசுகளை வைக்கிறேன். இதோ இந்தக் காசுப் பையையே வைக்கிறேன்!


7
நவரத்தினப் பெட்டிகளை எடுத்து வந்து தட்டில் ஏற்றுங்கள்.
விநாயகரைப் பூஜித்த அறுகம்புல்லுக்கு இவ்வளவு பெருமையா!


8
குபேரா! நவரத்தினப் பெட்டிகளால்கூட துலாமுள்ளை அசைக்க முடியவில்லையே!
எனக்காயிற்று, இந்த அற்ப அறுகுக்கு ஆயிற்று. பொக்கிஷத்தையே கொண்டு வந்து வையுங்கள்.


9
குபேரபுரி பொக்கிஷமே காலி! இன்னும் அறுகு உள்ள பக்கம் சற்றுக்கூட அசையவில்லை பிரபோ!
மக்களிடமுள்ள செல்வங்களை எல்லாம் கேட்டு வாங்கி வந்து வையுங்கள். எப்படியும் இதைச் சமமாக்கியே தீருவேன்.


10
இன்னுமா அறுகுத்தட்டு உயரவில்லை! சரி, கடைசியில் குடும்பத்தோடு நானே தட்டில் ஏறுகிறேன்.


11
குபேரா, இதோ நானும் வருகிறேன்.
ஆ! அப்படியும் தட்டு உயரவில்லையே இந்திரரே! என் குபேரப் பட்டணத்தின் செல்வத்திற்கும் வளத்திற்கும் எது ஈடாகும் என்ற மமதையோடு இருந்தேனே. எல்லாம் இந்த அறுகுமுன் எம்மாத்திரம் என்றாகிவிட்டதே.
என் மமதை அழிந்தது! தாயே, மாமுனிவர் இந்த அறுகை எங்கிருந்து எடுத்துக் கொடுத்தார்?


12
விநாயகப் பெருமானுக்கு அர்ச்சித்த அறுகுதான் இது. அழகும் மணமும் கொண்ட எவ்வளவோ மலர்கள் இருக்க அறுகுக்கு சிறப்பு ஏன் என்று எண்ணினேன். அறுகின் சிறப்பை முனிவர் உணர்த்திவிட்டார்.
எனக்கு நிகர் யாரென்று இறுமாந்திருந்தேன். என் கண்கள் திறந்துவிட்டன.

**13**




**14**

சிவபெருமானை மனமுருகித் தொழுதனர். சிவபெருமான் தோன்றினார்.




**15**

குபேரன், இந்திரன் மற்றும் குருபத்தினியும் வேண்டினர். அப்போது விநாயகப் பெருமான் தோன்றினார்




**16**



என்றும் எப்போதும் இறைவன் உங்கள் அனைவரையும் ஆசீர்வதிப்பாராக. உலகமாகிய இந்தப் பெரிய பித்தலாட்டத்திலிருந்து அவர் விரைவில் உங்களை வெளியே அழைத்துச் செல்லட்டும்! உலகமாகிய இந்த சூனியக்கிழவியால் நீங்கள் ஒருபோதும் மயக்கப்படாமல் இருப்பீர்களாக! சங்கரர் உங்களுக்கு உதவுவாராக! உண்மையின் வாசலை உமாதேவி உங்களுக்குத் திறந்து, உங்கள் மயக்கங்கள் அனைத்தையும் போக்குவாராக!

(கடிதங்கள், சுவாமி விவேகானந்தர், பக்.235)

# சிவபக்தர் வித்யாபதி

1 அன்றைய தினம் மகா சிவராத்திரி. சிவன் கோயிலில் கூட்டம் நிரம்பி வழிந்தது.
சிவபெருமானைப் பற்றி ராஜா சிவசிங் இயற்றிய பக்திப் பாடல்களை சிவபக்தரான ஆஸ்தான வித்வான் வித்யாபதி தேனினும் இனிய குரலில் பாடிக்கொண்டிருந்தார்.
அதை அரசரும், அரசி லட்சுமிதேவியும் மெய்ம்மறந்து கேட்டுக்கொண்டிருந்தார்கள்.




2 ஒரு நாள் இரவு வித்யாபதி தூங்கிக்கொண்டிருந்தார்.
அப்போது அவரது கனவில் சிவபெருமான் தோன்றி வித்யாபதியின் தலையில் கைவைத்து ஆசீர்வதித்தார்.




3 வித்யாபதி விடியற்காலையில் நீராடிவிட்டு சிவபூஜையில் அமர்ந்தார்.
அப்போது அவர் ஒரு மாபெரும் தெய்விகசக்தி தனக்குள் பரவுவதை உணர்ந்தார்.




4 வித்யாபதி மறுநாள் அரசவையில் தான் கண்ட காட்சியைப் பாடல்களாகப் பாடினார்.
அதைக் கேட்டு அரசன் கோபம் கொண்டான்.



5 கிராமத்தில் வித்யாபதியின் பக்திப் பணி தொடர்ந்தது.
ஆலயத்தில் அவருடைய கிருஷ்ணநாம பஜனைகள் நடந்தன. ஹரியின் பக்தர்கள் வந்து கேட்டு மகிழ்ந்தார்கள்.




6 ராஜா சிவசிங்கின் சம்ஸ்தானத்தை டில்லி சுல்தான் கைப்பற்றி, அவரையும் கைது செய்து டில்லிக்குக் கொண்டு போனான்.
ராணி லட்சுமிதேவி, வித்யாபதிக்குத் தகவல் சொல்லியனுப்பினாள்.




7 டில்லி போகும் வழியில் வித்யாபதிக்கு, ஜடாமுடி தரித்த அடியார் ஒருவர் வந்து உணவளித்து உதவி செய்தார்.
அன்றிரவு கனவில் வந்திருக்கும் அடியார் சிவபெருமான்தான் என்பது வித்யாபதிக்குத் தெரிந்துவிட்டது.




8 அடியார் அருளால் சுல்தானை வித்யாபதி சந்திக்க முடிந்தது.
வித்யாபதி அரசவையில் பாடிய ராதா-கிருஷ்ண தத்துவப் பாடல்களைக் கேட்டு சுல்தான் உட்பட அனைவரும் மயங்கிப் பரவசமடைந்தார்கள்.



9 சுல்தான் வாக்களித்தபடி ராஜா சிவசிங்கை விடுதலை செய்ய உத்திரவிட்டார்.
வித்யாபதி அரசருடனும் அடியாருடனும் நாடு திரும்பினார். நகரில் மகத்தான வரவேற்பு.




10 அரசரை மீட்டு வந்ததால் ஏராளமான பரிசுகளும் விளைநிலங்களும் வித்யாபதிக்கு மானியமாகக் கிடைத்தன.
இதில் அவர் மனைவி துர்க்காவுக்குக் கர்வம்.
அவள் அடியாரை வேலைக்கு வந்த வேலைக்காரன் என்று நினைத்து கண்டபடி வேலை வாங்கினாள்.




11 இப்படி வீட்டில் நடப்பது எதுவும் வித்யாபதிக்குத் தெரியாது.
ஒரு நாள் அவர் வீடு திரும்பியபோது, அடியார் துணி துவைப்பதைப் பார்த்து துடி துடித்துப் போனார்.




12 வித்யாபதி அவளைத் தனியாக அழைத்துப் போனார்.



13 ஓடிச் சென்று அடியாரைத் தேடியபோது...




14 வித்யாபதி கோயிலுக்குப் போய் உட்கார்ந்துவிட்டார். துர்க்காவும் கூடவே போனாள்.




15 செய்தி அறிந்து ஊர் கூடிவிட்டது. அரசரே வந்து வேண்டியும் வித்யாபதி எதையும் சாப்பிட மறுத்துவிட்டார். அவர் பசியால் உடல் மெலிந்து, சோர்ந்துபோய் சாய்ந்துவிட்டார். அன்றிரவு நடுச் சாமத்தில்...




16 மறுநாள் காலையில் தனிப்பொலிவுடன் வித்யாபதி யாத்திரை புறப்பட்டார்.




நாடெங்கும் அந்தச் சிவபக்தரின் பிரேமை பக்திப் பாடல்கள் ஒலித்தன. முதுமை அடைந்தபோது அவர் கங்கைக் கரையில் உடலை உகுத்தார். அவரது பாடல்கள் இன்றும் கங்கா நதிப் பிரதேசத்தில் பாடப்பட்டு வருகின்றன.

பாண்டுரங்கன் பக்தை



# கோமாபாய்

**1** கோமாபாய், பண்டரிபுரத்தில் கோயில் கொண்டிருக்கும் பாண்டுரங்கன் மீது பெரிதும் பக்தி கொண்டவள்.

அவள் இளம் வயதிலேயே பெற்றோர்களை இழந்தாள்.

திருமணத்திற்குப் பிறகு கணவனையும் இழந்தாள்.




**2** அவளிடம் சிறிது ரொட்டி மாவு மட்டும் இருந்தது. அதை எடுத்துக் கொண்டு அவள் பண்டரிபுரம் புறப்பட்டாள்.

வழியில் கோமாபாய், பீமா நதியைக் கடக்க வேண்டியிருந்தது.




**3** கோமாபாய் கண்களில் நீர் வழிய அழுதபடியே ஓடக்காரனை வேண்டினாள்.



**4** கோபத்துடன் ஓடக்காரன் கோமாபாயை ஆற்றில் தள்ளிவிட்டான்.
கோமாபாய் பாண்டுரங்கனை நினைத்து அழுதாள்.




**5** பக்தர்களைப் பிறவிக்கடலிலிருந்து கரையேற்றும் பரந்தாமன், தன் பக்தையை பீமா நதியைக் கடக்கச் செய்யும் பொருட்டு ஓர் ஓடக்காரன் வடிவத்தில் அங்கு தோன்றினான்.

**6** கோமாபாயிக்குத் தன் எதிரில் ஓடக்காரன் வடிவத்தில் வந்திருப்பவன்
பாண்டுரங்கன் என்று தெரியாது.




**7** ஓடக்காரனாக வந்த பரந்தாமன் தன் ஓடத்தில் கோமாபாயை ஏற்றிக்கொண்டான்.




**8** ஓடக்காரன் வடிவத்தில் வந்த பாண்டுரங்கன் விடியற்காலையில் கோமாபாயை நதியின் மறு கரையில் கொண்டு போய் இறக்கிவிட்டான்.

**9** நதியின் மறுகரைக்குச் சென்றதும் ஓடத்திலிருந்து இறங்கி கோமாபாய் திரும்பிப் பார்த்தாள். அங்கு ஓடக்காரனையும் ஓடத்தையும் காணவில்லை!

பாண்டுரங்கா! இங்கு ஓடக்காரரும் ஓடமும் இல்லையே... இது என்ன அதிசயமாக இருக்கிறது!

**10** கோமாபாய் பண்டரிபுரத்திலுள்ள பாண்டுரங்கன் கோயிலுக்குச் சென்றாள். அங்கு பாண்டுரங்கனை மனம் குளிர தரிசித்தாள். அவள் கோயிலில் நாள் முழுவதும் நடைபெற்ற ஏகாதசி பஜனையில் தன்னை மறந்து மூழ்கியிருந்தாள்.

ஜெய், ஜெய் விட்டல!

பண்டரிநாதா!

பண்டரிநாதா!

**11** மறுநாள் துவாதசியன்று காலையில் கோமாபாய் மனமுருகிப் பிரார்த்தனை செய்தாள்...

இன்று என்னிடம் இருக்கும் ரொட்டிமாவை துவாதசி பாரணையாக அதிதி யாருக்காவது கொடுக்க வேண்டும்...

பாண்டுரங்கா! இது வரையில் அதிதி யாரும் எனக்குக் கிடைக்கவில்லையே! பண்டரிநாதா! துவாதசி பாரணைக்கு ஓர் அதிதியை என்னிடம் அனுப்பி உதவுங்கள். என் ஏகாதசி விரதம் பலனில்லாமல் போய்விடக் கூடாது...

**12** ஓடக்காரனாக வந்த பாண்டுரங்கன், கோமாபாயிக்காக வயதான ஒரு வைணவ பக்தர் உருவத்தில் அவளிடம் வந்தான்.



**13** கோமாபாய் எல்லையற்ற மகிழ்ச்சியுடன் ரொட்டி சுட்டு, அதைத் தன்னிடம் வந்த வைணவ பக்தருக்குப் பரிமாறினாள்.

**14** வைணவ பக்தர் ரொட்டி சாப்பிட்டுக்கொண்டிருந்தபோது, ருக்மிணி பிராட்டியார் முதிய தோற்றத்துடன் அங்கு வந்து...




**15** தம்பதிகள் இருவரும் கோமாபாய் அளித்த ரொட்டியை மிகுந்த மகிழ்ச்சியுடன் உட்கொண்டனர்.

**16** பின்னர் அவர்கள் இருவரும் பாண்டுரங்கன் - ருக்மிணி சமேதராகக் கோமாபாயிக்குத் தரிசனம் தந்தனர்.





# அரக்கியும் அன்னை ஆனாள்!













5
மகாபலி தன் மனைவி விந்தியாவலி மற்றும் மகள் ரத்னமாலாவோடு வாமனருக்குப் பாத பூஜை செய்தார்.
வர வேண்டும் பிரம்மசாரியே. தங்கள் வரவால் பெரும் பாக்கியம் பெற்றேன்.


6
கீர்த்தியில் தாங்கள் பிரகலாத னின் பேரன் என்பதை நிரூபித்துவிட்டீர்கள் சக்ரவர்த்தி. உங்கள் எல்லோரது விருப்பமும் நிறை வேறட்டும்.
ஆஹா! எத்தனை அற்புதமான சிறுவன்! இறைவா, இவனுக்குத் தாயாகிப் பாலூட்டும் பாக்கியம் அடுத்த பிறவியிலா வது எனக்குக் கிடைக்க வேண்டும்.


7
சுவாமி, தங்களுக்கு என்ன வேண்டும்? தாங்கள் கேட்பதைக் கொடுத்தால்தான் யாகம் நிறைவுறும்.
பெரிதாக ஒன்றும் வேண்டாம். மூன்றடி நிலம் அதுவும், என் காலடியால் அளந்து கொடுத்தால் போதும்.
அவ்வளவுதானே! இதோ தந்தேன் வாமனத் திருவே. ஏற்றுக் கொள்ளுங்கள்.


8
உடனே வாமனர் திரிவிக்கிரமனாகி வானையும் பூமியையும் இரண்டடியால் அளந்து விட்டு...
மூன்றாவது அடிக்கு எங்கே இடம் மகாபலி?

9

பிரகலாதரை ஆட்கொண்ட பெருமாளே, இதோ என் தலை. மூன்றாவது அடியாக அளந்து ஆட் கொள்ளுங்கள்.

மகாபலி, ஏழு சிரஞ்சீவிகளுள் நீயும் ஒருவனாக இடம் பெறுவாய். உன்னை நான் எப்போதும் பாதுகாத்துக் கொண்டிருப்பேன்.

10

தந்தையை இழந்ததால் ரத்னமாலா கோபமடைந்தாள்.

இந்த நயவஞ்சகனுக்கா தாயாகிப் பாலூட்ட நினைத்தேன்? இவனை விஷம் கொடுத்துக் கொன்றால் என்ன?

11

காலம் உருண்டோடியது. திருமால் கிருஷ்ணனாக தேவகியின் வயிற்றில் அவதரித்து யசோதையிடம் கோகுலத்தில் வளர்ந்து வந்தார்.

கிருஷ்ணனைப் பழிவாங்க, கம்சனின் அரக்கர் குடும்பத்தில் ரத்னமாலா பூதனையாகப் பிறந்தாள்.

பூதனா, என்னைக் கொல்லப் பிறந்தவன் ஆயர்பாடியில் வளர்கிறானாம்.

மகாராஜா, அந்தக் குழந்தையிடம் எனக்கும் ஒரு வழக்கு இருக்கிறது. அவனை நானே முடித்துவிடுகிறேன். உத்தரவு கொடுங்கள்.

வெற்றியோடு திரும்பி வா.

12

கோகுலத்தில் நந்தகோபர் இல்லம். பூதனை அழகிய பெண்ணாக உருவெடுத்தாள்.

யாரம்மா நீ! இந்த அகால வேளையில் வந்திருக்கிறாய்?

அம்மா, என் கணவன் வீட்டைவிட்டுத் துரத்திவிட்டான். என் குழந்தையைக்கூட என்னிடம் தரவில்லை தாயே.

**13**

அடப் பாவமே. நீ ஏதாவது சாப்பிடம்மா.

வேண்டாம் தாயே. உங்கள் குழந்தையின் அழுகுரல் கேட் கிறது. நான் அதற்குப் பாலூட்டவா?

சரி, என் தெய்விகக் குழந்தைக்குப் பாலூட்டும் வேளை, நீயும் உன் குழந்தையோடு விரைவில் சேர வேண்டும். வாம்மா.

**14** குழந்தை கண்ணனுக்குப் பூதனை விஷம் தடவிய தன் மார்பிலிருந்து பாலூட்ட...

என் தந்தையை வஞ்சித்தவனே, இதோ என் பழி தீர்ந்தது.

கண்ணன் பாலோடு அவள் உயிரையும் சேர்த்துக் குடித்துவிட்டான்.

**15**

பூதனைத் தாயே, தாய்ப் பாசத்தின் மிகுதியால் என்னைக் குழந்தையாக அடைய விரும்பினாய். பிறகு பழி தீர்க்க எண்ணினாய். தாயுள்ளத்தின் சிறப்பிற்கும் அரக்கத்தனத்தின் கொடுமைக்கும் நீயே எடுத்துக்காட்டு.

பூதனையை அழித்து அருளினார் கண்ணன்.

**16** நமக்குப் பின்னால் ஒரு சக்தி இருந்து கொண்டு, அன்பு என்ற ஒன்றை நோக்கி நம்மை உந்தித் தள்ளிக் கொண்டு செல்கிறது. உண்மைப் பொருளை எங்கே தேடுவது என்பது நமக்குத் தெரியாது. ஆனால் நமது இந்த அன்பு அதைத் தேடிச் செல்வதற்காக நம்மை முன்னோக்கிச் செல்லத் தூண்டுகிறது. நாம் திரும்பத் திரும்ப நமது தவறை உணர்கிறோம். ஏதோ ஒன்றைப் பற்றுகிறோம், அது நமது பிடியிலிருந்து நழுவிவிடுகிறது. உடனே இன்னொன்றைப் பற்றுகிறோம். இவ்வாறு முன்னேறிச் செல்கிறோம். இறுதியில் வருகிறது ஒளி. நம்மை நேசிக்கும் ஒரே ஒருவரான ஆண்டவனிடம் நாம் வருகிறோம். அவனது அன்பு ஒரு போதும் மாறாதது. எப்போதும் நம்மை அரவணைக்கத் தயாராக இருப்பது.

அன்பு மதம் - சுவாமி விவேகானந்தர்





# ஆலயக் கணக்கு கேட்ட அரசன்







3

ஆலயம் அமைச்சரின் பொறுப்பில் உருவாகத் தொடங்கியது. சிற்பிகளும் ஸ்தபதிகளும் போட்டி போட்டுக் கொண்டு தங்கள் கைவண்ணம் காட்டினர்.



4

சில மாதங்கள் கழித்து அமைச்சர் அரசவைக்கு வந்தார்.




5

ஒரு நாள் அரண்மனை உப்பரிகையில் அரசர் உலவிக் கொண்டிருந்தார். கீழே தோட்டத்தில்...




6




மறுநாள் ஆலயம் உருவாகிக் கொண்டிருக்கும் இடத்திற்கு மன்னர் வந்தார்.






8 அரசர் அவ்வாறு கூறியதும் அமைச்சர் கலங்கிவிட்டார். மெய்யன்பராகிய அவர் தேசத்திற்கும் தெய்வத்திற்கும் சேவை செய்கிறோம் என்று கணக்கு வைத்துக் கொள்ளவில்லை. மேலும் அரசர் கணக்கு கேட்பார் என்று எளிய உள்ளம் கொண்ட அவர் எதிர்பார்க்கவில்லை. மறுநாள் அமைச்சர் பணிக்களத்தின் முன்னிருக்கும் விநாயகரிடம்...




10 அடுத்த நாள் ஒரு பிரம்மசாரி ஆலயக் கணக்குகளுடன் அரண்மனை சென்று அரசரைச் சந்தித்தார்.




11
பாமரத்தனத்தால் அமைச்சரின் நேர்மையை உரசிப் பார்த்து என்னைத் தாழ்த்திக் கொண்டு விட்டேனே!
மன்னா, ஏதேனும் ஒரு நாளைக் குறிப்பிடுங்கள். அந்த நாளுக்கான கணக்கு ஏட்டைத் தருகிறேன். நீங்களே சோதியுங்கள்.


12
எண்பேராயத்தினரே, சோதனை எனக்கே! எந்த நாள் கணக்கைப் பார்க்க வேண்டும் என்று நீங்களே கேளுங்கள்.
கணக்கரே, தொடக்க நாள் கணக்கு ஏட்டை எடுத்து முதல் கணக்கைப் படியுங்கள்.
அரசே! அமைச்சர் அப்பழுக் கற்றவர். அவரிடம் கணக்குக் கேட்டது முறையல்ல. ஆதலால் அரசே, நீங்களே முடிவெடுங்கள்!


13
எத்துநூல் கணக்கு எண்ணாயிரம்.
மன்னா! எந்த ஒரு பெரிய கட்டிடப் பணிக்கும் முதல் செலவாக எத்து நூல்கண்டு வாங்குவர். அந்த நூலைக் கொண்டு அளவெடுத்து அதன் அடிப்படையில்தான் அடுத்தடுத்த செலவுகளைச் செய்வார்கள். இதற்கு மேலும் அமைச்சரின் கணக்குகளைச் சந்தேகப்படலாமா?
கணக்கரே போதும்! சுவடிகளை எடுத்துக் கொண்டு கிளம்புங்கள். ஊர் வாயை மூடவே இதைச் செய்தேன் என்று அமைச்சரிடம் கூறுங்கள். அவரைப் பற்றி நான் அறிந்ததை அவையும் அறிய வேண்டும் என்று நினைத்தேன்.
அரசர் கூறியதைக் கேட்டு அனைவரும் மகிழ்ந்தனர்.


14
கணக்கர் சென்ற சிறிது நேரத்திற்குள் மீண்டும் அமைச்சருடன் அவரே வந்தார்.
வாருங்கள் அமைச்சரே! தாங்கள் நீடூழி வாழ வேண்டும். உங்கள் கணக்காளர் காண்பித்த கணக்குகளில் உங்களது நேர்மையைக் கண்டேன்.
என்ன என் கணக்காளர் இங்கு வந்தாரா! இவர் எப்போதும் என்னோடுதானே இருக்கிறார்!


15
உடனே அரசர் ஆச்சரியத்துடன் அவையில் நடந்ததைக் கூறினார். அமைச்சரும் தாம் விநாயகப் பெருமானிடம் பிரார்த்தனை செய்ததைப் பற்றி அரசரிடம் கூறினார்.
அப்படியானால் கணக்கராக வந்தது முன்வாசல் விநாயகப் பெருமான்தானா!
ஆம் அரசே! பக்தனின் நேர்மையை விண்டுரைக்க, தானே கணக்கராகி 'எத்துநூல் எண்ணாயிரம்' என்று மொழிந்த விநாயகப் பெருமானின் கருணையே கருணை!


16
'கலியுகத்தில் உண்மை பேசுவது தவம். சத்தியமே இறைவன். உண்மை பேசுபவர்களை இறைவன் வழிநடத்துகிறார்.'
-ஸ்ரீராமகிருஷ்ணர்

# நீதிக்காக வாழ்ந்த சகோதரர்கள்

மூலம் : மகாபாரதம்

**1** சீலம் மிக்க சகோதரர்களான சங்கவும் லிகிதவும் தனித்தனியாக ஆசிரமம் அமைத்துக் கொண்டு தவமியற்றி வந்தார்கள்.




**2**




**3** ஒரு நாள் கொளுத்தும் வெயிலில்...



**4**

அண்ணன் இன்னும்
வரக் காணோமே.
பசியும் தாகமும் தாங்க
முடியவில்லையே.
மாம்பழ வாசனை
வீசுகிறதே.
அண்ணனின்
தோப்புதானே, பறித்துச்
சாப்பிடலாம்.



**5**

சங்க வந்தார். லிகித மாம்பழம் சாப்பிடுவதைக் கண்டு வருந்தினார்.

அண்ணா,
இந்த
மாமரத்தின்
பழங்கள்
மிகவும்
இனிக்கின்றன.





லிகிதா,
உரிமையாளர்
இல்லாத
தோட்டத்தில் பழம்
பறிப்பது
திருட்டுதானே?

**6**

ஆமாம், உண்மைதான் அண்ணா.
பசியினால் நான் யோசிக்கவில்லை.
இதற்கு என்ன தண்டனை கொடுத்தாலும்
மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்கிறேன்.





உன்னை அரசரிடம் அனுப்பி வைக்கிறேன்.
தண்டனையை அவரே வழங்கட்டும்.

அரசவையில்......



இது ஒரு
வினோதமான
வழக்கு.
அண்ணனின்
தோட்டத்து
மாங்கனிகளைத்
தின்றதற்காகத்
தம்பிக்குத்
தண்டனை வழங்க
வேண்டுமாம்!
ஒரு தம்பிக்கு
அண்ணனிடம்
இந்த உரிமைகூட
இல்லையா?

8

அப்படியல்ல அரசே. ஒருவர் தோட்டத்துக் கனியைப் பறிப்பதற்கு முன், சம்பந்தப்பட்டவரிடம் அனுமதி கேட்டிருக்க வேண்டும். அப்படிச் செய்யாதது திருட்டுதான். அந்தத் திருட்டுக்குத் தண்டனை வழங்குவது தங்களது கடமை.



அற்புதம் லிகிதரே. தங்களைப் போன்ற ஒரு தர்மசீலரைத் தம்பியாக அடையத் தங்கள் அண்ணன் புண்ணியம் செய்திருக்க வேண்டும்.

9

மாற்றிச் சொல்கிறீர்கள் அரசே. இப்படிப்பட்ட தர்மசீலரை அண்ணனாக அடைய நான்தான் கொடுத்து வைத்திருக்க வேண்டும்.





லிகிதா, உங்களை நான் மன்னிக்கிறேன். உங்களிடம் குற்றம் எதையும் காணவில்லை. மேலும் தண்டிப்பது மட்டும்தானா மன்னரது உரிமை? மன்னிப்பதும்கூட மன்னனின் உரிமைதான். ஆகையால் நீங்கள் செல்லலாம்.

10

அரசே, தங்கள் மன்னிப்பை ஏற்க முடியாது. குற்றவாளியான நானே தண்டனையை விரும்பும்போது மன்னிப்புக்கு ஏது இடம்? இதே குற்றத்தை நாளை வேறு யாராவது செய்தாலும்கூட மன்னிப்பீர்களா? சமூகத்தில் ஒரு தவறான உதாரணம் உருவாக நீங்கள் காரணமாகலாமா? என் குற்றத்திற்கு உரிய தண்டனையைத் தாங்கள் விதித்தே ஆக வேண்டும்.

அரசர் தீவிரமான யோசனைக்குப் பின்னர்.....



திருட்டுக் குற்றத்திற்கு உரிய தண்டனை திருடிய கைகளை வெட்டிவிடுவதே. அதையே மிகவும் வருத்தத்தோடு லிகிதருக்கு விதிக்கிறேன்.

11

தண்டனை நிறைவேறியது.

தம்பி, கைகளை இழந்துவிட்டதற்காக வருந்துகிறாயா?




தம்பி, உண்மையில் நான்தான் பெருமைப்பட வேண்டியவன். கங்கையில் குளித்துவிட்டு முன்னோர்களுக்குத் தர்ப்பணம் செய்துவிட்டு வா. இருவரும் சேர்ந்து உணவருந்தலாம்.




13
கங்கைக் கரையில் நின்றுகொண்டு லிகிதர் தர்ப்பணம் செய்ய தயாரானார். அப்போது திடீரென...




14
தம் தம்பிக்குக் கைகள் மீண்டும் வந்துவிட்டன என்றதும் சங்க எல்லையற்ற மகிழ்ச்சி அடைந்தார். அவர் இறைவனிடம் இடைவிடாது வேண்டி வந்ததும் அதுதான்.



# ஜைன தீர்த்தங்கரர் நேமிநாதன்

**1** சமுத்திரவிஜயன் என்ற மன்னன் தன் மனைவி சிவதேவியுடன் குசார்த்த நாட்டை ஆட்சி செய்து வந்தான்.
அவர்கள் தங்களுக்குப் பிறந்த குழந்தைக்கு நேமிநாதன் என்று பெயர் சூட்டினார்கள்.

**2** உக்கிரவம்சத்தைச் சேர்ந்த உக்கிரசேன மன்னனின் மகள் ராஜமதி. பேரழகியான அவளை, சமுத்திரவிஜயன் தன் மகன் நேமிநாதனுக்குத் திருமணம் செய்து வைக்க நினைத்தான்.

அதன்படி பெரியோர்கள் சேர்ந்து நேமிநாதனுக்கும் ராஜமதிக்கும் திருமணம் நிச்சயித்தார்கள்.

**3**




**4** சமுத்திரவிஜயன் தனது அரசவையில்...



**5** திருமண நாளன்று எல்லோரும் வழிமேல் விழிவைத்து மணமகன் நேமிநாதனின் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள்.
நேமிநாதனும், தமது சுற்றத்தாரோடு படைவீரர்கள் சூழ பெரும் கூட்டத்துடன் உக்கிரசேனரின் அரண்மனைக்குப் புறப்பட்டார்.
அவர் யானை மீது வரும் வழியில் களிப்பும் வனப்பும் தவிர வேறு காட்சிகளே இல்லை.

**6**




**7** நேமிநாதன் உக்கிரசேனரின் அரண்மனையை நெருங்கும்போது வழியில் கூண்டுகளில் அடைக்கப்பட்டிருந்த பறவைகளையும் விலங்குகளையும் பார்த்தார்.
அவைகள் மிகுந்த வேதனையோடு கத்தி ஓலமிட்டன.



8. அந்த ஓலங்களைக் கேட்டதும் சட்டென்று நேமிநாதனின் எல்லா மகிழ்ச்சியும் மறைந்தது.




9. அதைக் கேட்டதும் நேமிநாதன் அதிர்ச்சி அடைந்தார்.
அவர் உள்ளத்தில் பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டது.




10.




11. நேமிநாதனின் மனதில் ஓர் உறுதியான முடிவு பிறந்தது.




நேமிநாதன் யானை மீதிருந்து இறங்கி எவரிடமும் சொல்லாமல் விறுவிறுவென்று தன் அரண்மனை திரும்பினார்.

12 எனக்கு இந்த உலக வாழ்க்கையே வேண்டாம். நான் துறவறம் மேற்கொள்ள விரும்புகிறேன்.



13 நேமிநாதன் துறவியாகி தன் காலத்தை ஆழ்ந்த தியானத்திலும் தவத்திலும் கழிக்க ஆரம்பித்தார்.



14 விரைவில் அவர் உலகில் வாழும் எல்லா உயிர்களோடும் மனிதனுக்கு உள்ள தோழமையை உணர்ந்தார்.




15 நேமிநாதன் தூர நாடுகளுக்கும் சென்று அந்நிய மக்களுக்கும் அன்பு பற்றி உபதேசித்தார்.




ஜைனர்களால் ஜைன சமயத்தின் இருபத்திரண்டாவது தீர்த்தங்கரராக நேமிநாதன் போற்றப்படுகிறார்.



# குருக்ஷேத்திரம் தோன்றிய வரலாறு

வலிமை, ஆண்மை, க்ஷத்திரிய வீரியத்துடன் கூடிய பிரம்மதேஜஸ் - இவையே இப்போது நமக்கு வேண்டும் என்ற சுவாமி விவேகானந்தரின் கூற்றை விளக்கும் ஒரு கதை.

**1** குரு மன்னரின் அரசவை.

வாராணசியில் தங்கிவிடும் முடிவை மாற்றிக் கொள்ளுங்கள் அமைச்சரே. நம் சரஸ்வதி நதியை விடவா கங்கை நதி புண்ணியம் மிக்கது?

அப்படியா!



ஆம் மன்னவா. பாவங்கள் செய்வதைத் தடுக்கும் வருணை நதியும், செய்த பாவங்களைக் கரைத்துவிடும் அசி நதியும் சூழ்ந்துள்ள காசியின் கங்கைக் கரையில் உயிர் துறப்பது மிக புண்ணியம் என்பது முன்னோர் நம்பிக்கை.

**2**



அங்குமிங்கும் அலைந்து இறக்கும் நிலையில் உள்ளவர் காதில் தாரக மந்திரத்தை ஓதி சிவபிரான் அருளுகிறாராம். எனக்கோ குழந்தைகள் இல்லை. நீண்ட காலமாக அமைச்சராக இருந்து உதிரப் போகும் பழுத்த பழமாகிவிட்டேன். இனியாவது போகின்ற வழிக்குப் புண்ணியம் தேடிக் கொள்ள வேண்டாமா? எனக்கு விடை கொடுங்கள்.

**3** அமைச்சர் எல்லாவற்றையும் துறந்து சென்றது மன்னரைப் பெரிதும் பாதித்துவிட்டது.

நம் சரஸ்வதி நதியும் கங்கையின் கிளைதானே? காசியில் உயிர் பிரிவது அவ்வளவு புண்ணியமா? காசிக்குப் போவது அனைவருக்கும் சாத்தியமா? காசியில் உயிர் துறக்க முடியாதவர்களுக்குச் சொர்க்கம் செல்ல என்ன வழி? காசிக்கு ஈடான இன்னொரு புண்ணியத் தலத்தை நாமே உருவாக்கினால் என்ன!



**4** உடனே மன்னர் பல ஞானிகளின் அறிவுரையை நாடினார்.

எத்தகைய பாவம் செய்தோரும் உயிர் பிரிந்தால் சொர்க்கம் கிடைக்கக்கூடிய ஒரு க்ஷேத்திரத்தை உருவாக்குவதா?

வீணான முயற்சி மன்னா இது!

இது நடக்கக் கூடியதுதானா மன்னா! யோசியுங்கள்!



மன்னர் அமைதியிழந்தார்.

5 காட்டில் தவம் செய்து கொண்டிருந்த முனிவர்களிடம் மன்னர் விசாரித்தார்.




6 மகரிஷி கூறியபடி மன்னர் கடுந்தவம் இயற்றினார். அதனால் சிவபெருமானும் யமராஜனும் தோன்றினர்.




7 தெய்வாம்சம் மிக்க சிவனின் எருதையும் எமனின் எருமையையும் ஏரில் பூட்டி நிலத்தை உழுதார் மன்னர்.




8 அப்போது வானவெளியில் உலா வந்த இந்திரன் ஆச்சரியத்தோடு கீழிறங்கி வந்தான். ஏளனமாக மன்னனிடம்...




9
மன்னர் தொடர்ந்து உழுது கொண்டிருக்க, சிவன் தோன்றினார்.
குரு மன்னா, இதற்காகத்தான் எருமையையும் ரிஷபத்தையும் இரவல் கேட்டாயா? என்ன பயிரிடப் போகிறாய்?


10
பெருமானே, காசிக்குச் சமமான புண்ணியத் தலத்தை உருவாக்கப் பூமித் தாயைத் தயார்படுத்திக் கொண்டிருக்கிறேன்.
இது நடக்கக்கூடிய செயலாகத் தோன்றவில்லையே!
அவ்வாறு கூறிவிட்டு சிவபெருமான் மறைந்துவிட்டார்.


11
‘ஓம் நமச்சிவாய, ஓம் நமோ நாராயணாய’ என்ற கோஷத்தோடு மன்னர் கலங்காமல் தொடர்ந்து பூமியை உழுது கொண்டிருந்தார். அப்போது விஷ்ணு தோன்றினார்.
குரு, என்ன செய்து கொண்டிருக்கிறாய்?
பரந்தாமா, தாங்கள் அறியாததா? காசிக்கு ஈடான, ஒரு புண்ணியத் தலத்தை உருவாக்க பூமியை உழுது கொண்டிருக்கிறேன். தாங்கள் ஆசி கூறுங்கள்.


12
சிவ வாகனத்தையும் எம வாகனத்தையும் பூட்டி உழுவதால் பூமியில் உள்ள தீய சக்திகள் அழியும்; பூமி புனிதமடையும் என்பது உண்மையே. அதற்குப் பிறகு இந்தப் பூமிக்கு நீ எதிர்பார்க்கும் சக்தியை எப்படிக் கொடுப்பாய்?
பெருமானே, தாங்களே இதற்கொரு வழி கூறி என்னை வழி நடத்தி அருள வேண்டும்.













குரு மன்னன் புனித கலப்பையால் தெய்வாம்சம் கொண்ட எருமை, ரிஷபத்தைப் பூட்டி உழுத 48 கோசங்கள் பெஹோவா, கலாயட், அமின், பல்கு, தானேஸ்வர், ஜோதிஸர் ஆகியவை குருக்ஷேத்திர நகர் பகுதிகளே. பாவம் செய்பவர்களை மனதில் கொண்டு அவர்களுக்கும் வீடுபேறு கிடைக்கத் தன்னையே தந்த குரு மன்னரின் தியாகம் வாழ்க!

# ஜோதிர்லிங்கம் திரியம்பகேசுவரர்

1 பிரம்மகிரி மலைச்சாரலில் ஆசிரமம் அமைத்து கௌதம முனிவரும் அவர் மனைவி அகல்யையும் வாழ்ந்து வந்தார்கள்.
ஒரு சமயம் அந்தப் பகுதியில் தொடர்ந்து மழை பெய்யாததால் கடும் வறட்சி ஏற்பட்டது.
ஆதலால் கௌதமரும் அகல்யையும் மழை பெய்ய வேண்டும் என்று சிவபெருமானை நோக்கிக் கடுந்தவம் புரிந்தனர்.




2 கௌதமரும் அகல்யையும் செய்த தவம் காரணமாக சிவபெருமான் அந்தப் பகுதியில் மழை பெய்யும்படி செய்தார்.
அதனால் ஆசிரமத்திற்கு அருகிலுள்ள குளங்கள் மழை நீரால் நிரம்பின.
ஆசிரமம் செழிக்கத் துவங்கியது.



3 பசுமையாக விளங்கிய அந்தப் பகுதியில் மற்ற முனிவர்களும் தங்கள் பத்தினிகளுடன் வந்து குடியேறி வாழ ஆரம்பித்தார்கள்.
சில காலம் கடந்தது.
தங்களின் நல்வாழ்க்கைக்கு வழி செய்த அகல்யையின் நல்ல குணத்தை அந்த முனி பத்தினிகள் உணரவில்லை.
எனவே சில நாட்களில் முனி பத்தினிகளுக்கிடையில் கருத்து வேறுபாடு உண்டாயிற்று...



4

கௌதமரும் அகல்யையும் செய்த நன்றியை மறந்து, முனி பத்தினிகள் எல்லோரும் ஒன்று சேர்ந்து பிள்ளையாரிடம் சென்று பிரார்த்தனை செய்தார்கள்.

விநாயகப் பெருமானே! கௌதமனும் அகல்யையும் இந்த இடத்தை விட்டே போக வேண்டும். அதற்கு நீங்கள்தான் வழி செய்ய வேண்டும்.

ரிஷி பத்தினிகளே! நீங்கள் அனைவரும் மழை இல்லாமல் தவித்தீர்கள். அப்போது கௌதமரும் அகல்யையும் தங்கள் தவத்தால் மழை வரவழைத்து உங்கள் அனைவருக்கும் புகலிடம் தந்தார்கள். அவர்கள் உங்களுக்கு எந்தத் துன்பமும் செய்யவில்லை. நீங்கள்தான் அவர்கள் உங்களுக்குச் செய்த நன்றியை மறந்து, அவர்கள் இருவரையும் இங்கிருந்து துரத்த நினைக்கிறீர்கள். இது பெரும் தவறு...

விநாயகப் பெருமானே! எங்கள் விருப்பத்தை மறுக்காமல் நிறைவேற்றி அருள் புரியுங்கள்!

5

முனி பத்தினிகளுக்கு விநாயகர் பாடம் புகட்ட விரும்பினார். எனவே அவர்களின் வேண்டுகோளுக்குச் செவி சாய்த்து, அவர் மாயப் பசு உருவம் எடுத்து கௌதமரின் ஆசிரமத்திற்குச் சென்று அங்கிருந்த செடி கொடிகளை மேய்ந்தார்.

அகல்யை... இங்கே வா... இந்தப் பசு எப்படி நம் ஆசிரமத்திற்குள் நுழைந்தது?

அதிசயமாக இருக்கிறதே! அருகில் சென்று பார்ப்போம்.

6

பசுவைத் துரத்த கௌதம முனிவர் ஒரு சிறு கோலை எடுத்துக்கொண்டு போனார். அந்த மாயப்பசு அவர் வருவதற்கு முன்பே கீழே விழுந்து உயிர் துறந்தது.

ஆ! என்ன ஆயிற்று? பசு கீழே சாய்ந்துவிட்டதே!

சுவாமி! அபச்சாரம்... பசு இறந்துவிட்டது!

இறைவா! இது என்ன சோதனை?

7 வாய்ப்பை எதிர்பார்த்திருந்த முனி பத்தினிகள், தங்கள் கணவர்களிடம் சென்று...




8 முனிவர்கள் கௌதமரிடம் சென்று...




9 அவர்களுக்குக் கௌதம முனிவர் மறுப்பு எதுவும் சொல்லாமல் சிவபெருமானை நோக்கிக் கடுந்தவம் செய்ய ஆரம்பித்தார்.
அதன் விளைவாக அவருக்கு சிவபெருமான் உமாதேவியாருடன் காட்சித் தந்தார்.



10 முனி பத்தினிகளின் சதி திட்டத்தை சிவபெருமான் கௌதம முனிவருக்கு விளக்கினார்.




11




12 பரமசிவனிடமிருந்து பெற்ற கங்கை நீரைக் கௌதமர் அருகில் பிரம்மகிரியில் வளர்ந்திருந்த அத்தி மரத்தின் வேரில் விட்டார்.
அதனால் கங்கை பெருகி 'கோதாவரி நதி' என்ற பெயரில் ஓட ஆரம்பித்தது.

13




14




15 சிவபெருமானிடமிருந்து கங்கை நீரை கௌதமர் பெற்றதால், இந்த நதி 'கௌதமி' என்றும், 'கோதாவரி' என்றும் அழைக்கப்படுகிறது.
கௌதமருக்கு சிவபெருமான் காட்சிக் கொடுத்த இடத்தில் 'திரியம்பகேசுவரர்' என்ற பெயரில் எழுந்தருளி பக்தர்களுக்கு எப்போதும் அருள் புரிந்து வருகிறார்.

# மீனாட்சி கல்யாணம்

1

ஒரு நாள் தேவேந்திரன் இந்திர சபையில் இருந்தான். அங்கு நாரதர் வந்து கூறினார்...




2

இந்திரன் மலயத்வஜ மன்னனின் வேள்விச் சாலைக்குச் சென்றான்.




3

புத்திரகாமேஷ்டி யாகம் நடைபெறுகிறது வேள்விக்குண்டத்தில் அக்கினி தாமரை மலர் போல் எரிந்தது. அதன் நடுவிலிருந்து ஓர் அழகிய பெண் குழந்தை மேலே தோன்றியது.

தலைமை வேதியர் கூறினார்...



**4** தலைமை வேதியர் யாககுண்டத்தி லிருந்து குழந்தையை எடுத்து மலயத்வஜன் - காஞ்சனமாலை தம்பதியரிடம் கொடுத்தார்.




**5** அப்போது ஆகாயத்தில் ஓர் அசரீரி கேட்டது.

மன்னா! வருந்த வேண்டாம்.
இந்தக் குழந்தை வளர்ந்து தனக்குரிய கணவனைக் காணும் போது இதனுடைய மூன்றாவது மார்பகம் மறைந்துவிடும்.
இந்தக் குழந்தையை இளவரசனைப் போல் வளர்த்து வாருங்கள்.



**6** குழந்தை தடாதகை வளர்ந்து இளம் பெண் ஆனாள்.

அரசே! இளவரசியார் மன்னர்களுக் குரிய போர்த்தொழில் முதலான அனைத்துக் கலைகளிலும் இப்போது தேர்ச்சி பெற்றுவிட்டார்.



அமைச்சரே! மிகவும் மகிழ்ச்சி. நல்ல ஒரு நாளில் தடாதகைப் பிராட்டிக்கு முடிசூட்டி, பாண்டிய நாட்டின் அரசியாக்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள்.

**7** அரசவையில் குலகுரு, இளவரசி அங்கயற்கண்ணிக்கு (மீனாட்சிக்கு) முடிசூட்டிக் கூறினார்...

கன்னி மீனாட்சி ஆட்சி செலுத்தப் போகும் இந்தநாடு இனிமேல் "கன்னிநாடு" என்றே பெயர்பெற்று விளங்கப் போகிறது.



**8** மலயத்வஜன் காலமான பிறகு அரசு செலுத்தும் முழுப்பொறுப்பையும் அங்கயற்கண்ணியே ஏற்றாள்.




**9** அங்கம், வங்கம் முதலான அனைத்து நாடுகளையும் மீனாட்சி வென்றாள். பின்னர் அவள் கயிலையை வென்று திக்விஜயத்தை முடித்துக் கொள்ள நினைத்து கயிலாயத்தை முற்றுகையிட்டாள்.

ஐயனே! மதுரை அரசி மீனாட்சி நம் கயிலையை முற்றுகையிட்டு வளைத்திருக்கிறார்.

அத்துடன் நமது பூதப் படைகளையும் அவர் வென்று விட்டார்.

இப்போது நானே என்னுடைய "பினாகம்" என்ற வில்லுடன் போருக்குப் புறப்படுகிறேன்...

**10** இறைவன் ரிஷபத்தின் மீதேறி போர்க்களம் புகுந்தார். அவரை மீனாட்சி நேருக்கு நேர் பார்த்தாள்.
அப்போது அவளுடைய மூன்றாவது மார்பகம் மறைந்தது.




**11** சுவாமி தாங்கள் கல்யாணசுந்தரராகத் திருமண மேடைக்கு எழுந்தருளி அருள் புரியுங்கள்.



இறைவன் சர்வ அலங்காரங்களுடன் மணமகன் கோலம் கொண்டார்.

# குருபக்தி செய்த விந்தை

ஆதாரம்: மகாபாரதம்










4
ஒரு நாள்...
மாணவர்களே, உங்களுக்கெல்லாம் ஒரு பரீட்சை. ஆளுக்கு ஒன்றாக இந்தப் பானைகளை எடுத்துக் கொண்டு பானை நிறைய நீரைக் கொண்டு வாருங்கள். யார் முதலில் கொண்டு வருகிறீர்கள் என்பதே போட்டி.


5
குருதேவா, பானைகளின் வாய் மூடியே இருக் கின்றனவே. நீரை எப்படி நிரப்புவது?


6
குழந்தைகளே, பானையின் வாயை நன்றாகப் பாருங்கள்.
அட ஆமாம், மிளகு செல்லும் அளவுக்கு ஒரு துளை இருக்கிறதே.


7
குருதேவா, இந்தச் சிறிய துளைக்குள் நீர் போவதே சந்தேகம். இதை எப்படி நிரப்புவது?
மனமிருந்தால் வழியுண்டு. பானையை எடுத்துக் கொண்டு கிளம்புங்கள்.

8




9

செய்ய முடியாததை குருதேவர் சொல்லியிருக்கவே மாட்டார். நீருக்குள் பானையை அமுக்காமல் நீர் மொள்ளு வது எப்படி? நீருக்கு அதிதேவதையான வருண பகவானையே பானையில் ஆவாஹனம் செய்தால் பானை தானா கவே நிரம்பிவிடுமே! முயற்சிக்கிறேன்.



10

பானையில் நீர் நிரம்புவதற்காக அர்ஜுனன் மந்திரம் ஜெபித்தான். வருணபகவான் ஆவாஹனமானார். பானையில் நீர் நிரம்பியது.



11



**12** நாமாவது அரைப்பானை கால்பானை நிரப்பி இருக்கிறோம். அர்ஜுனன் பானையையே கொண்டு வரவில்லையே. குருவின் செல்லப்பிள்ளை இப்போது என்ன செய்கிறான் பார்ப்போம்!



**13** அர்ஜுனா, எங்கே உன் பானை?



குருதேவா, நீரை நிரப்பி முன்பே தங்கள் அறையில் வைத்துவிட்டேன். இதோ கொண்டு வருகிறேன்.

**14** இதோ குருதேவா!

மற்றவர்களால் முடியாததை நீ எப்படி சாதித்தாய்?



இயலாத ஒன்றைத் தாங்கள் கண்டிப்பாகக் கூற மாட்டீர்கள். அதனால் யோசித்துப் பார்த்தேன். வருண பகவானைப் பானைக்குள் ஆவாஹனம் செய்யலாமே என்று தோன்றியது. செய்தேன். பகவான் பானையை நிரப்பிவிட்டார்.

**15** குருவிடம் கற்ற பாடத்தைத் தனது சொந்த முயற்சியால் விருத்தி செய்து கொள்வதே சிறந்த சீடனுக்கு இலக்கணம். அவனே குருவுக்குப் பெருமை சேர்க்கிறான். என்னால் நீயும் உன்னால் நானும் பெருமைப்படப் போவது உறுதி அர்ஜுனா.



# பீஷ்மர் சபதம்

1

அஸ்தினாபுரத்தைத் தலைநகரமாகக் கொண்டு ஒரு பெரிய ராஜ்யத்தை சந்தனு மகாராஜா ஆண்டு வந்தார்.
சந்தனுவுக்கும் தேவலோக நங்கையான கங்காதேவிக்கும் பிறந்த மகன் தேவவிரதன்.
தேவவிரதன் உற்ற வயதடைந்ததும் அவனுக்கு சந்தனு மகாராஜா, யுவராஜ பட்டாபிஷேகம் செய்து வைத்தார்.

என் செல்வமே! நீ பிறந்ததுமே உன் தாய் உன்னை என்னிடம் ஒப்படைத்துவிட்டு, தன் இருப்பிடம் சென்றுவிட்டாள்.
இப்போது நீ அஸ்திர,சஸ்திரவித்தை முதலான சகல கலைகளிலும் தேர்ச்சி பெற்று மாவீரனாகத் திகழ்கிறாய்.
அதனால் இன்று நான் உன்னிடம் இந்த நாட்டின் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைக்கிறேன்.
உன்னால் நம் சந்திர வம்சத்தின் பெருமை மேலும் சிறக்க வாழ்த்துகிறேன்!

தந்தையே! உங்கள் ஆசீர்வாதம் ஒருநாளும் வீண் போகாது.

2

ஆட்சியின் சுமை குறைந்த அரசன் சந்தனு, ஒரு நாள் யமுனாநதி தீரத்துக்குத் தம் சிறு பரிவாரத்தோடு வேட்டையாடச் சென்றான்.
வேட்டையின்போது அவன் தனியாகப் பிரிந்து, காட்டுக்குள் வெகு தூரம் வந்துவிட்டான். அங்கே...




3

அரசன் வாசனை வந்த திசையில் சென்றான். அங்கு அவன் கடைசியில் தேவ கன்னிகையைப் போன்ற அழகிய மங்கையைக் கண்டான்.
ஆச்சரியத்துடன் அவளை அவன் நெருங்கினான்.

பெண்ணே, நீ யார்? உன்னிடமிருந்து உள்ளத்தை ஈர்க்கும் நறுமணம் வீசுகிறதே!



சுவாமி! என் பெயர் சத்தியவதி. என்னைப் 'பரிமளகந்தி' என்றும் அழைப்பார்கள்.
என் தந்தை செம்படவர் குலத்தலைவன், தசராஜன்!

4 சந்தனு மகாராஜா செம்படவர் தலைவன் தசராஜனிடம் சென்றான்.

ஐயா, நான் அஸ்தினாபுர அரசன் சந்தனு. உங்கள் மகள் சத்தியவதியை நான் திருமணம் செய்துகொள்ள விரும்புகிறேன்!



மகாராஜா! மன்னியுங்கள்! சத்தியவதிக்குப் பிறக்கும் மகன் அரசனாக வர வேண்டும். தாங்கள் இந்த நிபந்தனைக்குச் சம்மதித்தால்தான் என் மகளை உங்களுக்குத் திருமணம் செய்து கொடுப்பேன்.

5 அதிர்ச்சியடைந்த அரசன் ஏமாற்றத்துடன் நாடு திரும்பினான். சத்தியவதியைப் பற்றிய ஏக்கத்தில் அவன் உடல் மெலிந்து வந்தான். இதை அறிந்த மகன் தேவவிரதன் நேராகச் செம்படவர் தலைவனைத் தேடிச் சென்றான்.

ஐயா! உங்கள் விருப்பத்தை நான் நிறைவேற்றுகிறேன். எனக்கு அரியணை வேண்டாம். தயவுசெய்து உங்கள் புதல்வியை என் தந்தைக்குத் திருமணம் செய்து கொடுங்கள்!



இளவரசே! உங்களை நான் நம்புகிறேன். நீங்கள் ஒரு மாமனிதர். ஆனால் ஒரு நாள் உங்கள் மகன், என் மகளின் மகனிடம், “நான்தான் அரசனாவேன்” என்று சண்டைக்கு வந்தால்...?

6 தேவவிரதன் சற்றும் தயங்காமல் ஒரு சபதம் செய்தான்.

ஐயா, என் தந்தைதான் எனக்குத் தெய்வம். அவரை மணக்கும் உங்கள் மகளும் எனக்குத் தெய்வம். அந்தத் தெய்வங்களின் மேல் நான் சத்தியப்பிரமாணம் செய்கிறேன்: என் உயிருள்ள வரையில் நான் திருமணம் செய்துகொள்ளாமல் பிரம்மசாரியாகவே இருப்பேன். எல்லாப் பெண்களும் எனக்கு அன்னையர். இது சத்தியம்!



இளவரசே! உங்கள் சபதம் என்னை மெய்சிலிர்க்க வைக்கிறது. நான் என் மகளை உங்கள் தந்தைக்குத் திருமணம் செய்து கொடுப்பதற்கு மனப்பூர்வமாகச் சம்மதிக்கிறேன்.

7 நடந்ததையெல்லாம் கேட்டறிந்த சந்தனு மகாராஜா மனம் நெகிழ்ந்து போனான்.

செல்வமே! உன் தியாகத்தை மனிதர்கள் என்ன, தேவர்களும் கண்டு உன்னை ‘பீஷ்மன்’ என்று கொண்டாடுவார்கள். நீ விரும்பும் வரையில் உனக்கு மரணம் வராமலிருக்க வாழ்த்தி, வரம் தருகிறேன்!



8 மாமன்னன் சந்தனுவை மணந்த சத்தியவதிக்கு
சித்ராங்கதன், விசித்திரவீரியன் என்று
இரண்டு மகன்கள் பிறந்தார்கள்.
சில ஆண்டுகளுக்குப் பிறகு சந்தனு மகாராஜா
காலமானதும் சத்தியவதி கூறினாள்...




9 காலப்போக்கில் அரியணையில் அமர்த்தப்பட்ட
சித்ராங்கதன் ஒரு போரில் இறந்து போனான்.
அதனால் பீஷ்மர் விசித்திரவீரியனை அரச
பதவியில் அமர்த்தினார்.
அவன் திருமண வயதை அடைந்திருந்த
சமயத்தில்...




10 சுயம்வர மண்டபத்தில் பீஷ்மர்
நுழைந்ததைப் பார்த்து எல்லோரும்
திகைத்துப் போனார்கள்.
அவர் காதில் விழும் வகையில் அவரை
ஏளனமாகப் பேசினார்கள்.



11 பீஷ்மர் அம்பை, அம்பிகை, அம்பாலிகை என்ற மூன்று ராஜகுமாரிகளையும் தேரில் ஏற்றிய பிறகு நடந்த சண்டையில் சாளுவன் தோற்று ஓட, அம்பை, பீஷ்மரை வணங்கினாள்.




12 அம்பையைக் கண்டதும் சாளுவனின் தலை தொங்கிவிட்டது.




13 பீஷ்மரும் அம்பையை ஏற்க மறுத்தார். ஆதலால் அவள் பீஷ்மரின் குருவான பரசுராமரிடம் சென்று முறையிட்டாள். அவர் வந்து சொல்லியும் பீஷ்மர் உறுதியாக மறுத்ததால் குருவுக்கும் சீடனுக்கும் சண்டையே வந்தது.
பீஷ்மரின் அம்பு பட்டு பரசுராமர் தடுமாறி விழுந்துவிட்டார்.




14 விசித்திரவீரியன் மணந்துகொண்ட அம்பிகை, பிறவிக்குருடனான திருதராஷ்டிரனையும், அம்பாலிகை பாண்டுவையும் பெற்றெடுத்தார்கள்.

# மகாபாரதப் போரில் பீஷ்மர்

1 பாண்டவர்கள் மீது துரியோதனன் பொறாமை கொண்டான்.
அதனால் அவன் சகுனியின் தீய ஆலோசனையின் பேரில் தருமரைச் சூதாட அழைத்தான்.

2 பகடை ஆட்டப் பந்தயம் நடந்தது.
தருமபுத்திரர் மேலும் மேலும் சகுனியிடம் தோற்றுப் போய், எல்லாப் பொருள்களையும் இழந்தார்.
பிறகு ராஜ்யத்தை இழந்தார்.
பின்னர் சகோதரர்களையும் கூடவே தன்னையும் இழந்துவிட்டு, இறுதியில் மனைவி திரௌபதியையும் இழந்து நின்றார்.

3 ராஜசபையில் திருதராஷ்டிரன், பீஷ்மர், துரோணர் முதலானவர்களின் முன்னிலையில் பாஞ்சாலியின் ஆடையைத் துச்சாதனன் உருவினான்.
அந்த ஆடை ஸ்ரீ கிருஷ்ணனின் கருணையால் உருவ உருவ, நீண்டுகொண்டே போயிற்று.
அப்போது பீமன் ஆத்திரத்துடன் ஒரு சபதம் செய்தான்.






4 பாண்டவர்கள் விடுதலையாகி இந்திர பிரஸ்தம் சென்றார்கள். ஆனால் மறுபடியும் துரியோதனன் அழைத்ததால் யுதிஷ்டிரர் வந்து துரதிருஷ்டவசமாக மீண்டும் சூதாட்டத்தில் தோற்றுப் போனார்.
அதனால் பாண்டவர்கள் பந்தயப்படி ராஜ்யத்தை துரியோதனனிடம் ஒப்படைத்துவிட்டு, பன்னிரண்டு ஆண்டுகள் வனவாசமும் ஓர் ஆண்டு அஞ்ஞாத வாசமும் செய்ய வேண்டியதாயிற்று.

5 பாண்டவர்கள் பல கஷ்டங்களைத் தாண்டி, வனவாசத்தையும் ஓராண்டு அஞ்ஞாத வாசத்தையும் முடித்துக்கொண்டு திரும்பினார்கள். ஆனால் துரியோதனன் அவர்களுக்கு நாட்டைத் தர மறுத்துவிட்டான்.
ஸ்ரீ கிருஷ்ணன் பாண்டவர்களுக்காகத் தூது போனார்.




6 துரியோதனன் எவர் பேச்சையும் கேட்காமல், போருக்குத் தயாரானான்.
துரோணரின் யோசனைப்படி பீஷ்மரே கௌரவர் சேனைக்குத் தளபதியாக நியமிக்கப்பட்டார்.
இதைக் கேட்டு கர்ணன் கோபமடைந்தான்.
பீஷ்மர் எழுந்து கம்பீரமாகப் பேசினார்.



7 போர்க்களத்தில் யுதிஷ்டிரர், பீஷ்மரை வணங்கினார்.







8 பீஷ்மர் சொன்னபடியே போரில் முதல் இரண்டு நாட்களும் ஆயிரக்கணக்கான தலைகள் உருண்டன. மூன்றாம் நாள் பீஷ்மரின் அம்பு தேரோட்டி வந்த ஸ்ரீகிருஷ்ணனுடைய நெற்றியைத் தாக்கியது. அதனால் அவர் கோபத்துடன் சுதர்சன சக்கரத்தை எடுத்து ஏவப் போனார்.




9 ஒன்பதாம் நாள் இரவு ஸ்ரீ கிருஷ்ணர் யுதிஷ்டிரரை ரகசியமாகப் பீஷ்மரிடம் அழைத்துச் சென்றார்.



10


பீஷ்மர் மனம் நெகிழ்ந்து போனார்.
குழந்தாய்! ஸ்ரீகிருஷ்ணன் உன் பக்கம் இருக்கும் வரையில் வெற்றி உங்களுக்குத்தான்.
அதனால் உங்கள் சேனையில் இருக்கும் சிகண்டியை என்னோடு போரிடுவதற்கு அனுப்புங்கள் அவனைப் பார்த்ததும் நான் ஆயுதத்தைக் கீழே போட்டுவிடுவேன். காரணம், சிகண்டி ஒரு பெண். அவள் பரமசிவன் அருள் பெற்று என்னைப் பழி வாங்குவதற்காக இப்போது ஆணாக வந்திருக்கிறாள்.
முன்பு நான் திருமணம் செய்துகொள்ள மறுத்த அம்பாதான் இப்போது சிகண்டியாக வந்திருப்பதால், என் வரையில் சிகண்டி ஒரு பெண்தான். அந்தப் பெண்ணோடு நான் போரிட மாட்டேன். அப்போது நீங்கள் என்னை வெல்வது சுலபம்!

11


பத்தாம் நாள் போரில் சிகண்டி போர் செய்ய வரவே, பீஷ்மர் தன் வில்லைக் கீழே போட்டுவிட்டார்.
அப்போது அர்ஜுனன் பீஷ்மரைத் தாக்கினான். அதனால் பீஷ்மர் தள்ளாடியபடி கீழே சாய்ந்துவிட்டார்.
அவர் உடல் தரையில் விழாதபடி அர்ஜுனனின் அம்புகள் படுக்கையாக அவரைத் தாங்கி நின்றன.
தாகமாய் இருக்கிறது! தண்ணீர்! தண்ணீர்!

12


துரியோதனன், கர்ணன், கிருபர் முதலானவர்கள் ஓடி வந்தார்கள். துரியோதனன் தண்ணீர் கொண்டு வருவதற்காக ஆட்களை ஏவினான்.
துரியோதனா! நான் கேட்பது இந்தத் தண்ணீர் அல்ல!
தாத்தா! இதோ கங்கா நீர் ஊற்று! பருகுங்கள்!

13


போர் முடியும் வரையில் பீஷ்மர் உயிர் பிரியாமல் இருந்தார்.
போரில் கௌரவர்கள் அனைவரும் மாண்டு போனார்கள். யுதிஷ்டிரர் பட்டம் சூட்டிக் கொண்டார்.
தாத்தா பீஷ்மரின் அருளாசி வேண்டி பாண்டவர்கள் ஸ்ரீகிருஷ்ணனுடன் போர்க்களத்திற்குச் சென்றார்கள்.
யுதிஷ்டிரா! தர்மத்தைக் கடைப்பிடி. தீயவர்களை அடக்கு. சத்தியம் தவறாதே. மக்கள் நலனை மறவாதே. புகழ் பெறுவாய்! கிருஷ்ணா! நீ எங்கே இருக்கிறாயோ அங்கே தர்மம் இருக்கும். நாராயணன் பாதாரவிந்தம் நாடி நான் இப்போது செல்கிறேன்! எல்லோருக்கும் மங்களம் உண்டாகட்டும்!



# குருமகிமை

1 ஸ்ரீவிட்டலரின் தீவிர பக்தர் ஸ்ரீநாமதேவர். விட்டலருடன் அவர் நேரில் பேசக்கூடியவர்.




2 ஓர் ஆலயத்தில் கோராகும்பார் என்னும் சிறந்த மகானின் தலைமையில் சாதுக்களின் கூட்டம் ஒன்று நிகழ்ந்து கொண்டிருந்தது. நாமதேவரும் அங்கு சென்றார்.




கோராகும்பார் ஒரு சிறு தடியால் ஒவ்வொரு சாதுவின் தலையிலும் தட்டித் தட்டிப் பார்த்தார்.

3




இவ்வாறு நான்கு, ஐந்து பேர்களின் தலைகளின் மீது தட்டிப் பார்த்தார்.

4




இவ்வாறு எண்ணிக்கொண்டே நாமதேவர் வெளியில் சென்றுவிட்டார். அதனால் மற்ற சாதுக்கள் 'நாமதேவர் பக்குவமடையவில்லை' என நகைத்தார்கள். அதனால் வருந்திய நாமதேவர் விட்டல் பிரபுவிடம் சென்றார்.

5




6




7

ஒரு நாள் நாமதேவர் கோவிலுக்குச் செல்லும் வழியில் ஒருவன் அசைவ உணவைச் சமைத்துக் கொண்டிருந்தான்.




8

நாமதேவர் மிகவும் அருவருப்புடன் அவனை விட்டு ஒதுங்கிச் சென்றார். கோவிலில்...



**9**

ஒரு நாள் ஓர் இடத்தில் நாமதேவர் விக்கிரகங்களை வைத்து வழிபட்டுக் கொண்டிருந்தார். அப்போது ஒரு முகமதியர் குதிரையில் வேகமாக அங்கு வந்து பூஜைப் பொருள்களையும் விக்கிரகங்களையும் கலைத்துச் சென்றுவிட்டார்.

**10**







**11**

விசோபாகேசர் தமதுசெருப்பு அணிந்த கால்களை ஒரு சிவலிங்கத்தின் மேல் வைத்தவாறு படுத்திருந்தைக் கண்டார் நாமதேவர் .




**12**

அவ்வாறே நாமதேவரும் அவரது பாதங்களை ஒவ்வோர் இடமாக நகர்த்தினார். ஆனால் கால்களை நகர்த்திய இடங்களில் எல்லாம் லிங்கங்கள் புதிது புதிதாகத் தோன்றுவதைக் கண்டு வியந்தார்! அவரது மகிமையை உணர்ந்தார்.

**13**



**14** நாட்கள் கழிந்தன. நாமதேவர் விசோபாகேசரிடம் உபதேசம் பெற்றுப் பண்டரிபுரம் திரும்பினார். அங்கு பக்தர்கள் ஒரு விருந்திற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அப்போது அங்கே திடீரென வந்த ஒரு நாய் நாமதேவரின் இலையிலிருந்து ஒரு ரொட்டியை வாயில் கவ்விக் கொண்டு ஓடியது.

**15**




**16** ஆனால் நாமதேவரோ நெய்க்கிண்ணத்துடன் அந்த நாயின் பின்னால் ஓடிக்கொண்டே...




**17** ஓடிக்கொண்டிருந்த நாமதேவர் முன்பு விட்டல் பிரபு பிரசன்னமானார்.




இறைவனின் பரம ரகசியங்களை அறியவேண்டுமென்ற தீவிரபக்தி உனக்கு இருக்குமானால், அந்த இறைவனே, சத்குரு ஒருவரை உன்னிடம் அனுப்புவார். பக்தனே, குருவைத் தேடவேண்டிய விஷயத்தில் உனக்குக் கவலையே வேண்டாம்.

-ஸ்ரீராமகிருஷ்ணர்





# ஆண்டவன் அருள்வது ஆனந்தம் மட்டுமே!

**1** சோழ நாட்டின் ஒரு பகுதியில் வெண்ணாவல் மரத்தடியில் ஒரு சிவலிங்கம். யானை ஒன்று தினமும் அருகிலுள்ள சந்திர தீர்த்தத்திலிருந்து நீர் கொண்டு வந்து சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்து வந்தது.



**2** அதே மரத்தின் மீது ஒரு சிலந்தியும் வாழ்ந்து வந்தது. அதுவும் சிவலிங்கத்தின் மீது பக்தி கொண்டிருந்தது. அந்தச் சிலந்தி லிங்கத்தின்மீது சருகுகளும் தூசியும் விழாமல் இருக்க, தன் வாயால் வலை பின்னி காத்தது.



**3** ஒரு நாள் சிலந்தி மிகுந்த பக்தியோடு சிவலிங்கத்தின்மீது விதானம் போல் வலை பின்னியது.



**4**



**5** யானை வலையைத் தன் துதிக்கையால் அறுத்து வீசியது. அதனால் சிலந்தி கடும் கோபம் கொண்டது.




**6** சிலந்தி யானையின் துதிக்கையின் உள்ளே புகுந்து பலமாகப் பல இடங்களில் கடித்துவிட்டது.




யானை வலி தாங்காமல் துதிக்கையை ஓங்கித் தரையில் அடித்தபடி கீழே விழுந்து இறந்தது.

**7** இந்தக் காட்சியை கயிலையில் இருந்த சிவனும் பார்வதியும் கண்டார்கள்.

சுவாமி! இது என்ன திருவிளையாடல்? சிவபக்தி செய்த சிலந்தியும் யானையும் இறந்துவிட்டனவே?



தேவி! கவலை வேண்டாம். யானை முக்தி அடைந்துவிட்டது. யானை காவல் காத்த இந்தத் தலம் இனிமேல் 'திருவானைக் காவல்' என்று புகழ் பெறும்.

**8** சிலந்தியை என்ன செய்யப் போவதாகத் திருவுள்ளமோ?



பொறுத்திருந்து பார் தேவி!

9

சுபதேவன் என்ற சோழ மன்னன் நடராஜப் பெருமானிடம் மிகுந்த பக்தி கொண்டவர். அவர் தமக்குப் பின் நாட்டை ஆளத்தக்க ஒரு மகனை வேண்டிப் பல காலம் பிரார்த்தனை செய்து வந்தார். ஒரு நாள் இறைவன் அவர் முன் தோன்றி...




10

இறைவன் திருவருள்படி சுபதேவனின் மனைவி கருவுற்றாள். பிரசவ நேரம் நெருங்கியது.




அரசர் உடனே அந்தச் செய்தியை மகாராணிக்குத் தெரியப்படுத்தினார்.

11




தாதியர் அவ்வாறே செய்தனர். அதனால் ஒரு நாழிகைக்குப் பிறகு அரசிக்கு ஆண் குழந்தை பிறந்தது. ஆனால் அவ்வாறு செய்ததால் அரசியின் உயிருக்கு அது ஆபத்தாக முடிந்தது.

12



13 செங்கணான் வளர்ந்து சிறந்த வாலிபன் ஆனான்.




14 முற்பிறவியில் சிலந்தியாக இருந்து சிவபூஜை செய்த அதே சிலந்தி இப்பிறவியில் அரசன் செங்கணானாகப் பிறந்திருந்தான். அந்த முற்பிறவித் தொடர்பினால் அவன் திருவானைக்கா ஈசனிடம் அளவு கடந்த பக்தி கொண்டிருந்தான்.




15 இறைவனுக்குத் தொண்டு செய்பவர்களுக்கு இறைவன் முக்தியும் அளிக்கிறான். பக்தியும் அளிக்கிறான். பக்தி அளிப்பதன் மூலம் அவன் எண்ணற்ற பக்தர்களுக்கு இந்த உலகிலேயே பக்திப் பேரின்பம் தந்தருள்கிறான். ஆண்டவன் அருள்வதெல்லாம் ஆனந்தம் மட்டுமே.

# கற்றபின் நிற்க அதற்குத் தக!

1 பாண்டவர்கள் வனவாசம் செய்த காலத்தில் ஒரு நாள் ரைப்யருடைய ஆசிரமத்தை அடைந்தார்கள். அவர்களுடன் வந்த லோமசரிஷி இங்கே ஓடும் கங்கையில் நீராடினால் ஆணவமும் குரோதமும் நீங்கும் என்று கூறி ரைப்ய ரிஷியின் கதையையும் கூறினார்.

ரைப்ய ரிஷியின் சிஷ்யன் பிருஹத்யும்னன் என்ற அரசன். ரைப்ய ரிஷியின் குமாரர்கள் பராவசு, அர்வாவசு இருவரும் நன்கு கற்றவர்கள். யாகங்கள் நடத்தும் முறைகளை அறிந்த வர்கள். ஒருநாள் அரசன் ரிஷியின் ஆசிரமத்திற்கு வந்து...




2 யாகத்திற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. ஒரு நாள் இரவு, பராவசு தனது தந்தையின் ஆசிரமத்துக்கு வந்தார். அப்போது அவரது தந்தை இருளில் மிருகத்தின் தோலைப் போர்த்திக் கொண்டு அமர்ந்திருந்தார். அதைக் கண்ட பராவசு பாயத் தயாராக இருக்கும் மிருகம் என்று பயந்து தடியால் ஓங்கி அடித்துவிட்டார். அவரது தந்தை உடனே இறந்துவிட்டார்.




3 பரத்வாஜ முனிவரின் சாபத்தின்படி, ரைப்யரின் மரணம் நிகழ்ந்துவிட்டது. பராவசு யாகசாலைக்குச் சென்று தன் தம்பி அர்வாவசுவிடம் நடந்ததைக் கூறினார்.



**4**

என்ன அண்ணா?

எனது பிரும்மஹத்தி, பிதுர்ஹத்தி தோஷம் நீங்குவதற்காக, எனக்குப் பதிலாக நீ பிராயச்சித்தம் செய்ய வேண்டும். நான் யாக காரியங்களைக் கவனிக்கிறேன்.



ஒருவருக்குப் பதிலாக மற்றொருவர் பிராயச்சித்தம் செய்தால் பலன் உண்டென்றால், என் சகோதரனுக்காக நான் இதைக்கூடவா செய்ய மாட்டேன்?

**5**

பராவசு செய்த பிழைக்காக அர்வாவசு பிராயச்சித்தம் செய்தார். ஆனால் தானே பிராயச்சித்தம் செய்யாதபடியால் பராவசுவின் பிரம்மஹத்தி தோஷம் நீங்கவில்லை. அது அவர் உள்ளத்தில் பாப எண்ணங்களை உண்டாக்கிக் கொண்டே இருந்தது.



**6**

சில காலம் சென்றது. தனது பிராயச்சித்த தவத்தை முடித்த அர்வாவசு முன்னைவிட ஒளிபெற்றவராக யாகசாலைக்கு வந்தார். அவரைக் கண்ட பராவசுவிற்குப் பொறாமை கொழுந்து விட்டெரிந்தது.




**7**

மிகுந்த எதிர்பார்ப்புடன் வந்த அர்வாவசு நிலைகுலைந்தார்.

அரசே! பராவசுதான் உண்மையில் குற்றம் செய்தவர். அவருக்குப் பதிலாக நான் பிராயச்சித்தம் செய்து விட்டு வருகிறேன். என்னை நம்புங்கள் அரசே.




8
குருபுத்திரரே, நீங்கள் சொல்வதை நம்ப முடியாது. உடனே இந்த நாட்டை விட்டுச் சென்றுவிடுங்கள்.
பிரம்மஹத்தியும் செய்துவிட்டு அண்ணன்மேல் பழி வேறு போடுகிறான், பாவி.
அரசே! தீர விசாரியாமல் நீங்கள் தீர்ப்பு சொல்கிறீர்கள். அனைத்தையும் இறைவன் கவனித்து வருகிறார்.


9
அர்வாவசு மீண்டும் காட்டிற்குச் சென்று கடும் தவமியற்றினார். அந்தத் தவத்தால் தேவர்கள் மகிழ்ந்தார்கள்.
அர்வாவசு! உன் தவத்தினால் மகிழ்ந்தோம். வேண்டும் வரத்தைக் கேள்.
தங்கள் தரிசனத்தால் நான் பாக்கியவானானேன்.


10
நீ உத்தமன். உன் அண்ணன் நன்கு கற்றவனாக இருந்த போதிலும் உன்மேல் அபாண்டமாகக் குற்றம் சாட்டினானே?
தேவர்களே, அது அவர் குற்றமல்ல. அவரைப் பீடித்து இருக்கும் பிரும்மஹத்தி தோஷம் அவ்வாறு பேச வைத்தது. கெடுதலிலும் ஒரு நன்மை. அவரால்தானே எனக்கு உங்களைத் தரிசிக்கும் பாக்கியம் கிடைத்தது?


11
மன்னிக்கும் மனமுள்ளவனே மனிதன். உனக்கு வேண்டும் வரத்தைக் கேள்.










**சிறந்த குணத்தை உருவாக்குகின்ற, மனவலிமையை வளர்க்கின்ற, அறிவை விரியச் செய்கின்ற, ஒருவனைச் சொந்தக் கால்களில் நிற்கச் செய்கின்ற கல்வியே தேவை.**

**- சுவாமி விவேகானந்தர்**



# பாண்டிய மன்னனின் சிவபக்தி

**1** மதுரையில் சிவபெருமான் பல லீலைகள் நிகழ்த்தினார். அவற்றைத் தொகுத்து பரஞ்சோதி முனிவர் 'திருவிளையாடல் புராணம்' என்ற ஒரு நூலை இயற்றியுள்ளார். அந்த நூலிலிருந்து ஒரு பாண்டிய மன்னனின் கதை இது.

**2** ஒரு சமயம் ராஜசேகர பாண்டிய மன்னன் மதுரையை ஆட்சி செய்து வந்தான்.

அவன் மதுரையில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளிடம் பெரிதும் பக்தி கொண்டவன்.



**3** மதுரைக் கோயிலில்...

வெள்ளியம்பலத்தில் திருநடனம் புரியும் இறைவா!

தங்கள் மீது நான் பேரன்பு கொண்டவன். அதனால் நாட்டியக் கலையைத் தவிர்த்து ஏனைய அறுபத்து மூன்று கலைகளிலும் நான் தேர்ச்சி பெற்றிருக்கிறேன்.

நீதிநெறி தவறாமல் இந்தப் பாண்டிய நாட்டை அரசாட்சி செய்து வருகிறேன். இதற்கெல்லாம் தங்களின் திருவருள் துணைதான் காரணம்.



**4** அப்போது சோழநாட்டைக் கரிகால் பெருவளத்தான் என்ற மன்னன் ஆண்டு வந்தான்.

அரசர் பெருமானே! தாங்கள் அறுபத்து நான்கு கலைகளிலும் தேர்ச்சி பெற்றிருக்கிறீர்கள். அதனால் சோழநாட்டு மக்களாகிய நாங்கள் எல்லோருமே உங்களைக் குறித்து பெருமைப்படுகிறோம்.



**5** சோழ நாட்டுப் புலவர் ஒருவர் பாண்டிய நாட்டிற்கு வருகை தந்தார்.

பாண்டிய மன்னரே, வணக்கம்!

நான் சோழ நாட்டைச் சேர்ந்த அரண்மனைப் புலவன்.

ஓ... அப்படியா! நல்லது. வாருங்கள் புலவரே!



**6** மன்னன் சோழ நாட்டுப் புலவரை வரவேற்று அரசவையில் தக்க ஆசனத்தில் அமரச் செய்தான் இருவரும் பேசிக்கொண்டிருந்தபோது ...

பாண்டிய அரசே! எங்கள் சோழ மன்னர் அறுபத்து நான்கு கலைகளிலும் நன்றாகத் தேர்ச்சி பெற்றவர். நீங்களோ அறுபத்து மூன்று கலைகளைத்தான் கற்றிருக்கிறீர்கள். நாட்டியக் கலையைப் பற்றி நீங்கள் சிறிதும் அறியாதவர்!



**7** சோழ நாட்டுப் புலவர் தன்னை இகழ்ந்து பேசியதைக் கேட்ட பாண்டிய மன்னன், தன்மானம் மிக்கவனாக கோபத்துடன் கூறினான் ...

விரைவில் நானும் நாட்டியக் கலையில் தேர்ச்சி பெறுவேன்! இது உறுதி!



**8** மன்னன் நடனக் கலையில் வல்லுநர்களை அரண்மனைக்கு வரவழைத்தான். அவர்கள் மன்னனுக்கு நாட்டியக் கலையை நன்கு கற்பித்தார்கள்.



**9** மன்னன் நடனக் கலையில் தேர்ச்சி பெற்றதும் ...



**10** ஒரு சமயம் ராஜசேகர பாண்டியன் கருத்தூன்றி நடனம் ஆடிக்கொண்டிருந்தான்.

எம்பெருமான் சிவபெருமான் ஆடும் நாட்டியத்தை நானும் இப்போது ஆடிக்கொண்டிருக்க வேண்டிய சூழ்நிலை வந்திருக்கிறது. இதுவும் சிவனருள் தான்.



**11** நாட்டியக் கலையில் மேன்மேலும் தொடர்ந்து பயிற்சி பெற்று வந்ததால் மன்னனுக்கு சிறிது உடல் சோர்வு ஏற்பட்டது. அந்த நிலையில் அவன் நடராஜரின் திருநடனம் பற்றி சிந்தித்தான்.

இறைவா! சிவபரம்பொருளே! சிறிது நேரம் நாட்டியமாடியதும் என் உடல் சோர்ந்து போய்விட்டதே! இரவும் பகலும் வெள்ளியம்பலத்தில் இடைவிடாமல் நாட்டியம் ஆடும் தங்களுக்கும் இது போன்ற சோர்வு ஏற்படுமே! இடைவிடாமல் நடனம் புரிவதால் தங்களின் திருவடிகள் வருந்தும் என்பதை அறிந்தும், தங்கள் பக்தனாகிய நான் சும்மா இருப்பதா? ஐயோ! இப்போது நான் என்ன செய்வேன்?



**12** சிவராத்திரி திருநாள் வந்தது. அன்றைய தினம் மன்னன் சோமசுந்தரக் கடவுளுக்கு நான்கு யாமமும் சிவாகம முறைப்படி அபிஷேக, ஆராதனைகள் செய்தான்.



**13** பிறகு அவன் மதுரைக் கோயிலிலுள்ள வெள்ளியம்பலத்திற்குச் சென்றான். நடராஜப் பெருமானைப் பக்தியால் கண்ணீர் வழியக் கைகூப்பி வணங்கினான்.



இறைவா! ஊன்றி நிற்கும் திருவடியை மேலே எடுத்து வீசி, தூக்கிய திருவடியை நிலத்தின் மீது ஊன்றி இன்று தாங்கள் கால் மாறி ஆடுவதைச் செய்யுங்கள். அதை நான் பார்க்க வேண்டும். அப்போது தான் என் மனவருத்தம் நீங்கும். தாங்கள் அவ்விதம் செய்யாவிட்டால் அடியேன் இறந்துவிடுவேன்!

**14** இவ்விதம் பிரார்த்தனை செய்தபடியே மன்னன், நடராஜப் பெருமானின் எதிரில் தன் உடைவாளை உருவி நாட்டி அதன் மீது குப்புற விழுவதற்கு முற்பட்டான்.



**15** உடனே நடராஜப் பெருமான் தமது இடது காலைக் கீழே ஊன்றி, வலது காலை மேலே எடுத்து வீசிக் கால் மாற்றி ஆடினார்.

அதைக் கண்ட ராஜசேகர பாண்டியன் எழுந்து மகிழ்ச்சியுடன் இறைவனைப் போற்றித் துதித்தான்.



வெள்ளியம்பலவாணரே! தாங்கள் கால் மாற்றி ஆடிய இந்த நடனத்தை எல்லோரும் தரிசிக்கும் வகையில், தாங்கள் எப்போதும் இப்படியே நின்று அருள் புரியும்படி பிரார்த்திக்கிறேன்.

**16** மன்னனின் விருப்பத்தை நிறைவேற்ற சிவபெருமான் திருவுள்ளம் கொண்டார்.

எனவே அன்று முதல் மதுரை, வெள்ளியம்பல நடராஜர் கால் மாறி ஆடும் கோலத்திலிருந்து பக்தர்களுக்கு அருள் புரிந்து வருகிறார்.





# ராமநாம மகிமை



1 ஒரு சமயம் சகுந்தன் என்ற அரசனின் அரசவைக்கு வசிஷ்டர், விசுவாமித்திரர் உட்பட முனிவர்கள் பலர் வந்திருந்தார்கள்.




2 சபையிலிருந்த விசுவாமித்திரர் மன்னனின் செயலைத் தவறாகப் புரிந்துகொண்டார்.




3 சகுந்தன் அவசர அவசரமாக விசுவாமித்திரரிடம் சென்றான்.




4




சகுந்தன் எவ்வளவோ சொல்லியும் விசுவாமித்திரரின் மனம் மாறவில்லை.

5 விசுவாமித்திரர் ஸ்ரீராமரிடம் சென்று...

ராமா! சகுந்தன் என்னை அவமானப்படுத்தி விட்டான். ஆதலால் நீ சென்று அவனோடு போர் செய்து நாளை சூரிய அஸ்தமனத் திற்குள் அவன் தலை என் காலில் வந்து விழும்படி செய். இது என் கட்டளை!

தங்கள் கட்டளையை நிறைவேற்றுகிறேன் குருவே!

6 நாரதர் சகுந்தனிடம் சென்றார்.

சகுந்தா! உனக்கு ஆபத்து. நாளை உன்னைக் கொல்லப் போவதாக ஸ்ரீராமர் விசுவாமித்திரருக்கு வாக்களித்திருக்கிறார்! உனக்கு மரணம் ஏற்படப்போவது நிச்சயம்!

மகரிஷி! இந்த ஆபத்திலிருந்து நான் தப்புவதற்கு நீங்கள்தான் எனக்கு ஒரு வழி சொல்ல வேண்டும்... நீங்கள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்.

மிகவும் பயந்த சகுந்தன், பலவாறு நாரத ரிடம் மன்றாடி பிரார்த்தனை செய்தான்.



8 நாரதர் கூறியபடி சகுந்தன் ஆஞ்சநேயரிடம் சென்றான். அவரிடம் அழுது பிரார்த்தனை செய்தான்.




ஆஞ்சநேயருக்குச் சகுந்தன்மீது இரக்கம் உண்டாயிற்று.

9 'ஸ்ரீராமர்தான் சகுந்தனைக் கொல்லயிருக்கிறார்!' என்று தெரியாத நிலையில் ஆஞ்சநேயர்...




10 பின்னர் ஆஞ்சநேயருக்கு 'சகுந்தனை ஸ்ரீராமர்தான் கொல்லயிருக்கிறார்' என்ற செய்தி தெரிய வந்தது. என்றாலும் சகுந்தனுக்குக் கொடுத்த வாக்குறுதியை மீற முடியாததால், அவர் ஸ்ரீராமரை எதிர்கொள்ளச் சென்றார்.



ஆனால் ஆஞ்சநேயர் ஸ்ரீராமருடன் போரிடவில்லை... மாறாக அவர் ஸ்ரீராமநாமத்தையே ஆயுதமாகக் கொண்டு தியானத்தில் ஆழ்ந்தார்.

**11** ஸ்ரீராமர், ஆஞ்சநேயர் மீது அம்புகள் செலுத்தினார். ஆனால் அவரது அம்புகளால் ஆஞ்சநேயரின் உடலிலிருந்த ரோமங்களைத் துளைத்துச் செல்ல முடியவில்லை. காரணம், ஆஞ்சநேயரின் ரோமங்கள் அனைத்தும் ராமநாம மயமாக இருந்தன.



**12** அப்போது அங்கு வந்த விசுவாமித்திரர், நிலையைப் புரிந்துகொண்டு சகுந்தனை மன்னித்தார். சகுந்தனைப் பற்றி தாம் நினைத்தது தவறு என்பதும் அவருக்குப் புரிந்தது.



**13** விசுவாமித்திரர் நிலைமையை ஸ்ரீராமருக்கு விளக்கியதும், ஸ்ரீராமர் ஆஞ்சநேயரைப் பாராட்டினார்.




இந்த நிகழ்ச்சி ஆஞ்சநேயரின் ராமபக்தியையும், ராமநாமத்தின் மகிமையையும் உணர்த்துகிறது.

# திருஞானசம்பந்தர்

**1** திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோர் இருவரும் திருமறைக்காட்டில் தங்கியிருந்தார்கள்.
அப்போது மதுரையிலிருந்து அழைப்பு வந்தது.




**2** அப்போது கிரகநிலை சரியாக இல்லை என்று கருதிய அப்பரை, 'கோளறு பதிகம்' பாடி திருஞானசம்பந்தர் சமாதானப்படுத்தினார்.
பிறகு அவர் முத்துப்பல்லக்கில் ஏறி மதுரைக்குப் புறப்பட்டார்.



**3** மதுரை மாநகர் எல்லையில் அமைச்சர் குலச்சிறையார், திருஞானசம்பந்தரைப் பூரண கும்பத்துடன் வரவேற்றார்.
மங்கையர்க்கரசியாரும் திருஞானசம்பந்தரைப் பணிந்து வரவேற்றார்.




**4** சம்பந்தர் தம்முடன் வந்திருந்த சிவனடியார்களுடன் ஒரு திருமடத்தில் தங்கினார்.
சமணர்கள், அந்த மடத்திற்குத் தீ வைத்தார்கள்.



**5** ஒரு புறத்தில்.....




மறு புறத்தில்.....




**6** அரசன் தவிப்பதைக் கண்ட சமணர்கள், மந்திரம் ஓதியபடி மயில்பீலியால் அவன் உடலைத் தடவிக் கொடுத்தார்கள்.




**7** அரசியும் அமைச்சரும் கூறிய யோசனையின்படி திருஞானசம்பந்தரை அழைத்து வந்தார்கள். அரசன் அவரை வணங்கி வரவேற்றான். அதைக் கண்டு சமணர்களுக்கு அச்சம் உண்டாயிற்று.




**8** சமணர்கள் இடப்பக்கம் மயில்பீலியால் தடவினார்கள். அப்போது சம்பந்தர் 'மந்திரமாவது நீறு' என்ற பதிகம் பாடியபடியே வலப்பக்கம் திருநீறு பூசினார்.



9 சம்பந்தர் இடப்பக்கமும் திருநீறு பூசினார். அதனால் அரசன் நோய் நீங்கி அமைதியடைந்தான்.




10 சமணர்கள் நெருப்பையும் நீரையும் கட்டுப்படுத்தும் ஜால வித்தையில் தேர்ந்தவர்கள்.
எனவே அவர்கள் அரசன் சொன்னதை மறுத்து, சம்பந்தரை வாதுக்கு அழைத்தார்கள்.




11 நெருப்பில் இட்ட ஏடுகளில் சம்பந்தர் ஏடு எரியவில்லை; சமணர் ஏடு கருகிச் சாம்பலாகி விட்டது.




12 வைகை நதிப் பெருக்கில் சமணர்கள் ஏடுகளை எழுதிவிட்டார்கள். அவற்றை வெள்ளம் அடித்துக்கொண்டு போய்விட்டது. திருஞானசம்பந்தரின் ஏடு வெள்ளத்தை எதிர்த்துப் போய் திருவேடகம் என்ற இடத்தை அடைந்தது. அப்போது மன்னனின் கூனும் நிமிர்ந்தது.



**13** அரசன் பாண்டியன், அரசி மங்கையர்க்கரசி, அமைச்சர் குலச்சிறையார் ஆகியோரிடம் பிரியா விடை பெற்று, சம்பந்தர் சைவம் தழைக்கத் தொடங்கிய மதுரையிலிருந்து தல யாத்திரை புறப்பட்டார்.
வழியில் புத்தநந்தி, சாரி புத்தன் ஆகிய பௌத்தர்களை வாதில் வென்ற பிறகு, திருமயிலை வந்து சேர்ந்தார்.

அடியேன் சிவநேசன்..... தங்கள் வருகைக்காகவே காத்திருக்கிறேன். என் மகள் பூம்பாவையை உங்களுக்கே திருமணம் செய்து கொடுக்க நினைத்திருந்தேன். ஆனால் அவள் பாம்பு கடித்து இறந்து போனாள். அவளது அஸ்தி இந்தக் குடத்தில் இருக்கிறது. இதைத் தங்களிடமே ஒப்படைக்கிறேன்!




ஆகா! என்ன ஆச்சரியம்! குடத்திலிருந்து பெண் தோன்றுகிறாளே!

**14** பெருமானே! உயிர் பெற்ற என் மகள் பூம்பாவையை ஏற்றுக்கொள்ளுங்கள். உரிய முறையில் உங்கள் இருவருக்கும் திருமணம் முடித்து வைக்க விரும்புகிறேன்!



இப்போது இவள் என் மகள் போன்றவள். இவளை நான் ஏற்பது தகாது. வேறு எவரையும் இவள் ஏற்கவும்மாட்டாள்.
எனவே இவள் தவம் செய்து சிறப்படைவாளாக!

**15** பெற்றோர்களும் சிவனடியார்களும் விரும்பி வற்புறுத்தவே, திருஞானசம்பந்தர் நம்பியாண்டார் என்பவரின் மகளைத் திருமணம் செய்துகொள்ளச் சம்மதித்தார்.
திருமணச் சடங்குகள் இனிதே நடந்தேறியதும்.....

சிவபெருமானே! எனக்கு ஏன் இல்லறம்? என்னை உன் திருவடியில் சேர்த்துக்கொள்வாயாக!




**16** மணப்பெண்ணின் ஊரான பெருமண நல்லூர் ஆலயத்தை ஒரு பெரும் ஜோதி சூழ, நடுவில் ஒரு வாயில் தோன்றியது.
அதில் திருஞானசம்பந்தரும், மணமகளும், அங்கிருந்த அனைவரும் புகுந்தபோது 'நமசிவாய' என்ற ஒலி விண்ணில் ஒலித்தது.





# ஸ்ரீகுமரகுருபரர்

**1**

**சுவாமி விவேகானந்தர்:** உலகையே அசைக்கவல்ல ஆன்மீகச் சிங்கங்கள் இல்லாத காலத்தை, குறுகிய காலத்தையாவது இந்திய வரலாற்றில் உங்களால் காட்ட முடியுமா? அப்படிப்பட்ட ஒருவரின் வரலாறு இதோ:

நெல்லைச் சீமையில் ஸ்ரீவைகுண்டம் என்ற ஊரில் சில நூற்றாண்டுகளுக்கு முன் பிறந்தவர் குமரகுருபரர். அவர் ஐந்து வயதுவரை பேசவில்லை. அதனால் திருச்செந்தூர் செந்திலாண்டவர் கோவிலில் அவரது பெற்றோர் 48 நாட்கள் விரதம் இருந்தனர். ஒரு நாள் இரவு கனவில் குமரப் பெருமான் தோன்றி...

குழந்தாய்! நாவை நீட்டு. இனி நீ இறைவன் புகழைப் பாடுவாய்.



**2**

முருகன் குழந்தையின் நாக்கின் மீது வேலினால் ஷடாட்சரத்தை எழுதினார். உடனே குமரகுருபரர் 'பூமேவு' என்று தொடங்கி 244 அடிகள் கொண்ட 122 கண்ணிகளில் கந்தர் கலிவெண்பா பாடினார்.

அம்மா, அப்பா! முருகன் கனவில் வந்து என் நாவில் எழுதினாரம்மா!

அப்படியா! கந்தனின் கருணையே கருணை! வாய் பேசாதவனைக் கவியாக்கி இருக்கிறாரே! வெற்றிவேல் முருகனுக்கு அரோகரா!

**3**

மீனாட்சி அம்மன் மதுரை மன்னர் திருமலை நாயக்கரின் கனவில் தோன்றி...

மன்னா, செல்வன் குமரகுருபரன் எம்மைப் பற்றிப் 'பிள்ளைத் தமிழ்' பாடியிருக்கிறான். திருப்பரங்குன்றத்தில் இருக்கும் அவனை இங்கு அழைத்து வந்து எம் ஆலயத்தில் அந்த நூலை அரங்கேற்று!



4

மன்னர் மிகவும் மகிழ்ந்து திருப்பரங்குன்றம் கோவிலுக்குச் சென்றார்.

சுவாமி, தாங்கள் அங்கயற்கண்ணியின் திருவருள் பெற்றவர். தங்களை மதுரைக்கு அழைத்து வருமாறு அம்மை பணித்துள்ளாள். எழுந்தருள வேண்டும்.



எல்லாம் இறைவனின் இச்சை.

5

மன்னர், குமரகுருபரரையும் அவரது நூலையும் யானை மேல் ஏற்றி மதுரை நகரை வலம் வந்தார்; கோவிலில் நூலை அரங்கேற்றினார்.

அப்போது மீனாட்சியம்மை ஒரு சிறுமியாக வந்து மன்னரின் அருகில் அமர்ந்தாள். குமரகுருபரரின் பாடல்களைக் கேட்டு ரசித்துத் தம் கழுத்திலிருந்த மணிமாலையை அவருக்கு அணிவித்து மறைந்தாள்.



ஆஹா! தாயே மீனாட்சி, தாங்களே இந்த எளியவனின் பாடலைக் கேட்க வந்தீர்களோ! என்னே தங்கள் கருணை!

6

என்ன ஆச்சரியம்! அன்னை மீனாட்சியே நேரில் வந்து இக்காவியத்திற்கு ஒப்புதல் அளித்துவிட்டாரே.




மன்னரின் வேண்டுகோளுக்கிணங்க குமரகுருபரர் நீதிநெறிகளை விளக்கி ஒரு நூலையும் இயற்றினார்.

7

ஒரு நாள் கோவிலில்...

தேவாதிதேவா, அடியேனுக்கு ஒரு ஞானாசிரியரைக் காட்டியருள வேண்டும்.



8

தருமபுர ஆதீனகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணிதேசிகர் கேட்ட பெரிய புராணத்து 'ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள' என்ற விருத்தத்தை குமரகுருபரர் விளக்கும் போது அவரது வாக்கு தடைப்பட்டது. அதனால் அவர் மாசிலாமணி தேசிகரிடம் ஞானதீட்சை பெற்றார்.



9

குருவின் ஆணைப்படி குமரகுருபரர் பல சிவத் தலங்களுக்குச் சென்று ஈசனின் பெருமைகளைப் பாடி மகிழ்ந் தார். பிறரையும் மகிழ்வித்தார்.

ஒரு நாள் குமரகுருபரர் கனவில் ஸ்ரீமுத்துக்குமாரசாமி தோன்றித் தம்மைப் பாடுமாறு பணித்தார்.





10

இவ்வாறு பல தலங்களுக்குச் சென்ற பிறகு மீண்டும் அவர் தமது குருநாதரிடம் சென்றார்.



**11** காசியின் அப்போதைய அரசன் ஒரு சுல்தான். அவன் குமரகுருபரரின் பெருமையை அறியாதவன். அவனைக் காண விழைந்த குமரகுருபரரை அலட்சியப்படுத்தினான்.

யார் அந்தச் சாமியார்? அவர் என்ன சிங்கத்திலா வந்திருக்கிறார்? அவரை யெல்லாம் நான் சந்திக்க முடியாது. நான் பேசும் மொழிகூட அவருக்குத் தெரியாதே.



**12** அதைக் கேள்விப்பட்ட குமரகுருபரர் சரஸ்வதி தேவியைத் துதித்தார். சரஸ்வதி காட்சியளித்தாள். தேவியின் அருளால் 'சகல கலாவல்லி மாலை'யை அப்போது இயற்றினார்.

தாயே! என் குருவின் கட்டளையை நிறைவேற்ற தாங்கள் அருள வேண்டும்.



மிக்க மகிழ்ச்சி. மக்கள் கல்வியறிவும் ஞானமும் பெற உனது இந்தப் பாடல்கள் வழிவகுக்கும்.

**13** சரஸ்வதியின் அருளால் இந்தி மொழியும் அறிந்த குமரகுருபரர், தம் சக்தியால் ஒரு சிங்கத்தின் மீது அமர்ந்து சுல்தானிடம் சென்றார். அதைக் கண்டு பயந்த சுல்தான்...

சுவாமி, அறியாமையால் தங்களை அலட்சியம் செய்து விட்டேன். தங்களுக்கு நான் என்ன செய்ய வேண்டும்?

மன்னா, தருமையாதீனத்திற்காக காசியில் ஒரு மடம் அமைத்து சைவம் பரவ வேண்டியவற்றைச் செய்து தர வேண்டும்.

அப்படியே ஆகட்டும்.

**14** குமரகுருபரர் காசியில் 300 ஆண்டு களுக்கு முன்னர் நிறுவிய குமரகுருபரர் மடம் இன்றும் செயல்பட்டு வருகிறது. குமரகுருபரர் கடைசியில் ஸ்ரீகாசி விஸ்வநாதரின் திருவடியை அடைந்தார். காசியில் கேதார்காட்டில் உள்ள ஸ்ரீகேதார்நாத் கோவில் மற்றும் காசி விசாலாட்சி கோவிலும் தருமை ஆதீனத்தின் கீழ் உள்ளன.

# வேதாந்த தேசிகர்

அனந்தசூரி, தோதாரம்மாள் தம்பதிகள் திருப்பதி வேங்கடாசலபதியிடம் ஆழ்ந்த பக்தி கொண்டிருந்தார்கள்.




2 ஒரு நாள் அனந்தசூரியின் கனவில் ஏழுமலையான் தோன்றி....




3 அனந்தசூரியும், தோதாரம்மாளும், திருப்பதிக்குச் சென்று ஏழுமலையானைத் தரிசித்தார்கள்.

4 திருப்பதியில் வைணவ அடியார் ஒருவரின் வீட்டில் அனந்தசூரி தம்பதிகள் தங்கினார்கள். அங்கு ஒரு நாள் இரவு அனந்தசூரியின் கனவில் வேங்கடாசலபதி தோன்றி....






6 உரிய வயதில் வேங்கடநாதனுக்கும், திருமங்கை என்ற பெண்ணிற்கும் திருமணம் நடந்தது.







32-வம் பக்கம் பார்க்கவு

வேங்கடநாதர் மீது சிலர் பொறாமை கொண்டிருந்தார்கள்.
அவர்கள் திருமணம் ஆகாத இளைஞன் ஒருவனிடம் சென்று...




இளைஞன் வேங்கடநாதரை அணுகிப் பணம் கேட்டான்.
பொறாமைக்காரர்களின் சூழ்ச்சி வேங்கடநாதருக்குப் புரிந்தது.
அவர் செல்வத்துக்குத் தெய்வமான மகாலட்சுமியை நினைத்து பிரார்த்தனை செய்தார். அதனால் பொன்மழை பொழிந்தது.

10







தீயவர்கள் சிலர் பாம்பாட்டி ஒருவனின் உதவியோடு வேங்கடநாதன் மீது ஒரு பாம்பை ஏவினார்கள்.




பாம்பு வேங்கடநாதரை நெருங்கிய போது....



14 உடனே அங்கு கருடபகவான் வந்து பாம்பை எடுத்துச் சென்றார். பாம்பாட்டி வேங்கடநாதரிடம் வந்து....




15 கருடபகவான் பாம்பாட்டியிடம் பாம்பைக் கொண்டு வந்து விட்டார்.

16 ஒரு சமயம் ஸ்ரீரங்கத்தில் பிற மதப் பண்டிதர்கள் ஸ்ரீவேங்கடநாதருடன் விவாதப் போர் செய்தார்கள். அதில் வெற்றி பெற்ற பிறகு வேங்கடநாதர் ஸ்ரீரங்கநாதன் சந்நிதியில்....




17 ஸ்ரீரங்கம் முகம்மதியர்களால் ஆக்கிர மிக்கப் பட்டபோது...




18 வேதாந்த தேசிகர், சுதர்சன பட்டரின் இரண்டு பிள்ளைகளையும் கர்நாடகத்திலுள்ள 'சத்யா காலம்' என்ற இடத்திற்கு அழைத்துச் சென்றார்.



வேதாந்த தேசிகர் பாதுகா சகஸ்ரம், வைராக்கிய பஞ்சகம், ஸ்ரீதுதி ஸ்தோத்திரம் போன்ற பல நூல்களை வைணவ உலகிற்கு அளித்துள்ளார்.

அவரை வைணவ உலகம் இன்றும் தனது ஆச்சார்யர்களில் ஒருவராகப் போற்றி வருகிறது.

# சிவன் நிகழ்த்திய லீலை

1 ஒரு சமயம் இந்திரன் வான வழியில் கயிலையைக் காண வந்துகொண்டிருந்தான். அப்போது அவன் உள்ளத்தில் 'நான் தேவர்களின் தலைவன்!' என்ற கர்வம் மேலோங்கி நின்றது.



2







3 சிவபெருமான், பூதவடிவத்தில் கயிலாயத்தின் நுழைவுவாயிலில் அமர்ந்திருக்கிறார்.




4 சிவபூதம் கோபமாக இந்திரனைப் பார்த்தது.



5 இந்திரன் சிவபூதத்தின் மீது தன் வஜ்ராயுதத்தை வீசினான்.
சிவபூதத்தின் மார்பில் பட்ட வஜ்ராயுதம் தூளாகிப் போயிற்று.



6 இறைவன் பூத உடலை நீக்கி தன் நிஜ உருவத்தை எடுத்துக்கொண்டார்.




7 சிவபெருமான் இந்திரன் மீது கொண்டிருந்த கோபம் நெருப்பு வடிவமாகிக் கடலில் போய் விழுந்தது.
அங்கு அது அழகிய ஓர் ஆண் குழந்தையாக உருவெடுத்தது!

8 வருண பகவான் அந்தக் குழந்தையை எடுத்துக்கொண்டான்.




9 ஒரு சமயம் வருணனைக் காண பிரம்மதேவர் வந்தார்.



10

ஜலந்திரன் அசுரனாக வளர்ந்து இந்திரன் முதலான தேவர்களை வெற்றி கொண்டான்.
அசுரன் காலநேமி, ஜலந்திரனிடம் கூறினான்...




11

ஒரு நாள் ஜலந்திரன் தன் மனைவியிடம்...




மனைவி கூறியதைப் பொருட்படுத்தாமல் ஜலந்திரன் கயிலை நோக்கிச் சென்றான்.

12

ஜலந்திரனுக்குப் பயந்து தேவர்களும், முனிவர்களும் கயிலையில் இறைவனிடம் தஞ்சம் புகுந்தார்கள்.





13 வேதியர் உருவத்தில் இறைவன் போருக்குச் சென்று . . .

ஜலந்திரா! சிவபெருமானைச் சுலபமாக நினைத்துவிடாதே! அவரது ஆற்றல் எல்லையற்றது.

வேதியரே! நீங்கள் சும்மா இருங்கள்! நான் இந்திரனையே வென்றவன்! திருமால் என்னிடம் சமாதானம் செய்துகொண்டு வாழ்கிறான். அப்படியிருக்கும்போது நீங்கள் புகழ்ந்து பேசும் சிவசங்கரன் எனக்கு எம்மாத்திரம்!



14 அப்படியா! முதலில் நீ நான் தரையில் வரையும் இந்தச் சக்கரத்தை உன் தலையில் தாங்கு!
பிறகு நீ சிவபெருமானிடம் செல்லலாம்.



15 வேதியர் வடிவத்தில் இருந்த சிவபெருமான் தன் கால் விரலால் தரையில் ஒரு சக்கரம் வரைந்தார். அந்தச் சக்கரத்தை ஜலந்திரன் எடுத்து தன் தலையில் தாங்க முயற்சி செய்தான்! ஆனால், அது அவன் உடலை இரண்டாகப் பிளந்து அவனைக் கொன்றுவிட்டது.



16



# புஷ்பதந்த முனிவர்





**1** ராமேஸ்வரத்தில் சிவனை வழிபட்டு சீதையுடன் ராமர் அகத்திய முனிவரின் ஆசிரமத்தை அடைந்து அவரை வணங்கினார். முனிவர் ராமரிடம் அங்குள்ள தீர்த்தகிரி மலையில் எமதீர்த்தத்தில் நீராடி சிவனை வழிபடுமாறு கூறினார்.




அகத்தியர் தீர்த்தகிரியிலுள்ள 12 தீர்த்தங்களையும் பற்றி அவர்களுக்கு விளக்கினார். யமதீர்த்தத்தின் சிறப்பைப் பற்றிக் கூறும்போது புஷ்பதந்த முனிவரின் வரலாற்றைக் கூறினார்.

**2**




**3**



4


புஷ்பதந்த முனிவர் அந்த மனிதனிடம் இரக்கம் கொண்டு எப்படியாவது அவன் விமோசனம் பெற வேண்டும் என்று எண்ணினார்.
சரி, நான் இப்போதே பரமசிவனிடம் சென்று இவருக்கு விமோசனம் கிடைக்க முயற்சிக்கிறேன்.

5


பிரபு! நமஸ்காரம். நரகத்தில் எண்ணெய்க் கொப்பரையில் வெகுகாலமாக வெந்து கொண்டிருக்கும் ஒருவரைக் கண்டேன். அவருக்கு விமோசனம் தரத் தங்களையன்றி வேறு யாராலும் முடியாது என யமதர்மர் கூறினார். அவருக்கு நீங்கள் கருணை புரிய வேண்டும் பிரபு!
புஷ்பதந்தா, அவன் கோவிலில் பூஜைப் பொருள்களை அபகரித்து, தெய்வ அபராதம் புரிந்தவன். ஆகவே இந்தத் தண்டனை.

6


அம்மையப்பா! தங்கள் கருணை முன்பு அவர் குற்றம் எம்மாத்திரம்? தாங்கள்தான் அந்தப் பாவிக்கு மன்னிப்பளித்து விடுதலையும் தர வேண்டும்.
அன்பனே! அவன் செய்த பாவம் கொடியது. இருந்தாலும் அவனைக் காப்பாற்றத் துடிக்கும் உன் நல்ல உள்ளத்தை மதிக்கிறேன். அவனது வம்சத்தில் பிறந்த எவரேனும் தீர்த்தகிரி யமதீர்த்தத்தில் நீராடி எம்மை வணங்கினால் அவனுக்கு விடுதலை கிட்டும்.

7


அப்போது பரிவு மிகுதியால் முனிவரின் மனதில் ஓர் எண்ணம் தோன்றியது.
ஐயனே! தங்களது நல்லாசியுடன் நானே அவர் குலத்தில் பிறந்து இப்பணியை மேற்கொள்கிறேனே..?
பாவிகளையும் கரையேற்ற எண்ணும் உன் சீரிய முயற்சி வெற்றி அடையட்டும்.

8

புஷ்பதந்தர் பூமியில் அந்தப் பாவியின் குலத்தில் பிறந்தார். சில காலத்திற்குப் பிறகு தீர்த்தகிரி சென்றார். யமதீர்த்தத்தில் நீராடி சிவபூஜை செய்தார்.




9

புஷ்பதந்தரின் தவ வலிமையால் சிவதூதர்கள் நரகத்தில் உழன்றவனை விடுவித்து கைலாயம் அழைத்துச் சென்றார்கள். விமோசனம் பெற்ற அவன் பரிசுத்தனாகி சிவகணங்களுள் ஒருவனாக ஆனான்.






அந்த மனிதர் சிவகணங்களுள் ஒருவராக ஆனதை புஷ்பதந்தர் அறியவில்லை. அதனால் அவர் நரகத்திற்குச் சென்று அவரைத் தேடினார். அங்கு அவரைக் காணாமல் கயிலை சென்றார்.

11

ஐயனே! தங்கள் விருப்பத்தை நிறைவேற்றிவிட்டேன். ஆயினும் கொப்பரையில் வெந்து கொண்டிருந்தவரின் கதி என்னவாயிற்று என்று தெரியவில்லை பிரபு.

புஷ்பதந்தா, நீ அவனைக் காக்க, எம்மை நினைத்து எம தீர்த்தத்தில் மூழ்கியபோதே அவன் நற்பதம் அடைந்து சிவகணங்களுள் ஒருவனாகிவிட்டான்.

அப்படியா பிரபு! தங்கள் எல்லையற்ற கருணை தான் அவரைக் காத்தது!!

12



அகத்தியர் கூறிய புஷ்பதந்த முனிவரின் கதையைக் கேட்ட சீதையின் தாயுள்ளம் கசிந்தது.
ராமரும் சீதையும் எமதீர்த்தத்தில் நீராடி சிவபெருமானின் அருளைப் பெற்றனர்.

13



உலகிற்கு யார் ஒளி தரப்போகிறார்கள்? பண்டைக் காலத்தில் தியாகம்தான் வாழ்க்கைக்கு உரிய விதியாக இருந்தது. இனி வரப்போகும் பல கோடி நூற்றாண்டுகளுக்கும் இந்தவிதி அப்படியேதான் இருக்கப் போகிறது. பலரின் நன்மைக்காக, அனைவரின் சுகத்திற்காக, உலகில் தைரியமும் சிறப்பும் பெருமளவில் பெற்றிருப்பவர்கள் தங்களைத் தியாகம் செய்து கொண்டுதான் ஆக வேண்டும். என்றென்றும் நிலைத்த மாறாத அன்பும் கருணையும் பொருந்திய பல நூறு புத்தபிரான்கள் இப்போது தேவைப்படுகிறார்கள். -சுவாமி விவேகானந்தர்

# கண்ணன் சாப்பிட்ட முந்திரி பருப்பு!










உணவு அருந்தும்போது தர்மபுத்திரர் பக்கத்தில் ஸ்ரீகிருஷ்ணன் அமர்வது வழக்கம். இருவருக்கும் உடுப்பி அரசரே உணவு பரிமாறினார்.
4


5
உடுப்பி அரசர் போரில் இறந்தவர்கள் போக மீதி இருப்பவர்களுக்குச் சரியாக உணவு தயார் செய்வார். அவருக்கு முன் கூட்டியே அன்றைய போரில் எவ்வளவு பேர் இறப்பார்கள் என்று தெரியும்.


ஒவ்வொரு நாளும் வீரர்கள் சாப்பிட்டு முடிந்ததும் துரியோதனன் படைத் தலைவர் துரியோதனனிடம் சென்று...
6
அரசே! இன்று நம் வீரர்கள் அனைவருக்கும் உணவு வழங்கி ஆயிற்று!


7
நல்லது. நீங்கள் போய் ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள்.

8

ஒவ்வொரு நாளும் வீரர்கள் அனைவரும் உணவு அருந்தியதும், பாண்டவர்கள் தாங்கள் படை வீரர்களின் இருப் பிடத்துக்குச் சென்று....

வீரர்கள் எல்லோரும் சாப்பிட்டு விட்டார் களா?

நமது தரப்பில் போர் புரியும் வீரர்கள் அனைவருக்கும் உணவு வழங்கி ஆயிற்று.

9

துரியோதனன் வீரர்கள்?

அவர்களும் சாப்பிட்டு விட்டார்கள்.

10

ஒருநாள் சமையல் செய்யுமிடத் துக்கு பாண் டவர்கள் சென்று...

சமைத்த உணவு போதாமல் போயிற்றா? அல்லது அதிகமாக இருந் ததா?

சொல்லி வைத்தது போல்-கணக்குப் போட்டு சமைத்தது போல்-தினமும் இரண்டு தரப்பு வீரர்களுக்கும் எவ்வளவு உணவு தேவையோ அவ்வளவு மட்டுமே சமைக் கும்படி உடுப்பி அரசர் உத்தரவிடுகிறார்

11

உடுப்பி அரசரின் பணியாள் தர்மரிடம்...

அரசே! எங்கள் அரச ருக்கு ஒவ்வொரு நாளும் போரில் எவ்வளவு பேர் இறக்கப் போகிறார்கள் என்று முன்கூட்டியே தெரிந்துவிடுகிறது. அதனால் அவர், இறந்தவர்கள் போக மீதம் எவ்வளவுபேர் ஒவ்வொரு நாளும் இருப்பார்களோ, அத் தனை பேருக்கு மட்டும் உணவு சமைக்கி றார்.

அப்படியா விஷயம்! இதைப் பற்றி நான் கண்ண னிடம் கேட்டுப் பார்க்கிறேன்.

12

கிருஷ்ணா! எனக்கு ஒரு சந்தேகம்.

என்ன சந்தேகம்? கேளுங்கள்

(13)

உடுப்பி அரசருக்கு
ஒவ்வொரு நாளும் போரில்
எத்தனை பேர் இறப்பார்கள்
என்று எப்படி
தெரியும்?

என்னிடம்
கேட்ட இந்தக்
கேள்வியை அந்த
அரசரிடமே
கேளுங்கள்!

(14)

தருமபுத்திரர் கண்ணனிடம் கேட்ட கேள்வியை
உடுப்பி அரசரிடம் சென்று கேட்டார். அதற்கு
உடுப்பி அரசர் புன்சிரிப்புடன்...

ஸ்ரீகிருஷ்ணனுக்கு
நான்தான் தினமும் பாயசம்
பரிமாறுகிறேன். பாயாசத்தில்
அவர் எத்தனை முந்திரி பருப்புகள்
சாப்பிடுகிறார் என்று கவனிப்பேன்.
அதிலிருந்து மறுநாள் எவ்வளவு பேர்
இறக்கப் போகிறார்கள் என்று தெரிந்து
கொள்வேன். ஒரு முந்திரி பருப்புக்கு
இத்தனை ஆயிரம் பேர் இறக்கப்
போகிறார்கள் என்று அர்த்தம்.
இப்படியே ஒவ்வொரு நாளும்.
ஸ்ரீகிருஷ்ணன் கால் முந்திரி, அரை
முந்திரியைச் சாப்பிட்டு எனக்கு
கணக்குக் காண்பிப்பார். இது
எனக்கும் அவருக்கும்தான் தெரியும்.
அதற்குத் தகுந்தபடி இறந்தவர்கள்
போக மீதி இருப்பவர்களுக்கு
நான் உணவு தயார்
செய்கிறேன்.

(15)

போரில் யார் மடிவது
என்ற சங்கல்பம் உங்க
ளுடையது. நாங்கள்
செய்வது போலி
யுத்தம்தான்.

(16)

'அவனன்றி ஓர் அணுவும் அசையாது'
என்பது ஆன்றோர் வாக்கு. நம்மைப்
பக்குவப்படுத்துவதற்காக இறைவன்
பல்வேறு அனுபவங்களை நமக்கு
வழங்குகிறான்.

இறைவன் எண்ணப்படிதான்
உலகில் அனைத்து நிகழ்ச்சிகளும்
நிகழும்.



# விபீஷணனின் சரணாகதி



1 ஸ்ரீராமருக்கும் ராவணனுக்கும் நடந்த யுத்தத்தில் ஒரு நாள்....









4
விபீஷணா, இவன் மிகவும் சிறந்த வீரன்தான் மழையெனத் தொடரும் என் அம்புகள் ஒவ்வொன் றுக்கும் எதிர் அம்புகள் தொடுக்கிறானே!


5
விபீஷணா! இவன் குரு மிகவும் கொடுத்து வைத்தவர். யாருடைய சீடன் இவன்?
தசரதநந்தா! அதோ! பாருங்கள்! அவன் அக்கினியாஸ்திரம் தொடுக்கப் போகிறான். தயங்காதீர்கள். நீங்கள் வருணாஸ்திரத்தை எடுங்கள்.


6
கவலை கொள்ளாதே, விபீஷணா! என்னை அவனால் வெல்ல முடியாது.


7
சபாஷ், என்ன விரைவு! என்ன தீரம்! இவன் எனக்கு நிகராய் போர் புரிகிறானே!
கடுமையான போர் நடந்தது. அரக்க இளைஞனின் அஸ்திரங்களுக்கு எல்லாம் ராமர் பதில் அஸ்திரங்கள் தொடுத்து அவற்றை அழித்தார். போரின் முடிவும் நெருங்கியது. அரக்க இளைஞன் களைத்துவிட்டான்.




உடனே ராமரும் பாணம் செலுத்தி அந்த இளைஞனை வதைத்துவிட்டார்.

9

விபீஷணன் தலை குனிந்து, முகம் பொத்திக் கண்ணீர் வழிய நின்றான். அரக்க வீரன் நிலத்தில் வீழ்ந்து கிடந்தான். மார்பில் அம்பு பட்டு ரத்தம் வழிந்தது. அங்கே ராமர் வந்தார்.






11

என்ன! என்ன!

விபீஷணா உண்மையாகவா? உன் மகனா இவன்? சொந்த மகன் வீர சொர்க்கம் அடைவதை நீயே பார்த்துக் கொண்டிருந்தாயா? இந்த உண்மையை நீ ஏன் என்னிடம் முன்பே கூறவில்லை?

12

அண்ணலே! எனக்கு எல்லா உறவும் தாங்கள்தான் பிரபு. தங்களிடம் சரணாகதி அடைந்த பின்னர், பிள்ளைப் பாசம் எல்லாம் என்னை ஒன்றும் செய்யவில்லை. இப்போரில் உங்கள் வெற்றி ஒன்றே என் லட்சியம்.

13

விபீஷணா! யாரும் செய்ய முடியாத தியாகத்தைச் செய்த உத்தமத் தொண்டன் நீ. வாழ்க நீ!

இறைவனிடம் சரணாகதி அடைந்தவனின் ஆசாபாசங்கள் தாமே விலகி விடுகின்றன.
இதுதான் சரணாகதியின் மகத்துவம்.

# அஷ்டாவக்ர கீதை தோன்றிய வரலாறு

1

ஜனக மகாராஜாவின் திருச்சபை.

பிரம்மஞானம் கிடைப்பது அரிதினும் அரிது அல்லவா? அறிஞர் பெருமக்களே, இந்த வேதாந்த நூல் பிரம்மஞானம் கிடைப்பதைப் பற்றி என்ன கூறுகிறது?



'குதிரை ஏறும் ஒருவன் சேணத்தின் ஒரு சுவட்டில் காலூன்றி, மறுசுவட்டில் மறுகாலை ஊன்றும் நேரத்திற்குள் பிரம்மஞானத்தைப் பெறலாம்' என்கிறது அரசே.

2

ஆஹா! எத்தனையோ காலமாக பிரம்மஞானம் பெறுவதற்காகத் தவித்து கொண்டிருக்கிறேனே! அது கிடைப்பது இவ்வளவு எளிதானதா! அறிஞரே, இதோ இப்போதே குதிரையைக் கொண்டு வரச் சொல்லி அதன்மீது ஏறுகிறேன். இந்த நூலில் கூறியுள்ளபடி தாங்களே எனக்கு உடனே பிரம்மஞானம் கிடைக்கச் செய்யுங்கள்.



அரசே, நூலில் உள்ளதைத்தான் நான் கூறினேனே தவிர, தங்களுக்கு ஞானமளிக்க என்னால் இயலாது. அது மிக கடினம்.

3

அப்படியானால் நூலில் கூறியிருப்பது மிகைப்படுத்தப்பட்டதா ? அல்லது பொய்யா?




உங்களாலேயே மெய்ப்பிக்க முடியவில்லை என்றால், பொய்யான நூல்களையெல்லாம் விளக்கி எங்கள் நேரத்தை வீணடித்த குற்றத்திற்காகத் தண்டனையை ஏற்க வேண்டும்.

4







5

எல்லாச் சிறைச்சாலைகளிலும் அறிஞர்கள் நிரம்பி வழிந்தார்கள்.



6




7

கூட்டமாக பண்டிதர்கள் வருவதை அஷ்டாவக்ரர் பார்த்தார். (பிறந்தபோதே எட்டு கோணங்களில் அஷ்டாவக்ரரின் உடல் வளைந்திருந்ததால் அவருக்கு அந்தப் பெயர் ஏற்பட்டது. பிற்காலத்தில் அவரது உருவம் சரியாகிவிட்டாலும் பெயர் மட்டும் அப்படியே நிலைத்துவிட்டது.)




8

எல்லோரும் ஜனகரின் செயலைப் பற்றி அவரிடம் முறையிட்டார்கள்.



**9**

அஷ்டாவக்ரரின் பெருமையை அறிந்திருந்த ஜனகர் அவரைச் சகல மரியாதைகளுடன் வரவேற்றார்.




**10**

ஜனகர் தமக்கு பிரம்மஞானம் அருளுமாறு அஷ்டாவக்ரரிடம் வேண்டினார். அவரும் பிரம்மஞானம் அருள நிச்சயித்தார். ஆதலால் ஜனகரைத் தம்முடன் தனியாகக் காட்டிற்கு வர வேண்டும் என்று கூறினார் அஷ்டாவக்ரர். அரசரும் அதற்குச் சம்மதித்தார். இருவரும் காட்டிற்குச் சென்றார்கள்.

**11**




**12**




அஷ்டாவக்ரர் அவ்வாறு ஆசிர்வதித்ததும் உடனே ஜனகர் தம்மை மறந்து சமாதி நிலையில் ஆழ்ந்தார் .

**13** சிறிது நாட்களுக்குப் பின்னர் அரசரைத் தேடி மக்களும் மந்திரி பிரதானிகளும் காட்டிற்குச் சென்றனர்.

மன்னர் இப்படித் தன்னிலை இழந்து கிடக்கிறாரே! இவரை இப்படியே அரண்மனைக்குத் தூக்கிக் கொண்டு போய்விடலாம்.



**14** சில நாட்களுக்குப் பின்னர்...

அரசே, தங்கள் நிலை மோசமாக இருப்பதாகவும், அதற்கு நானே காரணம் என்றும் இவர்கள் எல்லோரும் என்னைக் குற்றம் சொல்கிறார்கள். தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?



**15**



குருவே, யார் அப்படிக் கூறியது? வர்ணிக்க இயலாத இந்தப் பேரின்ப நிலை கிடைத்திருப்பது தங்கள் கருணையால் அல்லவா? இதையா இவர்கள் பரிதாப நிலை என்கிறார்கள்?

மற்ற எல்லோரையும் போகச் சொல்லிவிட்டு அஷ்டாவக்ரர் அரசருக்குத் தனிமையில் 'தத்வமஸி' என்ற தத்துவத்தை உபதேசித்தார்.

**16** அரசே, வேதாந்த நூல்களில் கூறியவாறு கணத்தில் ஞான அனுபவம் பெறுவது பற்றிய தங்கள் ஐயம் தீர்ந்ததா?



உண்மைதான் குருதேவா, அவரவர் மனப்பக்குவமும் தெளிவும் சேர்ந்து சரணாகதியோடு தன்னையே அர்ப்பணிக்கும் உணர்வு வந்துவிட்டால், கண்ணிமைக்கும் நேரத்திற்குள் பிரம்மஞானம் கைகூடிவிடும் என்பதை அறிந்துகொண்டேன்.

ஜனகரே, பிரம்மஞானத்தை அடைந்த நீங்கள் இனி ராஜரிஷிதான். இருந்தாலும் மக்களைக் காத்து ஆள்வது அரசனின் கடமை. ஆதலால் மக்களின் நன்மைக்காக முதலில் கடமையாற்றுங்கள்!

ஜனகர் எழுப்பிய ஐயங்களுக்கெல்லாம் அஷ்டாவக்ரர் தெளிவாகப் பதிலளித்தார். இந்த உரையாடல்கள்தான் 'அஷ்டாவக்ர கீதை' என்ற பெயரில் ஞானியர்களாலும் ஆன்மிக அறிஞர்களாலும் இன்றும் போற்றப்பட்டு வருகிறது.



# குருநமச்சிவாயர்



1 தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களுள் சீவன்முத்தர், சடாமுத்தர், மகாமுத்தர் ஆகியோர் தனிச்சிறப்பு பெற்றவர்கள். ஒரு நாள் அவர்கள் கனவில் நடராஜப் பெருமான் தோன்றினார்.




கனவு கலைந்தது. இறைவன் குறிப்பிட்ட இடத்திற்கு குருநமச்சிவாயரை அழைத்துவர அந்த மூன்று அந்தணர்களும் சென்றார்கள்.

2 சிவயோகத்தில் இருக்கும் குருநமச்சிவாயரைத் தரிசிக்க வந்த பக்தர்கள் பொன்னும், பொருளும் காணிக்கையாக அவர் முன் வைத்தார்கள்.




3 அந்தணர்கள் மூவரும் மீண்டும் இறைவனிடம் சென்று முறையிட்டார்கள்.




இறைவன் தண்டு, கமண்டலத்துடன் வயோதிகராக குருநமச்சிவாயர் எதிரே தோன்றினார்.

4




5




வயோதிக வடிவில் வந்த இறைவன் உடனே சந்திரனைப் பாத்திரமாக்கிக் கையிலேந்தினார். குருநமச்சிவாயர் அம்பிகையை வேண்ட அம்பிகை அன்னம் வழங்கினாள்.




6




7

இறைவன் தில்லைவாழ் அந்தணர்களிடம் மீண்டும்...

நமச்சிவாயரைக் கோயிலுக்குள் அழைத்து வர வழி வகுத்து விட்டோம்! நீங்கள் அனைவரும் நம் பல்லக்குடன் சென்று அவரை வீதிவலமாக எம்மிடம் அழைத்து வாருங்கள்!

8

சுவாமி!
நேற்று தங்களிடம் வந்து உரையாடியது தில்லைக்கூத்தனே! பெருமானது கட்டளைப் படி தங்களைத் தில்லைக் கோயிலுக்குள் அழைத்துச் செல்ல இங்கு நாங்கள் வந்திருக்கிறோம்.



குருநமச்சிவாயர் யோகக் காட்சியில் அதனை உறுதிப்படுத்திக் கொண்டார்.

ஆஹா! என்னுடன் உரையாடிய பரமன் உங்களிடமும் வந்து அந்தச் செய்தியைக் கூறினாரா!

9

பல்லக்கில் ஏறிக் கோயிலுக்குள் வந்த குருநமச்சிவாயர் ஸ்ரீநடராஜரைத் தரிசித்தார்.

சபாநாயகா! எனக்கு என்ன கட்டளை?




சபாநாயகர் பிக்ஷை கொடுத்தால் கட்டளை எப்போதும் தொடர்ந்து நடைபெறும்!

10

குருநமச்சிவாயர் பொன் தாம்பாளத்தைக் கையில் ஏந்தி வெண்பா பாட, தில்லைப் பெருமானின் திருக்கையிலிருந்து பொற்காசு ஒன்று தட்டில் விழுந்தது.

ஆஹா! என்ன அற்புதம்!



11

நடராஜப்பெருமானே நாம் அனைவரும் காணும்படி பிக்ஷையிட்டார். ஆதலால் நாமும் பொன்னும், பொருளும், முத்து மாலைகளையும் கோயில் திருப்பணிக்காக இனி அளிப்போம்!

பெருமானுக்கு அணிகலன்கள் முன்பு இருந்தது உண்டா?



இல்லை ஐயனே! பதஞ்சலி முனிவர் இருந்த காலத்தில் பாதச்சிலம்பும், கிண்கிணியும் இருந்த தாம். ஆனால் அதை நாங்கள் கண்டதில்லை!

12 உடனே பொற்கொல்லர்கள் வரவழைக்கப்பட்டார்கள்.




'அம்பலவாணர் இவற்றை அணிந்து நமச்சிவாயருக்கு நடனமா ஆடிக் காட்டப் போகிறார்?' என்ற சிலரின் ஏளனப் பேச்சு குருநமச்சிவாயர் காதுக்கும் எட்டியது. நாற்பதாம் நாள் பொற்கொல்லர்கள் திருவாபரணங்கள் செய்து கொண்டு வந்து கொடுத்தார்கள்.

13




14 குருநமச்சிவாயர் நடராஜப்பெருமானுக்கு ஆபரணங்களை அணிவித்துத் திருநடனம் புரியுமாறு இறைவனை வேண்டினார். இறைவனும் நீண்டநேரம் ஆடினார். நீண்டநேரமாகத் திருநடனம் நிகழ்கிறதே! எப்படி நடனத்தை நிறுத்துவது என்று அந்தணர்கள் சிலர் வருந்தினார்கள்.




குருநமச்சிவாயர் மனமுருகிப் பாட திருநடனம் நிறைவுற்றது.

15 இவ்வாறு பக்தியையே ஆதாரமாகக் கொண்டு குருநமச்சிவாயர் பல கோயில் திருப்பணிகள் புரிந்தார். அவர் காலத்தில் சைவம் தழைத்தோங்கியது. குருநமச்சிவாயர் பல்லாண்டுகள் வாழ்ந்திருந்து திருப்பெருந்துறையில் பரிபூரணம் அடைந்து சிவலிங்கத்தின் கீழ் (இலிங்காகாரம்) ஐக்கியமானார்.

# ஐயப்பன்

1 சிவனுக்கும், திருமாலாகிய மோகினிக்கும் ஐயப்பன் அவதரித்தார்.
அந்தக் குழந்தைப் பம்பையாற்றின் கரையில் மணிமாலையுடன் படுத்திருந்தது.

2 பந்தள நாட்டு மன்னன் ராஜசேகர பாண்டியன்.
அவன் காட்டிற்கு வேட்டையாடச் சென்றபோது, ஐயப்பனாகிய குழந்தை அழுது கொண்டிருப்பதைப் பார்த்தான்.
அப்போது முனிவர் ஒருவர் அங்கு வந்து...




3 தங்களுக்கு ஒரு குழந்தை கிடைத்தது பற்றி அரசனும் அரசியும் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார்கள்.
ஆனால் அமைச்சன் மட்டும் வருந்தினான்.




4 மணிகண்டனுக்கு ஐந்து வயதாயிற்று.
அரசன் மணிகண்டனை குருகுலவாசம் செய்வதற்கு அனுப்பினான்.
குருகுலவாசம் முடிந்ததும்...



5

மணிகண்டன் பால் நிறைந்த ஒரு பாத்திரத்தில் வில்வ தளத்தையும், துளசியையும் இட்டார்; அந்தப் பாலில் திருநீற்றையும் மந்திரித்துப் போட்டு அதை அவர் குருவின் மகனைப் பருகச் செய்தார்.
அந்தப் பாலைப் பருகிய குருவின் மகன் பார்வையும் பேச்சும் பெற்றான்.




6

குருகுல வாசம் முடிந்து மணிகண்டன் அரண்மனை திரும்பினார்.
சில காலம் கழிந்ததும் அரசிக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது.
அந்த குழந்தைக்கு ராஜராஜன் என்று பெயர் சூட்டினார்கள்.
அரசனும் அரசியும் மணிகண்டனையும் ராஜராஜனையும் தங்களின் இரண்டு கண்கள்போல் போற்றி வளர்த்தனர்.

7

மன்னன் முதுமை அடைந்தான். அவன் மணிகண்டனுக்கு முடிசூட்ட நினைத்தான்.
இது தீயவனான அமைச்சனுக்குத் தெரிய வந்தபோது...







8

அமைச்சர் கூறிய யோசனையின்படி அரசி தனக்குக் கொடிய தலைவலி வந்திருப்பது போல் நடித்தாள். அரசன் துடித்துப் போனான்.
மருத்துவர்கள் பலர் வந்து அரசிக்கு மருத்துவம் பார்த்தார்கள். அதனால் பயன் எதுவும் ஏற்படவில்லை.




9
வஞ்சக அமைச்சன், போலி மருத்துவன் ஒருவனை ஏற்பாடு செய்து அழைத்து வந்தான்.
அரசே! என்னிடம் இருக்கும் மூலிகையைப் புலிப்பாலில் கலந்து கொடுத்தால், அரசியாரின் தலைவலி பறந்தே போய்விடும்.
ராணியின் தலைவலி நீங்கும் பொருட்டு புலிப்பால் கொண்டுவருபவருக்கு என் நாட்டில் பாதியைக் கொடுக்கிறேன். இந்தச் செய்தியை நாடு முழுவதும் பறையறிவித்துத் தெரிவியுங்கள்.


10
புலிப்பால் கொண்டு வருவதற்குப் பலர் காட்டிற்குச் சென்றார்கள். ஆனால் ஒருவராலும் புலிப்பால் கொண்டு வர முடியவில்லை.
இந்த நிலையில் மணிகண்டன் அரசனிடம் சென்று . . .
தந்தையே! எனக்கு உத்தரவு கொடுங்கள். நான் சென்று புலிப்பால் கொண்டு வந்து அன்னையின் தலைவலியை நீக்குகிறேன்.


11
மணிகண்டன் மீது கொண்ட அன்பு காரணமாக, மன்னனுக்கு மணிகண்டனைப் பிரிவதற்கு மனமில்லை. எனினும் அவன், மணிகண்டன் பெரிதும் வற்புறுத்தியதால் அரைமனதோடு சம்மதித்தான்.
மணிகண்டன் தாயிடம் விடைபெறச் சென்றார். அவள் மணிகண்டனைப் பிரிய மனம் இல்லாதவள் போல் பாசாங்கு செய்தாள்.
அம்மா! தலைவலி பொறுக்க முடியவில்லையே...!
அம்மா! வருத்தப்படாதீர்கள். காட்டிற்குச் சென்று நான் எப்படியும் புலியுடன் திரும்பி வருவேன்.
சிவபெருமான் உனக்குத் துணை புரிவாராக!


12
மகிஷி என்ற அரக்கி, தேவர்களுக்குப் பல விதங்களிலும் துன்பம் கொடுத்து வந்தாள். தேவர்கள் காட்டில் மணிகண்டனைச் சந்தித்து அவரது அவதார நோக்கத்தை நினைவு படுத்தினார்கள்.
மகிஷியின் துன்பத்திலிருந்து எங்களைக் காப்பாற்றுங்கள்.

13 தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்க மணிகண்டன், மகிஷியுடன் கடுமையாகப் போரிட்டு அவளைக் கொன்றார்.

மகிஷியைக் கொன்று எங்களைக் காப்பாற்றி அருள் புரிந்தீர்கள்!
அதற்கு நன்றிக்கடனாக இந்திரனாகிய நான் ஆண் புலியாகவும், தேவர்கள் பெண்புலிகளாகவும் மாறி உங்களுடன் அரண்மனைக்கு வருகிறோம்.



14 மணிகண்டா! நீ சாதாரண மனிதன் இல்லை! நீ தெய்வப்பிறவி 'ஹரிஹர புத்திரன்' என்பதை அறிந்துகொண்டேன். ஐயப்பா! புலிகளை அனுப்பிவிடு.

மகனே! என்னை மன்னித்து விடு. உன் மகிமை தெரியாமல் உனக்குத் தீங்கு செய்ய நினைத்துவிட்டேன்.

தங்கையே! நானே புலிப்பால் கறந்து தருகிறேன். தாயின் நோய் விரைவில் நீங்கிவிடும்.



எனக்கு எல்லாம் தெரியும் தாயே!

15 தங்கையே! உங்களுக்கு என்ன வரம் வேண்டுமோ கேளுங்கள்.

நீ எங்களுடன் இருந்ததன் நினைவாக உனக்கு ஒரு கோயில் கட்ட விரும்புகிறேன்.

உங்கள் விருப்பம் நிறைவேறும்.



16 மன்னன் அகத்திய முனிவரின் ஆலோசனையின் பேரில் பதினெட்டு படிகளுடன் சபரிமலையில் ஒரு கோயில் எழுப்பினான்.
அங்கு பரசுராமர் ஐயப்பன் திருஉருவத்தை பிரதிஷ்டை செய்தார்.





# இந்திரனும் பிரஹலாதனும்



**1** மங்களம் நிறைந்த இந்திரனின் சபையில் ஒருநாள்...

தேவதேவா, தங்களின் திருச்சபையின் ஒளி மங்கி வருகிறது! தங்களின் யானை ஐராவதமும் காமதேனுவும் கட்டுக்குள் அடங்காமல் தவிக்கின்றன!




**2** பிரஹஸ்பதியின் ஆசிரமம்.

குருதேவா, மூவுலக ஆட்சியதிகாரத்தையும் ஒருமுறை பறித்த ஹிரண்யகசிபுவைத்தான் மஹாவிஷ்ணு வதைத்துவிட்டாரே? அசுர பயமின்றி வாழ்ந்து வருகிறோம். இப்போது வேறு யார் என் ஆட்சியைப் பறித்திருப்பது?



இந்திரா வருந்தாதே, மூவுலக ஆட்சியதிகாரமும் உன்னிடமிருந்து பறிபோய்விட்டது. அதன் விளைவே இது!

**3** உன் அதிகாரம் பறிக்கப்படவில்லை, இந்திரா. தானாகவே அது சேர வேண்டிய இடத்தில் சரணடைந்துவிட்டது!




ஹிரண்யகசிபுவின் ஒழுக்கம் மிக்க மகன் பிரஹலாதனிடம் அவை தஞ்சமடைந்துள்ளன!


4
அப்படியா!
அதிசயமாக இருக்கிறதே சுவாமி!
உடல்வலிமையாலும் வரங்களின் பலத்தாலும் அதிகாரத்தைப் பறிப்பது அசுரமுறைதான். ஆனாலும் ஒழுக்கச் சீலம் மிக்கவரிடம் அதிகாரம் தானே அடைக்கலம் ஆவதும் உண்டு.
அசுரனாக இருந்தாலும் பிரஹலாதனின் ஹரிபக்தியாலும் ஒழுக்கம் மிக்க வாழ்க்கை முறையாலும் மூவுலகை ஆளும் அதிகாரம் அவனிடம் தானே தஞ்சமாயுள்ளது.


5
பக்தனும் ஒழுக்கமுள்ளவனுமான பிரஹலாதனிடமிருந்து அதிகாரத்தை எப்படித் திரும்பப் பெறுவது?
இந்திரா, இந்தப் பிரச்னையைத் தீர்க்கும் ஆற்றல் என்னிடம் இல்லை. அசுரகுரு சுக்ராச்சார்யாரிடம் சென்று கேள். அவர் ஏதேனும் வழி காட்டலாம்.


6
இந்திரா, பிரஹலாதனிடமிருந்து அதிகாரத்தை மீட்பது எளிதல்ல. ஏனெனில் அது அவன் வேண்டிப் பெற்றதல்ல. தெய்வங்களுக்குக்கூட அதைப் பறிக்கும் சக்தி இல்லை.
அதிகாரத்தை இழந்துவிட்ட என்னை எல்லோரும் இகழ்வார்களே. என் நிலைக்கு இரங்கி அதை மீண்டும் பெற தாங்கள்தான் எனக்கு வழிகாட்ட வேண்டும்.


7
சரி, எப்படியாவது பிரஹலாதனிடம் அவனது சீலத்தைப் பெற்று வா. அதனால் அவனது தவமும் சத்தியமும் தருமமும் மற்ற செல்வங்களும் சென்று விடும். அதிகாரம் உன்னைத் தேடி வரும்.
நன்றி சுவாமி. முயற்சி செய்கிறேன்.
இதே உருவில் போகக் கூடாது. அந்தணச் சிறுவனாகச் செல்வோம்.

8




9




10

அந்தணச் சிறுவனின் அறிவுத் தாகத்தைக் கண்டு பிரஹலாதன் மகிழ்ச்சியுற்றார். சிறுவனுக்கு ஏதாவது அன்பளிப்பு கொடுக்க விரும்பினார்.




11

பிரஹலாதன் அதிர்ச்சியுடன் அந்தணரைப் பார்த்தார்.



**12**




**13** சிறுவனாக வந்து பிரஹலாதனின் சீலத்தை எடுத்துக்கொண்ட இந்திரன் உடனே புறப்பட்டுச் சென்றான். அவன் சென்றவுடன் பிரஹலாதனின் உடலிலிருந்து ஐந்து தேவதைகள் வெளியே வந்தார்கள்.

**14** ஒவ்வொரு தேவியராக வணங்கி விடைபெற்றார்கள்.




**15** லட்சுமி தேவி போவதற்கு முன்பு பிரஹலாதனிடம்...




**16** தம்மிடமிருந்து எல்லா சக்திகளும் சென்றுவிட்டாலும் பிரஹலாதன் அமைதியாகச் சிந்தித்தார்.





# பக்தன் பணியில் பகவான் குடும்பம்

**1** சீடர்களாக இருப்பவர்கள் எல்லோருமே புத்திசாலிகளாக இருப்பதில்லை. அவர்களில் சிலர் மந்த புத்தியினர் என்று பிறரின் கேலிக்கு ஆளாவார்கள். ஆனாலும் அவர்கள் தங்களது ஆழ்ந்த பக்தியால் குரு மெச்சும்படி உன்னத நிலையை அடைந்துள்ளனர். அத்தகைய ஒரு சிறுவனின் சரித்திரம் இது:

**2** சமர்த்த ராமதாசரின் ஆசிரமத்தில் ஒரு நாள் ஓர் எளியவன் வந்து அவரை நமஸ்கரித்தான்.




**3** சில நாட்களில்..., குரு பாடம் நடத்த ஆரம்பித்தார். ஆனால் அந்தச் சிறுவன் மட்டும் வரவில்லை. அதனை அறிந்த குரு அவனை அழைத்து வருமாறு கூறினார்.




**4** படிப்பில் சிறந்து விளங்காததால் மற்ற சீடர்கள் அவனை மடையன் (போளா) என்றே கேலி செய்தனர். ஒரு நாள்...




5
மற்றொரு நாள் ராமதாசர் இறைவனின் பிரசாதத்தை உண்ணத் தொடங்கும்போது...
இன்று நைவேத்தியம் தயாரித்தது யார்?
போளாதான் குருவே!
அட அவனா? இவ்வளவு ருசியாகச் சமைத்துள்ளானே!


6
சில தினங்களுக்குப் பிறகு ராமதாசர் சத்ரபதி சிவாஜியைக் கண்டுவரச் சீடர்களுடன் புறப்பட்டார். மற்ற சீடர்கள் தயாராயினர். போளா மட்டும் தயங்கியபடி...
குருவே, எல்லோரும் போய்விட்டால் ஆசிரம பசுக்களையும் நந்தவனத்தையும் யார் பார்த்துக் கொள்வது? அதோடு பகவானுக்காக யார் சமைப்பார்கள்?
ஆஹா, உன்னைப் பொறுத்தவரை சீதையும் ராமரும் உயிரோடு உள்ளவர்கள், வெறும் விக்கிரகங்கள் அல்ல. சரி, ஆசிரமத்தை நீயே கவனித்துக் கொள்.


7
சுவாமி, நான் மட்டுமே இவை எல்லாப் பணிகளையும் செய்ய முடியுமா?
முடியும் மகனே. வேண்டுமானால் உதவிக்கு ஆஞ்சநேயரை அழைத்துக் கொள். நிச்சயம் அவர் உனக்கு உதவுவார்.
சரி, ஹனுமான்ஜி இருக்கும்போது என்ன கவலை?


8
குரு புறப்பட்டுச் சென்றுவிட்டார்.
போளா பசுக்களை மேய்த்தான். நந்தவனத்தைப் பராமரித்தான். நைவேத்தியம் தயாரித்து ராமர், சீதை, லட்சுமணர் ஆகியோரை உண்ண அழைத்தான்.
ஆனால் யாரும் வரவில்லை. நேரம் கடந்து கொண்டிருந்தது. பசி தாங்க முடியாமல் போளா அழுதேவிட்டான். திடீரென்று குரு கூறியது அவனுக்கு ஞாபகத்திற்கு வந்தது.
ஹனுமான்ஜி, பசியுடன் வாடும் எனக்கு உதவ மாட்டீர்களா? ராம்ஜி சாப்பிட்டால்தானே நான் சாப்பிட முடியும். அவரையும் மற்ற இருவரையும் சீக்கிரம் அழைத்து வாருங்களேன் சுவாமி!

**9**

சிறுவன் இவ்வாறு மனமுருகிப் பிரார்த்தித்தான். உடனே ஹனுமான் அங்கு பிரசன்னமானார்.

குழந்தாய், நாம் சாப்பிடுவோமா?



ஆ, ஹனுமான்ஜியா! நீங்கள் மட்டும் வந்தால் போதுமா? ராம்ஜி, சீதாம்மா, லட்சுமணர் உண்ணாமல் நாம் மட்டும் எப்படி உண்பது? அவர்களையும் அழைத்து வாருங்கள் அப்போதுதான் உங்களுக்கே சாப்பாடு. சரியா?

**10**

போளாவின் குழந்தைப் பேச்சை மிகவும் ரசித்த ஹனுமான், ஸ்ரீராமரைப் பிரார்த்தித்தார்.

பிரபு, குருவாக்கில் பூரண நம்பிக்கை வைத்திருக்கிறான் இவன். தயவுசெய்து எழுந்தருளி உண்ண வாருங்கள்.

நாதா, குழந்தை பசியோடிருக்கிறான்.





**11**

சிறுவனின் முன் ராமர், சீதை, லட்சுமணர் மற்றும் ஹனுமானும் பிரசன்னமாயினர்.

ராம்ஜி, மிகவும் தாமதாக வந்துவிட்டீர்கள். நான் கூப்பிட்டபோது வந்திருந்தால் சுடச்சுடச் சாப்பிட்டிருக்கலாமே. நாளை இன்னும் நன்கு சமைக்கிறேன். குறைவின்றிச் சாப்பிடுங்கள்.





**12**

சிறுவனின் பக்தியினால் அன்று முதல் ராமர், லட்சுமணர், சீதை, ஹனுமான் ஆகியோர் தினமும் ஆசிரமத்திற்கு விஜயம் செய்தார்கள். அதனால் பசுக்கள் புஷ்டியாக வளர்ந்தன. நந்தவனம் பூத்துக் குலுங்கியது; காய்கனிகள் பெருகின. அந்த ஆசிரமமே தெய்விகத்தில் திளைத்தது.

**13** இவ்வாறு சில மாதங்கள் ஆனந்தமாகக் கழிந்தன.
ஒரு நாள் குரு திரும்பி வரும் செய்தி சிறுவனுக்கு எட்டியது. அதனால் அவன் பரபரப்பாகி சீதாதேவியிடம்....




**14** சமர்த்த ராமதாசர் சீடர்களுடன் திரும்பி வந்தார். ஆசிரமத்தில் அலங்காரத் தோரணங்கள், கொழுத்த பசுக்கூட்டம், பூத்துக் குலுங்கும் நந்தவனம், சிறந்த விருந்து ஏற்பாடு இவற்றையெல்லாம் பார்த்து மலைத்துவிட்டார்.

குழந்தாய், எப்படி இதை எல்லாம் நீ ஒருவனே செய்தாய்?

குருஜி, நான் எங்கே தனியாகச் செய்தேன்! ஹனுமான்ஜி ரொம்ப நல்லவர். அவரே சீதாம்மா, ராம்ஜி, லட்சுமண்ஜி எல்லோரையும் கொண்டு வந்துவிட்டார். அவர்கள்தான் இதையெல்லாம் செய்தார்கள்.

**15** இதைக் கேட்டு எல்லாச் சீடர்களும் போளாவைக் கேலி செய்தார்கள்.




**16** சீடர்கள் கேலி செய்தாலும் ராமதாசர் அங்கு பிரவகித்த தெய்விகத்தை உணர்ந்தார். அவர் உள்ளே சென்றபோது யாரோ நால்வர் வேகமாகப் பூஜையறையில் சென்று மறைவதைப் பார்த்தார். உடனே அவர் தம் சீடனைக் கண்ணீர் மல்க அணைத்தபடி...




முக்தி பெறுவது அவ்வளவு கடினமல்ல; ஆனால் தூய பக்தி பெறுவது மிகவும் அரிது. முதலில் இறைவன் காந்தமாகவும் பக்தன் இரும்பாகவும் இருப்பர். முடிவில் பக்தன்



காந்தமாகவும் இறைவன் இரும்பாகவும் மாறுவர். பக்தன் வேண்டியபடியெல்லாம் இறைவன் ஆடுவான்.

- ஸ்ரீராமகிருஷ்ணர்



# காசி அன்னபூரணி தோன்றிய வரலாறு

**1** எல்லா லோகங்களும் இன்புற, சிவபெருமான் கயிலாயத்தில் தியானத்தில் ஆழ்ந்திருந்தார். அப்போது அங்கு வந்த பார்வதி தேவி விளையாட்டாக சிவபெருமானின் கண்களை மூடி மகிழ்ந்தார்.



**2** சிவபெருமானின் வலது கண் சூரியன்; இடது கண் சந்திரன். ஆதலால் உடனே எல்லா லோகங்களும் இருண்டுவிட்டன. மக்கள் செய்வதறியாது திகைத்தார்கள். அதைக் கண்டு சிவன் சற்று கடிந்தபடி...,




**3** சூரிய ஒளியின்றி மக்கள் மிகவும் சிரமப்படுவதைப் பார்த்த பார்வதி தேவி மிகவும் வருந்தி...




**4**






உலக உயிர்கள் யாவும் மீண்டும் ஒளி பெற்று சுகம் அடைந்ததைப் பார்த்த பார்வதிதேவி மகிழ்ந்தாள்.

**5**

தமது கண நேர கவனக்குறைவால் மக்கள் யாவரும் சிரமப் பட்டார்கள்; தம்மால் நடந்துவிட்ட தவறுக் குப் பிராயச்சித்தம் செய்திட பார்வதி தேவி அனுமதி வேண்டினாள்.




மன்னியுங்கள் சுவாமி. உயர்நிலையில் இருப் பவர்கள் தங்களது செயல்களின் விளைவ களை நன்கு சிந்தித்துச் செயல்பட வேண்டும் என்பதை உலகோர் உணரவும், நான் செய்து விட்ட தவறுக்குப் பிராயச்சித்தமாகவும் தவமியற்ற என்னை அனுமதியுங்கள்.

**6**

சிவபெருமானின் ஆசியுடன், பார்வதி தேவி தென் திசை நோக்கிப் புறப்பட்டாள். வழியில், காசி நகரில் கடும்பஞ்சம் தலைவிரித்தாடியது.

தேவி அங்கு ஒரு மாளிகையை எழுப்பித் தங்கினாள்; அன்னபூரணி என்ற நாமத்துடன் அனைவருக்கும் உணவு வழங்கி, பசிப்பிணியைப் போக்க ஆரம்பித்தாள்.



**7** ஏராளமான ஏழைகள் அன்ன பூரணியின் மாளிகையில் உணவு உண்டு சென்றனர். எத்தனை பேருக்கு அன்னம் பாலித்தாலும், தேவியின் பாத்திரத்தில் அன்னம் குறையவே இல்லை!



**8** மக்களின் துயரைப் போக்க முடியாத காசி மன்னர் இந்த விவரத்தை அறிந்து வியந்தார். அன்னபூரணி யார் என்பதை அறிந்து கொள்ள அதிகாரிகளை அனுப்பினார். அவர்கள் அங்கு சென்று...,



9

அதன்படி, அரசர் மறுநாள் மாறுவேடத்தில் வரிசையில் சென்று நின்றார்.




10

உடனே அரசர் அன்னபூரணியைப் பக்தியுடன் வணங்கி...




11

தேவி, தாங்கள் என்றென்றும் இந்த காசி மாநகரிலேயே இருந்து எங்களின் பஞ்சத்தை நீக்கிடப் பிரார்த்திக்கிறோம்.






13

இல்லை அரசே, மக்களை இருளில் தவிக்க விட்டதற்காக, நான் தவம் புரிய தென்திசை செல்கிறேன். நீ தர்ம வழியில் அரசாண்டால், உன் நாட்டில் எல்லா வளங்களும் பெருகும்.

தாயே, காசியில் தங்களது சாந்நித்தியம் என்றும் இருந்திட அருள்புரியுங்கள்.

ஈசனருளால் அவ்வாறே நடக்கட்டும்.

மன்னரும் மக்களும் அன்னபூரணி தேவியை அன்றிலிருந்து பக்தியுடன் கொண்டாடத் தொடங்கினர்.

14

நீண்ட காலத்திற்குப் பிறகு... பாண்டவர்கள் வனவாசத்தில் இருந்தபோது ஸ்ரீகிருஷ்ணரிடம் ஆலோசனை நடத்தினர்...

கிருஷ்ணா, எங்களுக்குக் காட்டில் எப்போதும் உணவு கிடைக்க நாங்கள் என்ன செய்ய வேண்டும்?

பீமா, திரேதா யுகத்தில் ஸ்ரீராமர் கானகத்தில் இருந்தபோது இதே போன்ற ஒரு பிரச்னை எழுந்தது. அப்போது அகஸ்தியர் ராமருக்குக் கூறியதையே நானும் உங்களுக்குக் கூறுகிறேன்.

15

கிருஷ்ணர் அக்காட்சியை அப்படியே விவரித்தார்.

முனிபுங்கவ, கானகத்தில் நாங்கள் எப்படி தவம் புரிய வேண்டும் என்று உரைத்தீர்கள். இன்னும் ஒன்று கேட்க விழைகிறோம். நாங்கள் என்றும் குறைவின்றி உணவு பெற என்ன வழி?

ராமா, வருந்தாதே. காசியில் கோவில் கொண்டுள்ள அன்னபூரணியை தியானி. உனக்கு உணவுக்குக் குறைவே இருக்காது.

அன்னபூரணியின் உறைவிடமாகிய காசியில் யாரும் பசியோடு இருக்க முடியாது, உண்மைதான்.

-பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்

# ஸ்ரீகுருவாயூரப்பன்



1 அவதார காரியம் முடிந்ததும் ஸ்ரீகிருஷ்ணர் வைகுந்தம் ஏகுவதற்கு ஆயத்தமானார். அப்போது அவருடைய நண்பரும் சீடருமான உத்தவர்...







3 பிறகு, கிருஷ்ணர் ஒரு வேடனின் அம்பினால் அடிபட்டு வைகுந்தம் சென்றார். மகாபாரதப் போருக்குப் பின் நீண்ட காலம் ஆட்சி புரிந்த பரீக்ஷித்து மன்னன் தட்சகன் என்ற பாம்பால் கடிபட்டு மரணமடைந்தார். அதனால் அவரது மகனான ஜனமேஜயன் சர்ப்பங்கள் அனைத்தின் மீதும் கோபமுற்று சர்ப்பயாகம் செய்தான்.



4 பிறகு அஸ்தீகர் என்ற முனிவர் ஜனமேஜயனிடம்...




முனிவரின் வார்த்தையை மன்னர் ஏற்க, யாகம் நிறுத்தப்பட்டது. ஆனால் பாம்புகளைக் கொன்ற பாவத்தால் ஜனமேஜயன் தொழுநோயால் பீடிக்கப்பட்டான்.

5 சில காலம் கழித்து, கேரள தேசத்தில் தமது ஆசிரமத்தில் பரசுராமர் ஜனமேஜயனுடன் உரையாடினார்.




குருவே, தன்யனானேன் சுவாமி! தாங்கள்தான் அடியேனுக்கு உதவ வேண்டும்.

6 உத்தவர் கேட்டுக் கொண்டபடி, தேவகுரு பிருஹஸ்பதியும் வாயு பகவானும் சேர்ந்து, கிருஷ்ணர் சிலையை பிரதிஷ்டை செய்யத் தகுந்த இடத்தைத் தேடியவாறு கேரள நாட்டிற்கு வந்தனர்.




7 முடிவில் இருவரும் பரசுராமரின் ஆசிரமத்திற்கு வந்தனர். பரசுராமர் அவர்களை வரவேற்று உபசரித்தார்.




சுவாமி, இங்கே அருகில் ருத்ர தீர்த்தம் என்று ஒரு புனிதமான தாமரைத் தடாகம் உள்ளது. அதன் அருகில்தான் சிவபெருமான் உமையுடன் தவமியற்றி வருகிறார். அங்கே பிரதிஷ்டை செய்யலாம்.

8 ருத்ர தீர்த்தத்தின் அருகே சிவபெருமான், உமையுடன் வீற்றிருந்தார். மூவரும் அவரைப் பணிந்து நின்றனர்.



இங்கேயே விஸ்வகர்மா உதவியுடன் ஒரு கோவில் எழுப்பி இந்த விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபடுங்கள். அனைவருக்கும் க்ஷேமம் உண்டாகட்டும்.

9 அதன்படி, கோவில் எழுப்பப்பட்டு விக்கிரகமும் பிரதிஷ்டை செய்யப்பட்டது. சிவபெருமான் அதனருகில் உள்ள ஓர் இடத்தில் எழுந்தருளி 'மம்மியூர் மகாதேவர்' என்ற பெயருடன் பக்தர்களுக்கு அருள் பாலிக்க ஆரம்பித்தார்.



10





11 சில தினங்களில் பரசுராமர் ஜனமேஜயனை அழைத்து,





12 ஸ்ரீகிருஷ்ணரையும் மம்மியூர் மகாதேவரையும், அன்னை பார்வதியையும் தினமும் ஜனமேஜயன் வழிபட்டு வந்தார். சில மாதங்கள் சென்றன. ஒரு நாள் ஸ்ரீகிருஷ்ணன் குருவாயூரப்பனாக அவர் முன் தோன்றி...



13 ஆஹா! என் நோயை முற்றிலும் நீக்கிய என் ஐயனுக்கு இன்னமும் சிறந்த முறையில் ஒரு கோவிலை அமைக்க வேண்டும்.



ஜனமேஜயன் நாடு திரும்புமுன் குருவாயூரப்பனுக்குச் சிறந்த கோவில் ஒன்றைக் கட்டி முடித்தார்.

14 பக்தர்களே! உடல் நலம் குன்றியவர்கள் இந்த புஷ்கரிணியில் நீராடிப் பக்தியுடன் ஸ்ரீகுருவாயூரப்பனை வழிபட்டு வந்தால் அவர்களது நோய் நீங்கிவிடும்.



மிகவும் நன்றி மன்னா. தாங்கள் செய்துள்ள உதவி மிகப் பெரிது. ஸ்ரீகுருவாயூரப்பன் புகழ் ஓங்குக!

15

ஸ்ரீகுருவாயூரப்பன் இன்றளவும் பக்தர்களுக்கு அருள்பாலித்து வருவது கண்கூடு. மேப்பத்தூர் ஸ்ரீநாராயண பட்டத்திரிக்கு வந்திருந்த கடுமையான வாத நோயைக் குணப்படுத்தினார். பட்டத்திரி ஸ்ரீகுருவாயூரப்பனைப் பற்றி எழுதிய 1036 பாடல்கள் கொண்ட 'ஸ்ரீநாராயணீயம்' பகவானின் லீலைகளை மிகச் சிறப்பாக விளக்குகிறது. ஒவ்வொரு பாடலும் முடிந்தவுடன் பட்டத்திரி குருவாயூரப்பனிடம், 'இப்படி லீலை செய்தாயா?' என்று கேட்டதாகவும் அதற்கு குருவாயூரப்பன் தலை அசைத்துச் சம்மதம் தெரிவித்தார் என்றும் கூறப்படுகிறது.





'ஓ பகவானே!...
நான் நூற்றுக்கணக்கான முறை பிறப்பேனாக!
நான் வேண்டுவதெல்லாம், அந்தப் பிறவிகள்
அனைத்திலும் உனக்கு எப்போதும் சேவை
செய்கின்ற பேறு ஒன்றையே பெறுவேனாக!'
என்று சொல்பவன்தான்
உண்மையான பக்தன்.

**- சுவாமி விவேகானந்தர்**

# சத்தியவிரதன் உதத்யன்

ஆதாரம்: ஸ்ரீதேவீபாகவதம்.

1 ஒரு சமயம் வியாசர் நைமிசாரண்யத்தில் தங்கியிருந்தார். அங்கு ஒரு சத்சங்கம் நடைபெற்றது.

மகான்களே! மும்மூர்த்திகள் மற்றுமுள்ள தேவர்களுள், பக்தனிடம் விரைவில் திருப்தியுற்று அருள்பவர் யார் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

ஜமதக்னியே! நீங்கள் கேட்டபடி பக்தனுக்கு அருள்பவள் பராசக்தியான தேவியே.

2

அப்படியானால் லோமசரே, லோகமாதாவின் இந்த அருளை விளக்கும் வரலாறு ஏதேனும் உண்டோ!

மந்திரத்தை பொருள் அறியாமல் உச்சரித்த ஒருவனுக்கும் அன்னை பராசக்தி அருளியுள்ளாள்.

3 லோமசர் அந்தக் கதையை முனிவர்களுக்குக் கூறினார். கோசல தேசத்தில் தேவதத்தர் என்ற அந்தணர் புத்திர பாக்கியம் பெற வேண்டி, தமஸா நதிக்கரையில் கோபிலர் என்பவர் உதவியுடன் யாகம் நடத்தினார்.

கோபிலரே! சாம கானத்தை மிகுந்த கவனத்துடன் ஓதி இந்த புத்ரகாமேஷ்டி யாகத்தை நடத்தித் தர வேண்டும்.

உங்கள் மனோரதம் பூர்த்தியாக நான் முயற்சிக்கிறேன் சுவாமி.

4 கோபிலர் மூச்சைப் பிடித்து 'ரதந்தரம்' என்ற சாமகானம் செய்தபோது, மூச்சு நழுவி ஸ்வரம் மாறிவிட்டது.

கோபிலரே! ஏன் மூர்க்கன் போல் ஸ்வரம் தவறாகக் கூறினீர்கள்? புத்ரகாமேஷ்டி யாகத்திற்குப் பங்கம் வந்துவிட்டதே!

தேவதத்தரே! தளர்வடைந்த என் சரீரத்தால் ஏற்பட்ட குற்றத்திற்கு என்னை மூர்க்கன் என்றீர்கள். உங்களுக்குப் பிறக்கப் போகும் பிள்ளை மூடனாகட்டும்!

சாபத்தைக் கேட்டு தேவதத்தர் வருந்தினார்.

5

மஹா பண்டிதரே! மன்னிக்க வேண்டும், புத்திரனில்லாத சோகத்தால் ஏற்பட்ட தாபம் கணநேரத்தில் என் புத்தியை மழுங்கடித்து விட்டது. தாங்கள் சாப விமோசனம் கூறி அருள வேண்டும்.

தேவதத்தரே! நானும் ஒரு கணத்தில் மதியிழந்து விட்டேன். எல்லாம் நன்மைக்கே. உங்கள் பிள்ளை மூடனாகப் பிறந்தாலும், பிற்காலத்தில் மகா வித்வானாகத் திகழ்வான்.

சிறிது காலத்திற்குப் பிறகு தேவதத்தருக்கு ஒரு மகன் பிறந்தான். உதத்யன் எனப்பட்ட அவனுக்கு எட்டாவது வயதில் உபநயனம் நடந்தது. ஆனாலும் அவன் மூடனாகவே வளர்ந்தான்.

6

இவன் என்ன பிராமணன்? இவனுக்கு உடல்தான் வளர்ந்திருக்கிறது.

வேதப் பயிற்சியற்ற இவனது அறிவு சூன்யமாக இருக்கிறதே!

ஊராரின் நகைப்புக்கு ஆளான உதத்யனை தேவதத்தரும் கோபித்துக் கொண்டார்.

7 அடேய், தினசரி ஸந்தியாவந்தனம் கூட செய்யாமல் இப்படிப் பாவமூட்டைகளைப் பெருக்கிக் கொள்கிறாயே! என் முன் நிற்காதே! எங்காவது போ!

அவமானமடைந்த உதத்யன் வீட்டை விட்டு ஓடி கங்கைக் கரையை அடைந்தான்.

8 உதத்யன் ஒரு குடிசை அமைத்துக் கொண்டான். வேறு எதுவும் தெரியாத அவன் காய், கிழங்கு, பழங்களை உண்பதும், கங்கையில் நீராடுவதையுமே தனது தினசரிச் செயல்களாகக் கொண்டிருந்தான்.



9 சிறிது காலம் சென்றது. அவன் சத்திய விரதத்துடன் யாரிடமும் தேவையின்றிப் பேசாமல், மௌனம் காத்து வந்தான்.




வேதம், பூஜை, ஜபம் எதுவும் தெரியாத போதும், ஊரார் அவனது உண்மைபேசும் விரதத்தைக் கண்டு சத்யவிரதன் என்றே அவனை அழைக்கத் தொடங்கினர்.

10

முற்பிறவியில் நான் புண்ணிய தலத்தில் தவம் செய்யாமலும், சாதுக்களையும், அந்தணர்களையும் பூஜிக்காமலும் இருந்திருப்பேன். அதனால் இப்பொழுது முட்டாளாக உள்ளேன். உத்தமமான மனிதப் பிறவி கிடைத்தும் வீணாகிவிட்டதே. இறைவா, எனக்கு வழிகாட்டு.



இவ்வாறெல்லாம் பலவாறாக எண்ணிக் கொண்டு உதத்யன் பதினான்கு வருடங்களைக் கழித்தான்.



**12** உதத்யன் தன்னையும் அறியாமல் எழுப்பிய 'ஹ்ரு..ஹ்ரு' என்ற ஒலியை தேவி தன் பீஜாக்ஷர உச்சரிப்பாக ஏற்றுக் கொண்டு உதத்யனுக்கு அருளினாள்.



**13** சுவாமி, நீங்கள் உண்மையே பேசுபவர் என்பதை அறிவேன். இங்கே வந்த பன்றி எங்கே? அதைக் கொண்டுதான் என் குடும்பத்தின் பசியை நான் போக்க வேண்டும்.



பன்றி இருக்குமிடத்தைச் சொன்னால் அதன் உயிர் பிரியும்; இல்லையேல் என் சபதத்திற்குப் பங்கம் விளையும். தேவீ, என்ன தர்மசங்கடம் இது. என்னைக் காப்பாற்று.

**14** தேவியின் கருணையால் உதத்யனின் மனதில் மின்னல் போல் தோன்றிய ஒரு சுலோகத்தைக் கூறினான்.

வேடனே, எது பார்க்குமோ அது பேசாது. எது பேசுமோ, அது உடல் நன்மையையே கருத்தில் கொண்டு பார்க்காது. புரிகிறதா?



உதத்யன் கூறியதன் பொருள்: 'கண் பார்க்குமே தவிர பேசாது. வாய் பேசுமே தவிர, பார்க்காது. எவருக்கும் துன்பம் நேராதிருப்பதே சத்தியம்'.

**15** அதைக் கேட்ட அந்த வேடன் பன்றியைப் பற்றிய ஆசையை விட்டொழித்துச் சென்றான். இவ்வாறு உண்மை பேசும் விரதத்தால் உதத்ய மஹரிஷி என்று பெரும் பெயர் பெற்றார். தேவியின் கருணையினால் சத்தியவிரதன் மகா பண்டிதராகவும் விளங்கினார்.



தயாளத் தன்மையுடைய ஜகன்மாதாவைப் பிரார்த்தித்துக் கேட்டால் விரும்புவதைப் பெறுவது எளிது.

- பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்

# பண்டரிபுரம் தோன்றிய வரலாறு

**1** மகாராஷ்டிரத்தில் பிறந்த புண்டலீகன் தன் மனைவியின் துர்போதனையால் தாய் தந்தையரை மதிக்காமல் கொடுமைப்படுத்தினான். ஒரு சமயம் புண்டலீகன் தன் குடும்பத்தோடு காசிக்குப் பயணமானான்.

**2**




**3** அன்று இரவு அவர்கள் குக்குட முனிவரின் ஆசிரமத்தில் தங்கினர். உறக்கம் வராததால் புண்டலீகன் வெளியே வந்து உலாவினான். அப்போது மங்கிய நிலவொளியில் குடிசையின் வாசலை, அழகற்ற தோற்றம் கொண்ட மூன்று பெண்கள் சுத்தம் செய்வதைக் கண்டான்.



**4** சிறிது நேரத்திற்குப் பின் மூன்று தெய்விக மங்கையர் ஆசிரமத்திலிருந்து வெளியேறினர். அவர்களைப் பணிந்தான் புண்டலீகன்.









நீண்ட நேரம் பிரார்த்தனை செய்த பிறகு, தன் பெற்றோரின் பாதங்களில் வீழ்ந்து மன்னிப்பு வேண்டினான் புண்டலீகன். அவர்களும் அவனை மன்னித்தார்கள்.

7

புண்டலீகன் தன் தாய், தந்தையை அழைத்து வந்து, சந்திரபாகா நதியின் கரையில் ஆசிரமம் அமைத்து அவர்களுக்கு அன்புடன் சேவை செய்தான். அவன் மனைவியும் மனம் திருந்தினாள்.

8

புண்டலீகன் தன் பெற்றோருக்குச் செய்யும் சேவை பற்றி அறிந்து ருக்மிணியுடன் ஸ்ரீகிருஷ்ணர் அவனிடம் வந்தார்.




கிருஷ்ணர் உட்காராமல் கல்லின் மேல் இடுப்பில் கை வைத்தபடி நின்றார்.

9 இந்தக் கல்லுக்கு ஒரு வரலாறு உண்டு. சுக்கிரன் மகன் வாஷ்டன் இந்திரனைக் கொன்று அந்தப் பதவியை அடைய விரும்பினான். அதனால் விருத்தாசுரனிடம் அவன் உதவி வேண்டினான். அப்போது அவன் கர்வமாக.....




விருத்தாசுரன் சொன்னபடி செய்துவிட்டான்.

10 சிறிது நேரத்தில், தேவர்கள் ஜூரும்பிகாஸ்திரத்தை ஏவ, அதனால் தாக்குண்ட அசுரன் கொட்டாவிவிட்டான். அப்போது இந்திரன் சிறு உருவாய் வெளிவந்து தப்பித்தான். நாளடைவில் இந்திரனும் விருத்தாசுரனும் சமரசமானார்கள். ஆனால் இந்திரனுக்குப் பகைமை உணர்ச்சி ஒழியவில்லை.



11




இந்திரன் வேண்டுதலால், கடலில் மலையளவு நுரை போன்ற விஷப் பொருள் ஏற்பட்டது. அதை வஜ்ராயுதத்தில் பூசி அசுரனைக் கொன்றான்.

12



**13** அந்தக் கல் கிடந்த இடத்தில்தான் புண்டலீகனின் ஆசிரமம் அமைந்திருந்தது. அந்தக் கல்லின் மீதுதான் புண்டலீகன் ஸ்ரீகிருஷ்ணரை நிற்கச் சொன்னார். இப்போது ஸ்ரீகிருஷ்ணரின் கால் பட்டதால் சாபவிமோசனம் பெற்ற இந்திரன் கல்லிலிருந்து வெளிப்பட்டான்.




**14** பெற்றோர் சேவை முடித்து வந்து புண்டலீகன் ஸ்ரீகிருஷ்ணரை வணங்கினான். மன்னிப்பு வேண்டினான்.




**15** அத்திருத்தலம் புண்டலீகன் பெயரால் 'பண்டரீகபுரம்' என அழைக்கப்பட்டு, பிறகு பண்டரிபுரமானது. 'விட்' என்றால் கல் என்று பொருள். கல்லின் மீது நின்றதால் ஸ்ரீகிருஷ்ணர் விட்டலன் என்று அழைக்கப்பட்டார்.



தாய் தந்தையர் என்ன சாதாரணமானவர்களா? அவர்கள் மனம் மகிழாமல் ஆன்மிகம் எதுவும் கைகூடாது. ஸ்ரீசைதன்ய தேவர் பிரேமைப் பித்து நிலையில் இருந்தவர். ஆனாலும் சந்நியாசம் ஏற்பதற்காகத் தாயாருக்கு எவ்வளவு விளக்கம் கூறிப் புரிய வைத்தார், தெரியுமா?

**– பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்**

[அமுதமொழிகள் தொகுதி 1 பக்கம்-149]



# பக்தர் பரமேஷ்டி



ஆதாரம் : ஹிந்தியில் உள்ள 'பக்த சப்த ரத்னம்' நூல்

**1** சுமார் 400 ஆண்டுகளுக்குமுன் டில்லியில் பரமேஷ்டி என்ற ஒரு தையற்காரர் வாழ்ந்து வந்தார். அவர் ஜகந்நாதரின் நாமசங்கீர்த்தனத்தில் எல்லையில்லா ஆனந்தம் அடைந்து வந்தார்.

டில்லி பாதுஷா சிம்மாசனத்தில் அமரும்போது கால்களை வைக்க இரண்டு உயர்ந்த வகைத் திண்டுகள் தைக்கத் தேர்ந்த தையல்காரரான பரமேஷ்டி அழைக்கப்பட்டார்.

**2**




**3** ஓரிரு நாட்களில் பரமேஷ்டி, மிக அழகான இரண்டு திண்டுகளைத் தயாரித்து விட்டார். ஆனால்...,




பரமேஷ்டி ரதயாத்திரை பற்றி நினைத்தவுடன் மற்ற அனைத்தையும் மறந்தார்.

**4** புரி ரதயாத்திரை காட்சி பரமேஷ்டியின் கண் முன் விரிந்தது.



**5** ஆச்சரியம், பரமேஷ்டியின் பக்திக்காக அவரிடமிருந்து ஜகந்நாதரே திண்டை ஏற்றுக் கொண்டார்.




**6** சட்டென்று அந்த அற்புதக் காட்சி மறைந்தது. பரமேஷ்டி கண் விழித்தார்.



என்ன, நடந்ததெல்லாம் கனவா? நிஜம்போல்தானே இருந்தது! ஜகந்நாதரின் தரிசனம், அவர் என்னிடமிருந்து திண்டைப் பெற்றுக் கொண்டது, எல்லாம் எப்படிக் கனவாக இருக்க முடியும்? இது என்ன? இரண்டு திண்டுகளில் ஒன்றுதானே உள்ளது? அப்படியென்றால் எல்லாமே உண்மைதான்.

அப்போது பாதுஷாவின் காவலர்கள் வந்து பரமேஷ்டியை அழைத்தனர். அவர் ஒரு திண்டை மட்டும் எடுத்துக் கொண்டு அரண்மனைக்குச் சென்றார்.

**7** மிக அழகாகத் திண்டைத் தைத்திருக்கிறாய்! ஆனால் எனக்கு இரண்டல்லவா வேண்டும்.

மன்னியுங்கள் பிரபு. திண்டு மிக நன்றாக இருந்ததால் மற்றொன்றை பூரி ஜகந்நாதரே ஏற்றுக் கொண்டுவிட்டார்.

என்ன உளறுகிறாய்?

பாதுஷா மீண்டும், மீண்டும் கேட்டபோதும் அதே பதிலையே சொன்னார் பரமேஷ்டி.

8

நான் டில்லிக்கே ராஜா. என் பொருளை இன்னொருவர் எப்படி எடுத்துச் செல்ல முடியும்?

ஆம் பாதுஷா. ஜகந்நாதர்தான் மற்றொன்றைப் பெற்றுக் கொண்டார்.

மீண்டும், மீண்டும் பொய் பேசுகிறாயே! காவலாளி, இவனைச் சிறையில் அடை.

9

நள்ளிரவு. புரி ஜகந்நாதர் சிறையில் தோன்றி, காவலர்களை மயக்கத்தில் ஆழ்த்திவிட்டு உள்ளே வந்தார்.

பரமேஷ்டி, பரமேஷ்டி...

இவ்வளவு இனிமையான குரலில் என்னை அழைப்பது யார்? ஆ, எம்பெருமான் ஜகந்நாதனா?

10

பரமேஷ்டி! அஞ்சாதே. நான் இருக்கும்போது என் பக்தர்கள் எவரும் அஞ்சத் தேவையில்லை.

11

அன்றிரவு பாதுஷா உறங்கும்போது அவர் கன்னத்தில் யாரோ ஓங்கி அறைவதை உணர்ந்தார்.

12

திடுக்கிட்டுப் படுக்கையில் அமர்ந்திருக்கும் பாதுஷா.

ஆ, என் அரண்மனையில் கட்டுக்காவல்களை மீறி வந்து என்னை அடிக்க யாருக்குத் துணிவு வந்தது? என்றாலும் இந்த அடியில் ஏதோ ஓர் இதம் இருக்கிறதே!

**13** பாதுஷா தன் மந்திரிகளுடன் நிதானமாகக் கலந்தாலோசித்தார்.

நேற்று தண்டனை பெற்ற அந்தத் தையல்காரன் ஏதாவது செய்திருப்பானோ?

எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. வாருங்கள், சிறைக்குச் சென்று பார்க்கலாம்.

நம் அரண்மனை காவல்களை மீறி இங்கு யாரும் வர முடியாது பாதுஷா.

**14** அப்போது சிறைக்கதவுகள் திறந்து கிடந்தன. பரமேஷ்டியின் கட்டுக்கள் அவிழ்க்கப்பட்டு அவர் கண்களை மூடி நாம சங்கீர்த்தனம் செய்தபடி தன்னை மறந்து இருந்தார்.

**15** பரமேஷ்டியின் பக்தியைப் பார்த்த பாதுஷா, அவர் பேசியது சத்தியமே என்பதை நம்பினார். தெய்வக் குற்றம் நிகழ்ந்துவிட்டது என்பதையும் உணர்ந்தவராக....,




**16** பாதுஷா பரமேஷ்டிக்கு ஆடை அணிகள் அணிவித்து அவரை யானை மீது அமர வைத்து நகர்வலம் வந்து கௌரவித்தார்.



உண்மையான பக்தனின் அன்பு கொழுந்துவிட்டு எரியும் அன்புப் பித்து - இதன் முன்னிலையில் மற்ற எல்லாம் அப்படியே மறைந்து விடுகின்றன. பிரபஞ்சமே அன்பு மயம், அன்புமயமானது மட்டுமே என்றே பக்தன் காண்கிறான். அவனுக்கு அப்படித்தான் தெரிகிறது. இத்தகைய பராபக்தியைப் பெற்ற பக்தன் அழிவிலா வாழ்வு பெறுகிறான்; அழிவிலா ஆனந்தம் அடைகிறான். இந்தத் தெய்விக அன்புப் பித்துதான் நம்மிடமுள்ள உலகியல் நோயிலிருந்து நம்மைக் குணப்படுத்த முடியும். நமது பற்றும் சுயநலமும் மறைந்துவிடும். நாம் இறைவனை அணுகி அவனுக்கு வெகு அருகில் வந்துவிடுவோம். முன்பு தன்னிடம் குடி கொண்டிருந்த வீண் ஆசைகளை எல்லாம் இப்போது பக்தன் எறிந்துவிட்டான்.

**–சுவாமி விவேகானந்தர்**

# உத்தமகுரு விவேகானந்தர்



1 சுவாமி விவேகானந்தர் மேலைநாட்டிலும், நமது நாட்டிலும் பல சொற்பொழிவுகளை ஆற்றிய பிறகு, பேலூரில் ராமகிருஷ்ண மிஷனைத் தோற்றுவித் திருந்த காலகட்டம்.




2




3 அன்று சுவாமிஜி தமது அறையில் இருந்தார். வந்த கடிதங்களைப் பிரித்துக் கொண்டிருந்தார் அவரது சீடர் பிரம்மசாரி சுதிர். அப்போது ஒரு வாலிபன் வந்தான்.




4



கங்கா ஸ்நானம் செய்தால்தான் முக்தி என்றெல்லாம் மக்கள் கூறுவதை நீங்கள் ஏற்கவில்லை அல்லவா?

இல்லை தம்பி! இன்றும் நான் கங்கையில் நீராடுகிறேன். அது முடியாவிட்டால், கங்கை நீரைச் சிறிதாவது தலையில் தெளித்துக் கொள்வேன்.

சுவாமிஜி இவ்வாறு கூறியதும் அந்த வாலிபன் தனது அறியாமை நீங்கிச் சென்றான்.


5
அருமை, சுவாமிஜி எப்படி பதில் கூறி, அந்த இளைஞனைத் திருத்தினார்! சுவாமிஜிக்குத் தான் கங்கை மீது எவ்வளவு பக்தி!


6
அடுத்து, வயதான ஒரு பிராமணர் வந்து சுவாமிஜியை வீழ்ந்து வணங்கினார். அவர் கை கட்டி, வாய்பொத்தி...
சுவாமிஜி, நமது இந்து தர்மத்தை உலகெங்கும் பிரசாரம் செய்து பெரும் பேறு பெற்றுவிட்டீர்கள். நீங்கள் வாழ்க!
ஐயா, இந்து தர்மம் என்று நீங்கள் எதைப் புரிந்துள்ளீர்கள்?


7
காசியில் இறந்தால் முக்தி நிச்சயம் கிட்டும் என்றெல்லாம் நீங்கள் உலகெங்கும் பிரச்சாரம் செய்தீர்களே?


இல்லை ஐயா, ஞானம் அடைந்தால்தான் ஒருவருக்கு முக்தி கிடைக்கும். ஆதலால் நீங்கள் எப்போதும் ஞான விசாரம் செய்யுங்கள். நானும் அதைத்தான் செய்கிறேன்.


8
என்ன இது! சுவாமிஜி யார் நம்பிக்கையையும் குலைப்பவர் இல்லையே! இளைஞன் சொன்னது உண்மைதானே - இந்து மதத்திற்குப் புது ரத்தம் பாய்ச்சியவர்தான் சுவாமிஜி! அதுபோல், சுவாமிஜி இந்து தர்மத்தைப் பிரசாரம் செய்தவராயிற்றே! இவர் ஏன் பிராமணரிடம் இப்படிச் சொன்னார்? இரண்டும் ஒன்றுக்கு ஒன்று முரணா?


9
சீடரின் குழப்பத்தைப் புரிந்து கொண்ட சுவாமிஜி...
என்ன மகனே! ஒரே சிந்தனையில் ஆழ்ந்துவிட்டாய்?

**10** ஒன்றுமில்லை சுவாமிஜி!
வந்து சென்ற இருவருக்கும்
இரண்டு விதமாகப் போதித்
தீர்கள். அது எனக்குப்
புரியவில்லை.

யாருக்கு எது தேவையோ,
அதுதான் கிடைக்கும்.
மேலும் முழுவதுமாகப் புரிந்து
கொள்ளாமல் எதையும் ஓர்
எல்லைக்குள் அடைப்பது
சரியல்ல!

**11** ஆம், வந்த இருவரும் சுவாமிஜி
வாழ்நாள் முழுவதும் ஆற்றிய பணி
களின் விஸ்தாரத்தை - பரிமாணத்தைக்
குறைத்து மதிப்பிட்டார்கள். அதைத்தான்
சுவாமிஜி அவர்களுக்குப் புரிய
வைத்தார்.

**12** அப்படியென்றால்,
சுவாமிஜி என் முக்திக்கான
மார்க்கம் என்ன?

குருவுக்குச் சேவை செய்
மகனே. உனக்கு முக்தி
கிடைக்கும்.

பிறகு சுவாமிஜி சிறிது ஓய்வு
எடுத்துக் கொண்டார். அவருக்கு
பாதசேவை செய்தார் பிரம்மசாரி சுதிர்.

**13** சுவாமிஜி, குருசேவையால்தான் முக்தி
சாத்தியம் என்றீர்கள். அப்படியென்றால்
அடியேனின் சேவையைத் தாங்கள் என்றும்
ஏற்றுக்கொள்ள வேண்டும்.

**14** மகனே, குருசேவை
என்றால் அவரது
உடலுக்கு மட்டும் ஆற்றும்
சேவையல்ல. குரு எந்தப்
பணியை ஏற்றுத் தன்
உயிரைக் கொடுத்து
உழைத்தாரோ, அதற்காகச்
சீடனும் உழைப்பதுதான்
உண்மையான குருசேவை.
குருதேவர் அதை உனக்கு
அருளட்டும்.

**15**



சுதிர் பிற்காலத்தில் ராமகிருஷ்ண
மடம் - மிஷனின் மிகச் சிறந்த
துறவிகளுள் ஒருவரானார்.
சுவாமி சுத்தானந்தர் என்ற
நாமத்தில் மிஷனின் பொதுச்
செயலாளராகவும் பொதுத்
தலைவராகவும் திறம்பட சேவை
புரிந்தார்.

பிறர் எதை வேண்டுமானாலும் நினைத்துக்
கொள்ளட்டும், செய்து கொள்ளட்டும்;
நீ தூய்மை, ஒழுக்கம், பக்தி இவற்றிலிருந்து
விலகாதே... இறைவனிடம் அன்பு
கொண்டுள்ள யாரும் மாயாஜாலங்களைக்
கண்டு பயப்பட வேண்டாம். மண்ணிலும்
சரி, விண்ணிலும் சரி, மிக உயர்ந்த மிகவும்
தெய்விகமான ஆற்றல் புனிதமே.

\- சுவாமி விவேகானந்தர்

# ஸ்ரீராமதரிசனம் கேட்ட அக்பர்






2 துளசிதாசரின் மகிமையைக் கேள்விப்பட்டு அக்பர் அவரைத் தமது அரண்மனைக்கு அழைத்துக் கௌரவித்தார்.








5 பூமியை ஆள்வதிலும் போகங்களை அனுபவிப்பதிலும் சக்கரவர்த்தியான அக்பருக்கு ராம தரிசனம் பெறத் தேவையான தகுதிகளைக் கூறினார் துளசிதாசர்.




6 ராம தரிசனத்திற்கான தகுதிகளை துளசிதாசர் கூறக் கூற அக்பருக்கு ஏமாற்றமாக இருந்தது; கோபம் வந்தது. அதிகாரத்தால் ராமரைக் காட்டுமாறு வலியுறுத்தினார்.







8 சிறையில் துளசிதாசர் சுதந்திரமாக ராமபஜனை செய்ய முடியாமல் தவித்தார். அப்போது பக்தர்களுக்குப் பலம் அளிக்கும் அனுமன் அவருக்குத் தரிசனமளித்தார்.



9 மறுநாள், அக்பர் உறங்கி கொண்டிருந்த அந்தப்புரத்தில் இடி விழுந்தது போன்ற பெரிய சத்தம் கேட்டது. பத்து பெரிய குரங்குகள் அங்குமிங்கும் ஓடிக் குதித்து, மாடங்களைச் சிதைத்தன. திடுக்கிட்டு எழுந்த அக்பர் கோபமாக...







11 ரகசிய அறைக்கு வந்த மந்திரிகளில் ஒருவர் ராம பக்தர்.






12 அரசே, தங்கள் சாஹிபா பேகம் அழகு பார்க்கும் சீமைக் கண்ணாடியையும் குரங்குகள் சுக்கு நூறாக்கிவிட்டன.

ஆ! சீமைக் கண்ணாடி நொறுங்கி விட்டதா!

அக்பர் தன் ராணியே தொலைந்துவிட்டது போல் உணர்ந்தார். அவரது ரத்தம் கொதித்தது. துளசிதாசரை அவசரமாக அழைத்து வர உத்தரவிட்டார்.

13 அரசவைக்கு வந்த துளசிதாசரிடம் நடந்த விபரங்களைப் பிரதான மந்திரி கூறினார்.















துளசிதாசரின் தெய்வ பலத்தின் முன்பு தன் அதிகார பலம் அற்பமாகத் தோன்றுவதை உணர்ந்தார் அக்பர். ஆச்சரியமாக, வந்த குரங்குகளும் எப்படியோ மறைந்து விட்டன.

''வெறும் கண்ணாடியில் எந்த உருவமும் பதிவதில்லை. ஆனால் தக்க ரசாயனப் பொருளை அந்தக் கண்ணாடியில் பூசிய பிறகு படங்களைப் பதிக்கலாம். அதுபோல் பக்தியாகிய ரசாயனப் பொருளை இதயத்தின் மீது தடவினால் அப்போது இறைவனின் திருவுருவத்தை அதில் பதியச் செய்யலாம்.'' - பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்





# திருநந்திதேவர்

ஆதாரம் : பூசை ச.அருணவசந்தன் எழுதிய திருநந்திதேவர்

**1** திருக்கயிலையில் சிவசந்நிதியில் தொண்டு புரிந்து கொண்டிருந்தவர் வீதஹவ்யர். ஈசன் ஆணையால் ஒரு சமயம் அவர் யமனுடன் நரகத்தைப் பார்த்து வந்தபோது வழியில் தெரிந்த ஒரு கல் குன்றைப் பற்றி விசாரித்தார்.




**2** நரகத்தில் ஓரிடத்தில் சில பெரியவர்கள் பசி, தாகத்தால் அவதிப்படுவதை வீதஹவ்யர் பார்த்தார். அவர்களிடம் சென்று காரணத்தை விசாரித்தார்.




நரகில் இடர்பட்டு வந்த பெரியவர்கள் தமது முன்னோர்கள் என்பதை வீதஹவ்யர் புரிந்து கொண்டார். பிறகு அவர் மீண்டும் கயிலை திரும்பினார்.

**3** எம்பெருமானே, என் பாவ மலையைக் கரைக்கவும் என் முன்னோர்களைக் கடைத்தேற்ற சத்புத்திரனைப் பெறவும் நான் பூலோகம் செல்ல எனக்கு அருள்புரியுங்கள்.




அடுத்த பிறவியில் வீதஹவ்யர் திருவையாற்றில் அந்தணர் குலத்தில் பிறந்தார். விவரம் தெரிந்த நாள்முதல் கல்லை உணவாக உண்டார். அதனால் சிலாதர் எனும் பெயர் பெற்றார். அவரது பாவமும் தொலைந்தது.

**4** சிலாதர் சித்திரவதி என்னும் உத்தமியை மணந்தார்.



**5** சிலாதரின் தவத்தை மெச்சி சிவபெருமான் அவருக்குக் காட்சி தந்தார்.




**6** சிலாதர் யாக பூமியின் மீது பொற்கொழு பூட்டிய கலப்பையால் உழுதபோது ஒரு தங்கப்பெட்டி வெளிப்பட்டது. அப்போது பூ மழை பொழிய, வேதவொலி முழங்க, அமர துந்துமி ஒலித்தது. பெட்டியினுள் அணிகலன்கள் அணிந்த ஆண் குழந்தை இருந்தது.






**7** ஜபேஸ்வரரின் ஏழாம் ஆண்டு நிறைவு விழா கோலாகலமாக நடைபெற்றது. சிலாதரின் அழைப்பின் பேரில் மித்திரன், வருணன் ஆகிய தேவர்களும் கலந்து கொண்டனர்! தேவர்கள் அங்கு தயங்கி நிற்பதைக் கண்டார் சிலாதர்.




**8** ஜபேஸ்வரன் தன் அற்ப ஆயுளைப் பற்றி அறியாவண்ணம் சிலாதரும் அவரது மனைவியும் அவனைச் சீராட்டி வளர்த்தனர். ஆனால் ஒரு நாள்....



9

ஐயாரப்பன் ஆலயத்தை அடைந்து, அரிஅயன் தீர்த்தத்தில் மூழ்கி ஜபேஸ்வரன் பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபித்தான். நீர் வாழ் ஜந்துக்கள் அவனைக் கடித்து உதிரத்தை உறிஞ்சின. ஆனாலும் சித்தத்தை சிவன்பால் வைத்துத் தவம் செய்தான்.



10

சில காலம் கழித்து அவனது ஒப்பற்ற தவத்தால் மகிழ்ந்த சிவபெருமான் உமையுடன் அவன்முன் தோன்றி அவனைத் தடவிக் கொடுத்தார். உடனே அவன் உடல் பொன்போல் ஒளிர்ந்தது.




11

சிவபெருமான் ஜபேஸ்வரனுக்கு பஞ்ச நதிகளையும் வரவழைத்து அபிஷேகம் செய்தார்.




12



**13** தேவர்களே! இந்த நந்தீசனைச் சகல கணங்களுக்கும் அதிபனாக நியமித்தோம். விநாயகன், முருகன்போல் இவனும் எனக்கு மகன். சிவஞானத்தைப் போதிக்க இவனே ஆசாரியன்.




**14** ஈசனும் உமையும் திருவையாற்றில் வியாக்ரபாதரின் புதல்வி சுயம்பிரபை என்ற கன்னிகையை திருநந்திதேவருக்கு மணம் செய்வித்தனர். அப்போது அரம்பையர் ஆடினர், நாரதரும் மற்ற முனிவர்களும் பாடினர், துந்துமி முழங்கியது.



**15** திருமணம் முடிந்த பின்பு சிவபெருமானும், உமாதேவியும் நந்தியெம்பெருமானையும், சுயம்பிரபை தேவியையும் அழைத்துக் கொண்டு திருக்கயிலைக்கு ஏகினர்.

நந்தீசா, விதிப்படி உன் பூலோக வாழ்க்கை நிறைவுற்றது. உன் தவத்தால் உன் குல முன்னோர்களும் வீடுபேறு பெற்றார்கள். இனி கயிலையில் எம்முடன் நிரந்தர வாசம் செய்வாய்.



இப்படியாக நந்தீசர் கைலாயத்தில் நித்தியவாசம் செய்கிறார்.



நீர் உறையும்போது
பனிக்கட்டியாகிறது. அது போல,
சர்வேசுவரனின் நிதர்சன ரூபமானது,
உருவமற்று எங்கும் நிறைந்துள்ள
பிரம்மத்தின் கட்டியாகிய
உருவமாகும். அதை உருவெடுத்து
வந்த சச்சிதானந்தம் எனலாம்.
நீரில் உண்டாகும் பனிக்கட்டியானது நீரைத் தவிர
வேறல்ல; அது நீரிலேயே இருந்து பின்னர் உருகி
நீராகவே ஆகிறது. அதுபோல ஈசுவரன்
பிரம்மத்தைத் தவிர வேறல்ல.
அவன் பிரம்மத்திலிருந்து தோன்றி அதிலேயே
நிலைத்திருந்து கடைசியில் அதிலேயே கலந்து
மறைகிறான்.

\- பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்



# ஸ்ரீஞானசம்பந்தர்

1 சுப்ரமணியப் பிள்ளை - மீனாட்சி அம்மை எனும் பக்த தம்பதிகள் ஸ்ரீவில்லிபுத்தூரில் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்கு ஓர் அழகான ஆண் குழந்தை பிறந்தது.







ஸ்ரீவில்லிபுத்தூரில் சிறு தேர் உருட்டி விளையாடிச் சீரும் சிறப்புமாக வளர்ந்து வந்தான் ஞானசம்பந்தன். ஒரு நாள் சுப்ரமணியம் மதுரைக்குப் புறப்பட்டார்.




5 சொக்கநாதரைத் தரிசித்த சுப்ரமண்யம் ஊர் திரும்ப ஆயத்தமானார்.







பெற்றோர் எவ்வளவோ கூறியும் சிறுவன் மனம் மாறவில்லை. பிறகு மதுரையில் தங்கி ஈசனைத் தொழுது வந்த ஞானசம்பந்தர் சிவபூஜை செய்ய ஏங்கினார். அன்றிரவு...

7 ஞானசம்பந்தா, பொற்றாமரைக் குளத்தின் தென்கிழக்கே உள்ள எமது லிங்க உருவை எடுத்து பூஜை செய்.



8




9 ஞானசம்பந்தர் ஈசனே தமக்கு குருவாய் வர வேண்டும் என மனமுருகி வேண்டினார். அன்றிரவு...



10




11 அதே சமயம் ஈசன் ஞானப்பிரகாசர் கனவிலும் தோன்றி...





ஞானப்பிரகாசா! உன்னை நாடி வரும் ஞானசம்பந்தனுக்கு குருவாய் விளங்கி வழிகாட்டு.







14 ஓர் இரவு குரு வீடு திரும்பும் போது ஞான சம்பந்தர் விளக்கு ஏந்தி அவருடன் சென்றார்.




இவ்வாறு கூறிவிட்டு குரு உள்ளே சென்றார். திரும்பி வரவில்லை.

15 இரவு தொடர்ந்தது. மழை பெய்ய ஆரம்பித்தது. குருநாதர் சொல்லை ஆணையாக ஏற்ற ஞானசம்பந்தர் அங்கேயே நின்றார்.



இரவு முழுவதும் மழை பெய்தது. ஆனால், ஆச்சரியம்! ஞானசம்பந்தர் மற்றும் அவர் கைதீபத்தின் அருகிலும் மழை நெருங்கவில்லை. ஞானசம்பந்தரின் தவம் தோன்றாத் தடுப்பாய்க் காத்து நின்றது.

16 இந்தக் காட்சியைக் கண்டு வியந்த குருநாதரின் மனைவி அவரை அழைத்து வந்தார்.



**17** தருமபுரத்தில் அகஸ்தியர் வரவேற்று ஆசி கூறினார்.




**18** ஞானசம்பந்தரின் தவமேன்மை காரணமாக தருமபுரம் தழைத்தது. அங்கு பசுவும் புலியும் கூட ஒன்றாக நீர் அருந்தின.



**19**




**20** குரு ஞானசம்பந்தர் தமது சீடர் ஆனந்தபரவசரை பீடாதிபதியாக்கி விட்டு சிவத்தில் ஒடுங்கினார்.
ஆனால் சீடர் ஆனந்தபரவசர் தம் குருவைத் தொடர்ந்து தாமும் தவத்தில் இருந்து சிவத்தில் ஒடுங்கினார்.



**21** சீடர்கள் குருமுதல்வரின் ஜீவசமாதியில் வந்து...




**22** நாற்பது ஆண்டுகள் கழிந்த நிலையில் ஒடுக்கத்தினின்று மீண்டும் வந்து சச்சிதானந்தரை 3-வது குருவாக பீடமேற்றிய பின் மீண்டும் சிவத்தில் ஒடுங்கினார் குருஞானசம்பந்தர்.





சமுத்திரத்தின் கீழுள்ள காந்தக்கல்மலை, நீரின் மீது போகும் கப்பலை இழுத்து, அதன் உள்ளிருக்கும் இரும்பு ஆணிகளையெல்லாம் பிடுங்கி, பலகைகளைப் பிரித்துக் கப்பலை மூழ்கச் செய்கின்றது. அதுபோல, ஜீவாத்மாவானது பரமாத்மாவாகிய தெய்விகக் காந்தத்தால் இழுக்கப்படும்போது அந்தக் காந்த சக்தியானது மனிதனின் சுயநலத்தையும் ஜீவபோதத்தையும் ஒரு நொடிப்போதில் மாய்த்து ஆத்மாவைக் கடவுளின் எல்லையில்லாத பிரேமையாகிய ஸாகரத்தில் ஆழ்த்துகின்றது.

-பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்



# கலியுகத்தில் ஒரு யசோதை



**1** அகோரமணி ஓர் ஏழை அந்தண இளம் விதவை. மிகச் சிறந்த கிருஷ்ண பக்தை. கங்கைக்கரையில் கொல்கத்தா அருகில் காமார்ஹாட்டி என்ற இடத்தில் வாழ்ந்து வந்தார். பாலகிருஷ்ணன் அவருக்கு அடிக்கடி காட்சி அளித்து வந்தார். அவரைப் பொறுத்தவரை பாலகிருஷ் ணன் உயிரோடு உலவும் ஒரு குழந்தை.



**2** ஒரு நாள் அகோரமணி குழந்தை கண்ணனுக்கு உணவு ஊட்டி உறங்கச் செய்தார். கண்ணனும் அவரும் தரையில் படுத்திருந்தனர். கிருஷ்ணன் திடீரென முரண்டு பிடித்தான்.




**3** கண்ணனுக்கு அகோரமணி தினமும் நீராட்டுவது, உணவு ஊட்டுவது, உறங்கச் செய்வது போன்ற பல பணிவிடைகளைச் செய்து வந்தார். பால்ய வயது முதல் வயதான காலம் வரை அவர் பாலகிருஷ்ணனுடனேயே உணர்வுபூர்வமாக வாழ்ந்து வந்தார். அதனால் பக்தர்கள் அவரை 'கோபாலின் தாய்' (கோபாலேர் மா) என்றே அழைத்தனர்.

**4** பல ஆண்டுகள் இவ்வாறு கழிந்தன. வயதான காலத்தில் ஒருமுறை அகோரமணியும் மற்றொரு பக்தையும் தக்ஷிணேசுவர காளி கோயிலில் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசித்து உரையாடினர்.






6 ஒரு முறை அகோரமணி ஸ்ரீராமகிருஷ்ணருக்காகக் கடையிலிருந்து இனிப்பு வாங்கி வந்திருந்தார். குருதேவர் அதை ஏற்பாரோ என்று தயங்கியபடியே அவர்முன் வைத்தார். ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணர் மிக ஆவலுடன் அதை எடுத்து வேகமாக உண்டார். பின் ஒரு குழந்தை போல் அவர்...




7 குருதேவர் தம் கையால் உணவருந்துவதில் காட்டிய பிரியத்தை முதலில் அகோரமணி தவறாகப் புரிந்து கொண்டார். என்றாலும் குருதேவர் பொழிந்த அன்பில் அவர் எல்லையற்ற ஆனந்தம் பெற்றார்.




ஒருமுறை அகோரமணியின் அழைப்பிற்கிணங்க ஸ்ரீராமகிருஷ்ணர் காமார்ஹாட்டி ராதாகிருஷ்ணர் கோவிலுக்கு விஜயம் செய்தார். அவரது பஜனைப் பாடல்களைக் கேட்ட அனைவரும் இறையுணர்வு தூண்டப்பட்டனர்.




அன்றிரவு அகோரமணி ஜபித்துக் கொண்டிருந்தபோது ஸ்ரீராமகிருஷ்ணர் தம் அருகில் அமர்ந்திருப்பதைக் கண்டு வியந்தார். பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் பாலகோபாலனாக மாறி இரவு முழுவதும் அகோரமணியுடன் பலவாறு விளையாடினார்.

10

அந்த அனுபவத்தினால் மெய்மறந்து அகோரமணி பால் ஏடு, வெண்ணெய் முதலியவற்றை எடுத்துக் கொண்டு கோபாலனைத் தோளில் சுமந்தபடி, 'கோபாலா!' என உரக்கக் கூவிக் கொண்டே தட்சிணேசுவரத்துக்கு ஓடிச் சென்றார்.



11

அங்கே, ஸ்ரீராமகிருஷ்ணர் குழந்தைபோல் தவழ்ந்து அவர் மடியில் அமர்ந்தார். அகோரமணி தான் கொண்டு வந்த இனிப்புகளைப் பக்திக் கண்ணீருடன் அவருக்கு ஊட்டி மகிழ்ந்தார்.




12

இவ்வாறு அகோரமணி தாம் பெற்ற உயர் ஆன்மிக அனுபவத்தில் மூழ்கிவிட்டார். பிரியமான கோபாலன் ஸ்ரீராமகிருஷ்ணர் உடலில் நுழைவதும் வெளிவருவதுமாக அகோரமணி கண்டார். அவருக்கு குருதேவர் தாய்க்கு மகன் செய்வதைப் போல் பல சேவைகளைச் செய்து உலக நினைவுக்கு வரச் செய்தார்.



14 ஒருமுறை அகோர மணி தாம் பெற்ற இறைக்காட்சிகளையும் இறையனுபவங்களையும் நரேந்திரருக்கு (சுவாமி விவேகானந்தர்) விளக்கினார். நரேந்திரர் ஆரம்ப காலத்தில் உருவக் கடவுளை நம்பாதவர், என்றாலும் அவர் அகோரமணியின் அனுபவங்களைக் கேட்டு நெகிழ்ந்து கண்ணீர் மல்கினார்.



15




16



ஸ்ரீராமகிருஷ்ணர் மறைவிற்குப் பின் ஒருமுறை அவர் ஜகந்நாதர் தேர்த்திருவிழாவில் கலந்து கொண்டார். அப்போது அவருக்குத் தேரில் வந்து கொண்டிருக்கும் ஜகந்நாதருக்குப் பதிலாக பாலகோபாலன் தெரிந்தார். அங்கே கூடியிருந்த பக்தர் வெள்ளத்திலும் திரும்பிய திசையெல்லாம் கோபாலனைக் கண்ட விஸ்வரூப தரிசனம் அது.

17 விஸ்வரூப தரிசனத்திற்குப் பிறகும் கோபாலனின் தாய் ஜபம் செய்தார். ஜப பலன் முழுவதையும் ஸ்ரீராமகிருஷ்ணருக்கே அர்ப்பணித்தார். ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடர்கள் அவரிடம் மிகுந்த மரியாதை கொண்டிருந்தார்கள். சகோதரி நிவேதிதை அவருக்கு இறுதிக் காலத்தில் சேவை செய்தார்(படம்.) 8.7.1906-அன்று கோபாலனின் தாய், குருதேவரின் திருவடிகளை அடைந்தார்.





# அகங்காரம் துறந்த அரசன்

ஸ்ரீரமணர் கூறிய ஒரு கதையின் அடிப்படையில் எழுதப்பட்டது.

**1** அழகாபுரி மன்னர் அழகேசன் வீரம் மிகுந்தவர். அவர் தன் நாட்டைக் கண்ணைப் போல் காத்து வந்தார். மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர்.



**2** அண்டை நாட்டு மன்னன் அதிதீரன் அழகாபுரியின் செல்வத்தைக் கண்டு பொறாமையுடன் பலமுறை போரிட்டுத் தோற்றான். கடைசிப் போரின்போது...

அதிதீரா, ஒவ்வொரு முறையும் நீ அதே தவறு செய் கிறாய். என் நாட்டைக் கைப்பற்றும் எண்ணத்தை விட்டுவிடு. இல்லையேல் நீ உன் உயிரை இழப்பாய்.



அதிதீரன் மனப்பூர்வமாக மன்னிப்பு வேண்டினான்.

**3** ஆஹா, என் நாடு எனது ஆட்சியில் சொர்க்கபுரியாக உள்ளது. மற்ற அரசர்கள் பொறாமை கொண்டு மறுகும்படி இது விளங்க எனது அரசாட்சியே காரணம் அல்லவா!



4 அழகேசன் ஒரு நாள் இரவு மாறு வேடத்தில் நகரச் சோதனை நடத்தியபோது ஒரு கதாகாலட்சேப மண்டபத்தில் நுழைந்தார்.




5 'நானே வெற்றி வீரன்; எனது ஆட்சி' என்ற எண்ணமெல்லாம் ஒழிந்தால்தான் எனக்கு ஆன்ம முன்னேற்றம் வருமோ?



6 மறுநாள் மன்னர் ஒரு முடிவுடன் அதிதீரனுக்குத் தன்னைக் காண வரும்படி ஓலை அனுப்பினார்.




7 தாங்கள் தங்கள் தாய்நாட்டைத் துறக்கக் காரணம் என்ன அரசே?




அழகேசன் தன் நாட்டை அதிதீரனுக்குச் சாசனம் செய்து கொடுத்துவிட்டுக் காட்டிற்குச் சென்றார்.

8 அழகேசன் பல ஆண்டுகள் காட்டில் எளிய வாழ்க்கை வாழ்ந்து தவம் செய்தார். ஒரு நாள்...



9 அழகேசன் தன் தலைநகரில் பிச்சை எடுத்தார். குடிமக்கள் அவரை அடையாளம் கண்டுகொண்டனர்.




10 அப்போது அங்கு வந்த மன்னன் அதிதீரன், அழகேசனைக் கண்டான்.




11 அப்போது ஓர் அதிசயம். அங்கே இன்னொரு நாட்டின் பட்டத்து யானை பிச்சைக்காரனாக இருந்த மன்னரின் கழுத்தில் மாலை அணிவித்தது.




12




13 அழகேசன் வேறு வழியின்றி மீண்டும் ராஜ்ய பாரத்தை ஏற்றான். ஆனால் அரசாளும் முறை வேறுபட்டது.






மழை நீர் மேட்டு நிலத்தில் தங்கி நிற்பதில்லை. பள்ளமான இடத்துக்கு ஓடிவந்து விடுகிறது. அதுபோல், ஈசுவர கிருபையானது தற்பெருமையும், கர்வமுமுள்ளவர்களுடைய உள்ளத்தில் தங்கி நிற்பதில்லை. பணிவுள்ளவர்களின் உள்ளத்தில்தான் தங்கி நிற்கும். – பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்

# தீது வந்தாலும் திடம் பெறும் பக்தர்கள்

ஆதாரம் :மஹாபாரதம், வனபர்வத்தில் திரௌபதி ஹரணபர்வம் அத்தியாயம் 282



1

பாண்டவர்கள் 12 வருட வனவாசத்தில் இருந்தனர். துரியோதனன் அவர்களை அழிக்கும் தீய எண்ணத்துடனேயே எப்போதும் இருந்து வந்தான். அன்று அவனது அரண்மனைக்கு துர்வாச முனிவர் வந்திருந்தார். அவரையும் அவரது எண்ணற்ற சீடர்களையும் நன்கு உபசரித்தான்.



2

மிகவும் திருப்தி அடைந்த துர்வாசர்...




3

துரியோதனனின் தீய நோக்கம் துர்வாசருக்குப் புரிந்தது. இருந்தாலும் ஸ்ரீகிருஷ்ண பக்தர்களான பாண்டவர்களை வனத்தில் காணச் சென்றார்.




எப்படி இவர்களால் இத்தனை பேருக்கும் உணவளிக்க முடியும் என்று துர்வாசரே சந்தேகமுற்றார்.

4

குடிசைக்குள் திரௌபதி தருமனிடம்...,




5




6

உடனே திரௌபதி கண்மூடிப் பிரார்த்தித்தாள்.




7

துவாரகையில் கண்ணனின் மாளிகை. ஊஞ்சலிலிருந்து திடீரென்று அவர் எழுந்து புறப்பட்டார்.



8 திடீரென்று கிருஷ்ணன் திரௌபதியின் முன்பு போய் நின்றார்.




9




10 அட்சயப் பாத்திரத்தில் ஒரு சிறு உணவுப் பருக்கை இருந்தது.




இவ்வாறு கூறி கண்ணன் அதை உண்டு சிரித்தான்.

11 விஸ்வரூபியான ஸ்ரீகிருஷ்ணர் அந்தப் பருக்கையை உண்டதும் துர்வாசர் மற்றும் அவரது சீடர்கள் அனைவரது வயிறுகளும் நிரம்பிவிட்டன.

12



13 பிறகு கிருஷ்ணர் கூற, சகாதேவன் ரிஷிகளை அழைத்து வரச் சென்றார். நீராடி முடிந்ததும் முனிவர்கள் மிகவும் சிரமப்பட்டார்கள்.




14




15 கிருஷ்ணர் அழைக்கிறார் என்றதும் துர்வாசர் சற்று நடுங்கினார். பிறகு அவரும் சீடர்களும் மிகுந்த சிரமத்துடன் வயிறு நிறைந்து நடக்க முடியாமல் நடந்து கிருஷ்ணரைச் சந்தித்தார்கள்.

16




கண்ணன் அவர்கள் அனைவரையும் மன்னித்து ஆசிர்வதித்தார்.

17




துர்வாசர் பாண்டவர்களை வாழ்த்திவிட்டு திருப்தியோடு சென்றார். அவரது கோபம் துரியோதனனின் புண்ணியத்தைக் குறைத்தது.

18




உடலால் அனுபவிக்கும் துன்பங்களும் இன்பங்களும் எப்படிப்பட்டவையாயினும் உண்மையான பக்தனுக்கு ஞானம், பக்தி இவற்றின் மகிமையும் சக்தியும் ஒருபோதும் குறைவதில்லை. பாண்டவர்கள் அனுபவித்த கஷ்டங்கள் எவ்வளவு கொடியனவாக இருந்தன! என்றாலும், ஒரு நிமிடமும் அவர்களுடைய ஞானஒளி மங்கியதில்லை.

- பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்



# தாய்மார்களுக்கு ஸ்ரீராமரின் உபதேசம்

மூலம்: திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்

1 ராவண சம்ஹாரத்திற்குப் பிறகு ரகுராமர் அயோத்தியை அரசாண்டு வந்தார். ஒரு நாள் கைகேயி ஸ்ரீராமரிடம்....




2




3




4
அம்மா! தாங்கள் இந்த ஆடுகள் எழுப்பும் ஒலியை ஒரு முகூர்த்த நேரம் கவனித்துக் கேட்க வேண்டும் என அண்ணன் கூறினார்.
என் மகன் ராமன் எது சொன்னாலும், அதில் ஒரு முக்கிய காரணமிருக்கும்!
மே!
மே!
மே!


5
ஆடுகளின் ஒலிகளைக் கவனமாக கேட்ட கைகேயி அரண்மனைக்கு வந்தார்.
காகுஸ்தா! உன் கருணையால் என் அறியாமை நீங்கியது.
தாயே! விளங்கக் கூறுங்கள்.
தாசரதியே! ஆடுகள்'மே, மே' என்று கத்தி நாங்கள் முற்பிறவியில் எல்லாவற்றையும் மே, மே (மே என்றால் 'எனது, என்னுடையது') என்று இருந்ததால் இப்போது ஆடுகளாகப் பிறந்துள்ளோம். ஆகவே 'மனிதர்களே, பரந்த மனப்பான்மையுடன் இருங்கள்' என்று நம்மைப் பார்த்துக் கூறுவதாக எனக்குப்பட்டது.


6
மற்றொரு நாள், ஸ்ரீராமருடன் சுமித்திரா தேவி பேசிக் கொண்டிருந்தார்.
ராமா! எனக்கும் மெய்ஞ்ஞானத்தை நீ உபதேசிக்க வேண்டும்!
அம்மா! முதலில் நீங்கள் யார், உபதேசம் யாருக்கு என்பதைக் கூறுங்கள். பிறகு கூறுகிறேன்.


7
நான் யார்? என் குலம் என்ன? இந்த உடலுக்கும் எனக்கும் தொடர்பில்லை; நாடகம் போல் ஒவ்வொரு பிறவியிலும் வெவ்வேறு பாத்திரங்களில் மாறி மாறிப் பிறக்கிறேன். எனவே நான் அந்தண, அரச, வைசிய, வேளாண் குலத்தைச் சேர்ந்தவள் அல்ல; தேவ, அசுர, மானுட மங்கையும் அல்ல; நான் உடல் அல்ல.


8 உடனே சுமித்திரை ராமரிடம் சென்று...
ஸ்ரீராமா! எனக்கு நான் என்ற ஒன்றே இல்லை; எனக்குள் இருப்பதெல்லாம் இறைவனே என்பதைக் கண்டு கொண்டேன்.
ஆம் தாயே! ஆய்ந்து நல்லுணர்வு பெற்று நித்தியப் பெருவாழ்வை அடைந்து விட்டீர்கள்.


9 சில நாட்கள் கழித்து ஸ்ரீராமரைப் பெற்ற கோசலா தேவியும் ராமரிடம் வேண்டினாள்.
மைந்தா! பவசாகரத்தைத் தாண்ட எனக்கு உதவு.
ஆகட்டும் தாயே! நாளை பசுத் தொழுவம் சென்று கன்றுகளின் ஒலியைக் கேட்டு ஆராய்ச்சி செய்யுங்கள். பின்பு என்னிடம் வாருங்கள்.


10 கோசலை கூர்ந்து கேட்டாள். அதனைப் பற்றி மிகக் கவனமாகச் சிந்தித்தாள்.
ஹம்மா...!
இது என்ன விதமான ஒலி...... ஆகா! கண்டு கொண்டேன்.
ஹம்மா...!


11 குழந்தாய்! கன்றுகளின் ஒலியே எனக்கு மெய் ஞானத்தை உணர்த்தின. மிக்க நன்றி!
அன்னையே, கன்றுகளின் ஒலியின் மூலமே ஞானம் பெற்றதை விவரமாகக் கூறுங்களேன்.

12

கன்றுகளின் ஹம்மா, ஹம்மா என்ற ஒலி,
அதாவது 'நான் இல்லை, 'நான் இல்லை'
(அஹம் - நான், மா- இல்லை) என்று
உணர்த்தியது. 'நான்' என்று நினைக்கும்வரை
பிறவிப்பிணி நீங்காது என அறிந்தேன். பந்த
பாசங்களில் உழன்ற எனக்கு 'நான்' என்ற
அழுக்கு நீங்கியது.

ஆம் தாயே!
நீங்கள் மெய்ஞ்ஞானத்தைப்
பெற்றுவிட்டீர்கள்!
இனி உங்களுக்குப்
பிறவியில்லாப் பெருவாழ்வுதான்!

13

ராமா! எங்கள் மூவருக்கும்
தனித்தனியே மெய்ஞ்ஞானத்
தைப் பயிற்றுவித்தாய். ஆனாலும்
ஒரு சந்தேகம்!

விளக்க வேண்டியது
என் கடமை!
கூறுங்கள்.

14

தருமசீலன்
என்று மூவுலகும்
போற்றும் நீ எங்
களுக்கு நேரிடை
யாக உபதேசம்
செய்யவில்லையே
என்பதுதான்.

15








# குருவிற்கு பகவானைக் காட்டிய சீடர்




குறுமுனிவரான அகஸ்தியரும் அவரது சீடர்களும் ரிக் வேதத்தின் பல மந்திரங்களைக் கண்டு உணர்ந்தவர்கள். அகஸ்தியருடைய ஆசிரமத்தில் பல மாணாக்கர்கள் கல்வி பயின்று வந்தனர். சுதீக்ஷணன் அவர்களுள் ஒருவன்.







4 குரு சுதீக்ஷணனைப் பாராட்டுவதால் மற்ற சீடர்கள் பொறாமை கொண்டார்கள். அவர்கள் அகஸ்தியரிடம்...




சுதீக்ஷணன் சிறந்த மாணவனாக இருந்தாலும், இளவயது குறும்பு அவனிடம் இருக்கவே செய்தது.

**5** ஒருமுறை அகஸ்தியர் ஒரு யாகத்திற்குச் சென்று திரும்பி வந்து கொண்டிருந்தார். அவரது சாளக்கிராமம் உள்ள பூஜைப் பெட்டியை சுதீக்ஷணன் பின்னால் மெல்ல எடுத்து வந்து கொண்டிருந்தான். வழியில் ஒரு நாவல் மரத்தைக் கண்டதும் கற்களால் அடித்துப் பழங்களை எடுத்து உண்டான்.



**6** சுதீக்ஷணன் மேன்மேலும் பழங்களை அடித்துக் கொண்டே அங்கிருந்த எல்லாக் கற்களையும் நதியில் வீசிவிட்டான். முடிவில் பழத்தின் மீதிருந்த ஆசையால் சிறுவனுக்குரிய குணத்துடன் குருவின் பெட்டியில் இருந்த சாளக்கிராமத்தைக்கூட எடுத்து வீசினான்!

**7**




நதியில் எவ்வளவு தேடியும் சாளக்கிராமம் கிடைக்கவில்லை. அதனால் சாளக்கிராமம் போல் இருந்த ஒரு நாவல் பழத்தைப் பூஜைப் பெட்டியில் பத்திரமாக வைத்துவிட்டான்.

**8** மறுநாள் அகஸ்தியர் பூஜை செய்தபோது...,



**9** கோபமாக இருந்த அகஸ்தியர் முன்பு சுதீக்ஷணன் பவ்யமாக வந்து நின்றான்.

மன்னியுங்கள் குருவே. பழம் தின்னும் ஆசையில் நான்தான் பாவம் செய்துவிட்டேன்.

மூடனே, உன் குறும்புத்தனம் எல்லை மீறிவிட்டது. என் முகத்தில் விழிக்காதே, போய்விடு.

**10** பிழை பொறுத் தருளுங்கள், குருவே. உங்களைப் பார்க்காம லும், பணிவிடை செய் யாமலும் என்னால் இருக்க முடியாது.

நான் பகவானாகக் கண்டு வழிபட்ட சாளக்கிராமத்தைத் தொலைத்துவிட் டாய். அந்தப் பாவத்திற்குப் பரிகாரமாக, என் பகவானை என்னிடம் கொண்டு வந்து காட்டு . அதற்கு முன் என் முன்னால் வராதே!

**11** வருத்தத்துடன் வெளியேறிய சுதீக்ஷணன் தண்டகாரண்யத்தில் ஒரு குடிசையை அமைத்துக் கொண்டு குரு உபதேசித்த ராமநாமத்தை ஜபித்தபடி ராமனைத் தியானித்து வந்தான்.

ராம்...

ராம்...

ராம்...

**12**

ஆண்டுகள் பல கழிந்தன. வனவாசம் வந்திருந்த ஸ்ரீராமர், லட்சுமணரிடம் கூறினார்.

**13** லட்சுமணா, இந்தப் பகுதியில் ராமநாமம் மிகத் தீவிரமாக ஒலிப்பதை உணர்கிறேன். இங்கு யாரோ ஒருவர் தவம் செய்து கொண்டிருக்கிறார் என்று தெரிகிறது.

**14** உடனே அவர்கள் மூவரும் சுதீக்ஷணரின் ஆசிரமத்திற்குச் சென்றனர். அப்போதும் சுதீக்ஷணனின் தியானம் கலையவில்லை. ஸ்ரீராமர் அவர் இருதயத்தில் சதுர்புஜ நாராயணனாக தரிசனம் தந்தார். புறஉலக நினைவு பெற்ற சுதீக்ஷணன்...



பரம்பொருளே ஸ்ரீராமா, இந்த எளியவனுக்காக இந்தக் கோர வனத்தில் இவ்வளவு சிரமப்பட்டு வந்தீர்களா..!

**15** ஸ்ரீராமர் சுதீக்ஷணருக்கு அருள் புரிந்தார்.




**16** அகஸ்தியர் சீடர்களுக்குப் பாடம் நடத்திக் கொண்டிருந்தார்.




**17** அகஸ்தியர் ஸ்ரீராமரைக் கண்டு மெய்சிலிர்க்க அவரை உள்ளே அழைத்து உரிய மரியாதை செய்தார். பிறகு,




பரிபூரணமான நேர்மை, புனிதம், பேரறிவு, அனைத்தையும்
வெற்றி கொள்ளவல்ல சங்கல்ப சக்திதான் வேண்டும்.
இந்தக் குணங்களுடன்கூடிய ஒரு சிலர் வேலை
செய்தால்போதும், உலகமே புரட்சிகரமாக மாறிவிடும்.

**- சுவாமி விவேகானந்தர்**



# பொங்கி வந்தது கங்கை!





1
19 -ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பவஹாரி பாபா மகாஞானி, சிறந்த யோகி. சுவாமி விவேகானந்தர் சந்தித்த மிகப் பெரிய யோகிகளுள் இவரும் ஒருவர்.




2
பவஹாரி பாபா தமது பக்தரும் சகோதரருமான கங்கா திவாரியிடம் ஒரு நாள்...
கங்கா! பகவானின் திருவருளால் அடியேனுக்குள் ஓர் எண்ணம் உதித்துள்ளது. நம் ஆசிரமத்தில் ஒரு சாதுசங்கத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். சாதுக்கள் வந்து தங்கி ஜப, தியானங்கள் செய்து, மக்களுக்கு ஆசி வழங்கி, இளைப்பாறிச் செல்ல வேண்டும்.
சுவாமி, உங்கள் எண்ணத்தை ஈடேற்றவே எனது பிறவி உள்ளது.




3
நூற்றுக்கணக்கான சாதுக்கள் குளிக்கவும், அவர்களுக்காக உணவு சமைக்கவும் அதிகம் நீர் தேவை. கங்கை நதியோ வெகு தொலைவில் உள்ளது. என்ன செய்வது?




4
பல சாதுக்கள் வந்து தங்க வேண்டுமெனில் நிறைய நீர் வேண்டும். சில கிணறுகள் தோண்டலாமா சுவாமி?
கங்கையன்னையின் அருள் நமக்கு இருக்கும்போது கிணறுகள் தேவையா? சாதுசங்கம் அமைவதற்கு முன்பு முதலில் கங்கையன்னைக்கு முறைப்படி அழைப்பு கொடு!




5
அன்னையே! எங்கள் ஆசிரமத்தில் சாதுசங்கத்திற்கு ஏற்பாடு செய்துள்ளோம். அவர்கள் அனைவரையும் ஆசீர்வதிக்க அவசியம் தாங்கள் அங்கு வர வேண்டுமம்மா.


6 கங்கா திவாரி ஓலையை கங்கையன்னைக்குப் படித்துக் காட்டியதும் ஓர் அலை வந்து அந்த ஓலையை எடுத்துச் சென்றது.
ஆஹா, அன்னை நம் அழைப்பிதழை ஏற்றுக் கொண்டு விட்டாள். வாருங்கள், பாபாவிடம் போய் இதைச் சொல்வோம்.


7 சிலர் திவாரியை ஏளனம் செய்தார்கள். ஆனால் அவர் பாபாவைக் கண்கண்ட தெய்வமாகவே கருதியதால், ஏளனங்கள் அவரைப் பாதிக்கவில்லை. சாதுசங்கத்திற்கான ஏற்பாடுகளில் மும்முரமாக ஈடுபட்டார் அவர். ஆனால், நாட்கள் நெருங்க, நெருங்க அவரது கவலை அதிகரித்தது.


8 பாபா! இன்னும் மூன்று தினங்களில் சந்நியாசிகள் வரத் தொடங்கிவிடுவார்கள். மற்ற எல்லாம் தயார். ஆனால் நீர் வசதிதான் பெரும் பிரச்னை.
கவலைப்படாதே! கங்காமாதா கைவிட மாட்டாள். அவள் நிச்சயமாக வருவாள்.


9 அது கோடைக்காலம். ஆசிரமத்தின் அருகிலிருந்த வாய்க்காலில் மழைக் காலங்களில் மட்டும் நீர் வரும்; மற்ற காலங்களில் வறண்டே இருக்கும்.
சந்நியாசிகள் ஏற்கெனவே வர ஆரம்பித்துவிட்டனர். உணவுப் பொருள்கள் தயாராக உள்ளன. ஆனால் நீர் இல்லையே! அன்னையே காப்பாற்று!
கவலையோடு இரவு உறங்கச் சென்றார் திவாரி.

10 மறுநாள் அதிகாலை, ஓர் ஆச்சரியம். வெளியில் வாய்க்காலில் நுரையுடன் கங்கை நீர் பொங்கி வந்தது.












**14** நூற்றுக்கணக்கான சாதுக்களும், சந்நியாசிகளும் கலந்து கொண்ட சத்சங்கம் நடந்தது. அனைவரும் விருந்து உண்டு மகிழ்ந்தனர். பவஹாரி பாபா மகிழ்ச்சியோடு கை கூப்பி நிற்க...,




முதலில் தவறாகப் புரிந்து கொண்ட ஒரு சில சாதுக்கள் வருந்தினர்.

**15**




**16** மூன்று தினங்களுக்குப் பிறகு சாதுசங்கம் நிறைவுற்றது. சாதுக்கள் யாவரும் ஊர் திரும்பினர். நான்காம் நாள் பாபாஜி கங்கையில் நின்று,




**17** மறுநாள் காலை, எல்லோரும் ஆச்சரியப் படும்படி, வெள்ளம் படிப்படியாகக் குறைந்து, வாய்க்கால் பழைய நிலைமைக்கே வந்துவிட்டது. கங்கைநதி பிரவாகித்த இந்தச் சரித்திர நிகழ்வு நடந்த கால்வாய் இன்றும் காணப்படுகிறது.





ஒருவர் சிரமப்பட்டு விறகும் பிறவும் தேடி நெருப்பு உண்டாக்குகின்றார்.
அதன் உதவியால் பலர் குளிர் காய்கின்றனர்.
அதுபோல மிகவும் சிரமப்பட்டுத் தவம் செய்து பகவானை அடைந்த மகான்களோடு பழகுவதால் பலர் பகவானிடத்தில் சுலபமாக மனதை வைக்க முடிகின்றது.

- பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்



## தேசத் தொண்டர்

# அளசிங்கப் பெருமாள்

1 மைசூர் மாநிலம் சிக்மகளூரில் வாழ்ந்த நரசிம்மாச்சாரி மற்றும் பெருந்தேவி தம்பதிக்கு 1865-ஆம் ஆண்டு மார்ச் மாதம் அழகியசிங்கர் பிறந்தார். சில காலம் கழித்து அவர்கள் சென்னை திருவல்லிக்கேணிக்கு இடம் பெயர்ந்தனர்.

பள்ளியில்....




3 அளசிங்கர் இளங்கலை பயின்ற பின் சட்டக் கல்லூரியில் சேர்ந்தார். கும்பகோணம் மற்றும் சிதம்பரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளிகளில் பணிபுரிந்த பின் சென்னை பச்சையப்பன் பள்ளியில் அறிவியல் ஆசிரியரானார். குடும்பத்தை நன்கு நிர்வகித்தார்.




4 அந்நியர் ஆட்சியில் அடிமையாக வாழ்ந்த நம் மக்களில் பலர் மேலைநாட்டு மோகத்தால் நமது மதம், கலாச்சாரம் ஆகியவற்றில் நம்பிக்கை இழந்திருந்தனர். இது கண்டு வருந்திய அளசிங்கர் தன் நண்பருடன் ஒரு நாள்...



5 1893-ஜனவரி இறுதியில் பரிவ்ராஜகராக சுவாமி விவேகானந்தர் சென்னைக்கு வந்தார். அளசிங்கர் சுவாமிஜியைத் தரிசித்தபின் அவரது ஆழ்ந்த ஞானத்தைக் கண்டு அடிமையானார். ஒரு நாள் சுவாமிஜியிடம் சென்று...




6 சர் எஸ்.சுப்பிரமணியம் ஐயர் தலைமையில் அவரது இல்லத்தில் சென்னை நகர இளைஞர்கள் பங்கேற்ற ஒரு கூட்டம் நடந்தது.




7 தாம் சர்வமத மகாசபையில் கலந்து கொள்வதற்கான நிதி பொது மக்களிடமிருந்தே வர வேண்டும் என்று சுவாமிஜி விரும்பினார். உடனே அளசிங்கர் இளைஞர்களுடன் சேர்ந்து வீடு வீடாகச் சென்று ரூ.500/- நிதி திரட்டினர்.



என்றாலும் சுவாமிஜி உடனே புறப்படவில்லை. பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவுள உத்தரவை எதிர்நோக்கியிருந்தார்.

8 இரண்டு மாதங்களுக்குப் பின், ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு தெய்விகக் காட்சியில் சுவாமிஜி அமெரிக்கா செல்வதற்கான அருளாணையை வழங்கினார். அதே நேரம் அன்னை ஸ்ரீசாரதாதேவியிடமிருந்து கடிதம் வந்தது.




அதன் பிறகு அளசிங்கரும் மற்றவர்களும் மீண்டும் சுவாமிஜியின் பயணத்திற்காக ரூ.4000/- திரட்டினர். 1893, மே 31 அன்று, கப்பலில் சுவாமிஜி அமெரிக்கா செல்ல முடிவாயிற்று.

9 அளசிங்கரின் பெருமுயற்சியால் சுவாமிஜி பம்பாயிலிருந்து கப்பல் மூலம் அமெரிக்கா புறப்பட்டார். அளசிங்கர் அங்கு சென்று அவரை வழியனுப்பினார்.




10 அமெரிக்காவில் சர்வ சமயப் பேரவை தள்ளிப் போடப்பட்டிருந்தது. கொண்டு சென்ற பணம் கரைந்து விட்டதால் சுவாமிஜி மிகவும் துன்பமுற்றார். அளசிங்கருக்குத் தந்தி அனுப்பினார். சென்னையில் அளசிங்கர் தமது மனைவியிடம்...




அளசிங்கர் தமது மனைவியின் நகைகளை விற்றும், கடன் வாங்கியும் ரூ.1,000/- சுவாமிஜிக்கு அனுப்பினார்.

11 சுவாமிஜி சிகாகோவில் ஒற்றை வரியால் உலகை வென்றார்.




சிகாகோ பேரவைக்குப் பிறகு சுவாமிஜி அமெரிக்காவில் பெரும் புகழ் பெற்றார். கடுமையாக உழைத்து இந்துமதத்தின் மேன்மையைப் பரப்பினார்.

12 அமெரிக்காவில் சுவாமிஜியின் புகழின் மீது பொறாமை கொண்ட பலர் அவருக்குத் தொல்லை தந்தனர். அவர்களின் வாயையடைக்க சென்னையில் அளசிங்கர் ஒரு பெரிய கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தார்.



அன்பர்களே, நமது சுவாமிஜியை இந்து மதப் பிரதிநிதியாக, அவரது பணிகள் மீது முழு திருப்தியைத் தெரிவித்து இந்தச் சபை அங்கீகரிக்கிறது என்கிற தீர்மானத்தை அமெரிக்காவிற்கு அனுப்புவோம்.

இதனால் சுவாமிஜியின் தொல்லைகள் ஓரளவு நீங்கின.

13

தேசிய எழுச்சிக்கு வித்திட்ட பல புகழ்மிக்க கடிதங்களை அமெரிக்காவிலிருந்து சுவாமிஜி அளசிங்கருக்கு எழுதினார்.




14




15




மேலை நாடுகளில் ஆன்மிகத்தை நான்கரை ஆண்டுகள் வெற்றிகரமாகப் பரப்பி விட்டு சுவாமிஜி தாயகம் திரும்பினார். 1897, பிப்ரவரி 6 அன்று சென்னை வந்த அவருக்கு வரலாறு காணாத வரவேற்பு அளிக்கப்பட்டது. அப்போது கேசில் கர்னனில் (விவேகானந்தர் இல்லம்) ஒன்பது நாட்கள் தங்கினார்.

சென்னையில் சுவாமிஜி புகழ்மிக்கச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். அவற்றை அதே ஆண்டில் அளசிங்கர் புத்தகமாக வெளியிட்டார்.

16

மார்ச் 7. ஞாயிறன்று கல்கத்தா, தட்சிணேசுவரத்தில் குருதேவரின் ஜயந்தி விழாவில் சுமார் 60,000 பேர் பங்கேற்றனர். அளசிங்கர் சுவாமிஜியுடனே அப்போது இருந்தார்.



**17** சுவாமிஜியின் மேலை நாட்டுச் சிஷ்யைகளில் ஒருவர் ஜோசபைன் மேக்லவுட். அளசிங்கரின் தோற்றத்தைப் பார்த்து அவர் விளையாட்டாக.....




இதன் பிறகு மெக்லவுட் அவரைப் பெரிதும் போற்றினார்.

**18** 1897 மார்ச்சில் சுவாமி ராமகிருஷ்ணானந்தர் சென்னை வந்து சேர்ந்தார். கேசில் கெர்னலில் மடம் ஆரம்பிக்கப்பட்டது. 1900-ஆம் ஆண்டு குருதேவரின் ஜெயந்தி விழா கொண்டாடப்பட்டது. அளசிங்கரின் சேவையை சுவாமி ராமகிருஷ்ணானந்தர் பாராட்டினார்.




**19** 1899 -ஆம் ஆண்டு சுவாமிஜி மீண்டும் மேலை நாடுகளுக்குப் பயணம் மேற் கொண்டார். அளசிங்கர் சுவாமிஜியுடன் இலங்கை வரை பயணித்தார். அப்போது சுவாமிஜி கடிதம் எழுதுகையில்...




1900, டிசம்பரில் இந்தியா திரும்பிய சுவாமிஜி 1902, ஜூலை யில் கல்கத்தா, பேலூர் மடத்தில் மகாசமாதி அடைந்தார். அளசிங்கருக்கும் மற்றவர்களுக்கும் அது பேரிடியாக அமைந்தது.

**20** 1907-ல் பாரதியார் சகோதரி நிவேதிதையை கல்கத்தாவில் சந்தித்தார்.




இதன் பிறகு, அளசிங்கரின் தொடர்பால் பாரதியார் 'இந்தியா' போன்ற பத்திரிகைகள் நடத்துவதற்கும் மற்ற தேசிய சேவைகள் புரியவும் ஊக்கமும் உதவியும் பெற்றார்.

**21** சுவாமிஜியின் மறைவு அளசிங்கரை மிகப் பெரிய அளவில் பாதித்தது. 1906-இல் சென்னைக்கு விஜயம் செய்த சுவாமி அபேதானந்தர் பல இடங்களில் சொற்பொழிவாற்ற ஏற்பாடு செய்தார் அவர்.



அளசிங்கரே, நீங்கள் தளர்ந்து போயுள்ளீர்கள். நீங்கள் விலைமதிப்பற்ற செல்வம். உங்கள் உடல் நிலையைக் கவனித்துக் கொள்ளுங்கள்.

**22** ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகளின் முதல் தொகுதியை 'ம' ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருந்தார். அது அளசிங்கரின் முயற்சியால் நூலாக வெளிவந்தது.



அளசிங்கர் ஏற்கனவே சுவாமிஜியின் நான்கு யோகங்கள், ராமானுஜரின் ஸ்ரீபாஷ்யம், தக்ஷிணேசுவர தீர்க்கதரிசி போன்ற பல நூல்களை பிரம்மவாதின் பத்திரிகையில் வெளியிட்டிருந்தார்.

**23** 1908-ல் கல்லூரி விரிவுரையாளரானார். அதே ஆண்டு அவரது தாடை எலும்பில் புற்றுநோய் தாக்கியது. டாக்டர் நஞ்சுண்டராவ் அவரை நன்கு கவனித்து வந்தார்.




**24** கடுமையான உடல் உபாதையிலும் சுவாமிஜியின் பணிகளைத் தொடர்ந்து செய்துவந்த அளசிங்கர் நோய் முற்றி 1909, மே 11-இல் தமது ஆசாரியனான விவேகானந்தரின் திருவடிகளை அடைந்தார்.






தேச பக்தர்கள் இரு வகைப்படுவர். ஒரு வகை அரங்கத்தில் ஆடுவது, மற்றொரு வகை திரைக்குப் பின்னே இருந்து புகழ் அறியாமல் பாடுபடுவது..... காலஞ்சென்ற ஸ்ரீஅழகிய சிங்கப் பெருமாள் பின் வகுப்பைச் சேர்ந்திருந்தவர்.

- மகாகவி பாரதியார்





# ஸ்ரீராமானுஜர்

**1** ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீபெரும்புதூரைச் சேர்ந்த ஆசூரி கேசவ சோமயாஜுலு, காந்திமதி என்னும் பக்த தம்பதி பார்த்தசாரதிப் பெருமாளிடம் புத்திரப் பேறு வேண்டினர். பெருமாள், சோமயாஜுலுவின் கனவில் தோன்றி...




கி.பி 1017-ம் வருடம் சித்திரை 12-ஆம் தேதி சுக்லபட்சப் பஞ்சமி திதியும் திருவாதிரை நட்சத்திரமும் கூடிய தினத்தில் ஸ்ரீராமானுஜர் அவதரித்தார்.

**2** ஸ்ரீவரதராஜபெருமாளுக்குச் சேவை செய்து வந்த திருக்கச்சி நம்பிகளிடத்தில் சிறுவயதிலேயே ராமானு ஜருக்கு ஈர்ப்பு உண்டாயிற்று. ஒரு நாள் நம்பிகளுக்கு, ராமானுஜர் அமுது செய்வித்து அவருக்குச் சேவை செய்ய முற்பட்டார்.




**3** ராமானுஜர் வளர்ந்ததும் காஞ்சி புரத்தில் யாதவ பிரகாசர் என்ற பண்டிதரிடம் மாணவராகச் சேர்ந்தார். அவரது அறிவாற்றலைக் கண்டு யாதவ பிரகாசர் பொறாமை அடைந்தார். அவர் ராமானுஜரைத் தீர்த்துக் கட்ட கங்கைக்கு யாத்திரை செல்ல ஏற்பாடு செய்தார்.

அந்தக் குழுவில் ராமானுஜரின் ஒன்று விட்ட சகோதரன் கோவிந்தனும் இருந்தார். அவர் ராமானுஜரைத் தனிமையில் சந்தித்து......



4 ராமானுஜர் கூட்டத்திலிருந்து விலகி காஞ்சிபுரம் திரும்பினார். காட்டு வழியில், அவர் களைப்பால் ஒரு மரத்தடியில் உறங்கிவிட்டார். கண் விழித்ததும் அவருக்கு ஒரு வேடுவத் தம்பதி உதவிக்கு வந்தனர்.




வழியில் அந்த வேடுவப் பெண் தாகமாக இருக்கிறதென்று கூறினாள். ராமானுஜர் மூன்றுமுறை கொண்டு வந்த நீரைப் பருகியும் அவளது தாகம் தணியவில்லை. நான்காம் முறை அவர் எடுத்து வந்தபோது அந்தத் தம்பதியைக் காணவில்லை. மாறாக, தாம் காஞ்சிபுரத்தில் இருப்பதைக் கண்டார். காட்டில் தம்மைக் காத்து வழி நடத்தியது மகாலட்சுமித் தாயாரும் ஸ்ரீமந் நாராயணனுமே என்று உணர்ந்து நெக்குருகினார் ராமானுஜர்.

5 யாதவபிரகாசர் திரும்பி வந்ததும் காஞ்சியில் ராமானுஜரைக் கண்டு திடுக்கிட்டார். ஆனாலும் அவரை குருகுலத்தில் மீண்டும் சேர்த்துக் கொண்டார். சீடர் ராமானுஜரின் புகழ் பெருகியது. அதைக் கண்டு பொறுக்க முடியாமல் யாதவபிரகாசர் அவரைத் தம் குருகுலத்திலிருந்து விலக்கி விட்டார்.



என் விருப்பப்படி நடக்காவிட்டால் உனக்கு இங்கே இடமில்லை. போய்விடு!

6 ராமானுஜர் காஞ்சி வரதராஜருக்குச் சேவையாற்றி வந்தார்.




ஆளவந்தார் திருவரங்கத்தில் தமது சீடர்களுடன் வைணவத்தில் கோலோச்சி வந்தார். ராமானுஜர் வைணவ நெறியை ஏற்க வேண்டும் என்று அரங்கனை வேண்டி 'ஸ்தோத்திர ரத்னம்' எனும் துதி நூலைப் பரமனின் பாதங்களில் சமர்ப்பித்தார். ஒரு நாள் காஞ்சியிலிருந்து வந்த இரு பிராமணர்கள் ஆளவந்தாரைச் சந்தித்தனர்.

7




பிராமணர்கள் உரைத்த செய்தியைக் கேட்டு மகிழ்ந்த ஆளவந்தார் ராமானுஜரை அழைத்து வரும்படி தம் சீடர் பெரிய நம்பிக்குக் கட்டளையிட்டார்.

**8** ஆளவந்தாரைக் காண திருவரங்கம் செல்லும் வழியிலேயே அவர் பரமபதம் அடைந்துவிட்ட செய்தி அறிந்தார் ராமானுஜர். அவரது திவ்ய சரீரத்தைத் தரிசித்தபோது மூன்று விரல்கள் மடங்கியிருந்தன.




**9** பெருமாளின் அருளாணையின்படி பெரிய நம்பிகளை குருவாகப் பற்றிக் கொண்டார். அவர் மதுராந்தகத்தில் ராமானுஜருக்கு பஞ்ச சம்ஸ்காரம் செய்வித்தார். பிறகு காஞ்சியில் ராமானுஜர் தம் குருவிடம் திவ்ய பிரபந்தங்களைப் பயின்றார்.



ஆளவந்தாரின் திருமேனியை ராமானுஜர் அசையாமல் பார்த்தார். அப்போது ஆளவந்தார் நினைத்திருந்ததை உணர்ந்த ராமானுஜர் உடனே மூன்று சபதங்களை உரக்கக் கூறினார். அவை:

1. திருமாலின் நெறியில் அடியேன் வாழ்ந்து, மக்களின் அறிவின்மையை நீக்கி, அவர்களுக்குப் பஞ்ச சம்ஸ்காரம் செய்வித்து, திவ்யப் பிரபந்தங்களில் வல்லவர்களாக்கி, பிரபத்தி வழியில் ஊன்ற வைத்து எப்போதும் காப்பேன்.

2. மக்களைக் காக்கும் நோக்கத்துடன், நலமான தத்துவஞானத்தைத் தொகுத்து ஸ்ரீபாஷ்யம் இயற்றுவேன்.

3. உயிர், இறைவன், உலகம் ஆகிய தத்துவங்களின் இயல்பையும், உயிர் முன்னேறும் வழியையும் தெளிவாக விளக்கிப் பேரருளுடன் விஷ்ணு புராணத்தை இயற்றிய பராசர முனிவருக்கும் வியாசருக்கும் நன்றி தெரிவிக்கும் வகையில், நன்கு கற்றறிந்த வைணவர் இருவருக்கு அவர்களது திருப்பெயரை இடுவேன்.

ராமானுஜர் இவ்வாறு கூறியதும் ஆளவந்தாரின் முகம் ஒளிர மடங்கிய விரல்களும் நேராயின.

**10** சில காலம் கழித்து காஞ்சி வரதராஜர் சன்னதியில் ராமானுஜர் துறவறம் மேற்கொண்டார். ஸ்ரீரங்கம் சென்ற ராமானுஜர் திருக்கோஷ்டியூர் நம்பிகளிடம் எட்டெழுத்து மந்திரத்தைப் பொருளுடன் கற்றார்.



**11** குருவிடம் விடைபெற்று வந்ததும் ராமானுஜர் கோயில் கோபுரத்தின் மேல் ஏறி கூடியிருந்த மக்களைப் பார்த்துப் பேரன்புடன்...

பக்தர்களே, இதை மூன்று முறை கூறுங்கள். நீங்கள் முக்தி பெறுவது நிச்சயம். ஓம் நமோ நாராயணாய...

ஓம் நமோ நாராயணாய...

**12** ராமானுஜரின் செயலால் முதலில் கோபமுற்ற நம்பிகளிடம், 'நான் நரகம் சென்றாலும் ஆயிரக் கணக்கான மக்கள் முக்தி அடையட்டும் என்றே மந்திரத்தை அவர்களுக்கு வழங்கினேன்' என்றார் சீடர். திருக்கோஷ்டியூர் நம்பி சீடரின் இரக்கத்தைக் கண்டு நெகிழ்ந்தார்.

ராமானுஜா, இனி நீயே என் ஆசாரியன்.

**13** யக்ஞமூர்த்தி என்ற பண்டிதர் ராமானுஜருடன் வாதத்திற்கு வந்தார். முடிவில் ராமானுஜரின் ஆணித்தரமான வைணவக் கோட்பாட்டினால் அவர் வாதத்தில் தோற்றார்.

ஐயனே, இன்று முதல் அடியேன் தங்கள் சீடன்.

பண்டிதரே, இனி நீங்கள் அருளாளப் பெருமான் எம்பெருமானார் என்று திருநாமம் பெறுகிறீர் கள். பகவத் கைங்கர்யத்தில் இனி ஈடுபடுங்கள்.

**14** ராமானுஜரின் சிற்றன்னை தன் மகன் கோவிந்தனை வைணவத்திற்குள் ஈடுபடுத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். கோவிந்தன் திருவரங்கம் சென்று ராமானுஜரைச் சந்தித்தார். அவரது பெருவாழ்வைக் கண்டு வைணவ நெறி சார்ந்தார் கோவிந்தன்.

கோவிந்தா, நீ வைணவத்திற்குத் திரும்பியதில் மகிழ்ச்சி. இன்று முதல் நீ 'எம்பார்' என்ற திருநாமத்துடன் அழைக்கப்படுவாய்.

**15** காஷ்மீரில் சரஸ்வதி தேவியின் அருளால் கிடைத்த 'போதாயன விருத்தி' என்னும் நூலுடன் ராமானுஜர் திரும்பிக் கொண்டிருந்தபோது பண்டிதர்கள் அதைப் பறித்துக் கொண்டனர்.

ராமானுஜர் கலங்கினார். அப்போது அவரது சீடர் கூரத்தாழ்வான் அந்த நூல் முழுவதையும் இரவே படித்து கிரகித்துக் கொண்டுவிட்டதாகக் கூறினார். அதைக் கொண்டு வேதாந்த சூத்திரத்திற்கு, ஸ்ரீபாஷ்யம் என்று அழைக்கப்படும் உரையை எழுதினார் ராமானுஜர்.



ராமானுஜர் தேச யாத்திரையில் பலரை வாதத்தில் வென்றார். பல அரசர்களையும் பிரபுக்களையும் வைணவ நெறிக்கு மாற்றினார்.

**16** ரங்கநாதப் பெருமானின் அருளால் கூரத்தாழ்வாரின் மனைவி இரட்டை ஆண் குழந்தைகளைப் பெற்றார். ராமானுஜர் குழந்தைகளின் காதில் நாராயண மந்திரத்தை ஓதி அவர்களுக்கு முறையே பராசரர் மற்றும் வியாசர் என்று பெயரிட்டார். இவ்வாறு ஆளவந்தார் திருமேனி முன் எடுத்த மூன்றாவது சபதத்தையும் நிறைவேற்றினார்.



குலோத்துங்கன் வைஷ்ணவர்களைத் துன்பத்திற்கு உள்ளாக்கினார். இதனால் ராமானுஜர் மேல்கோட்டைக்குச் சென்று வசித்தார். மேல்கோட்டையில் பக்தர்கள் ராமானுஜரின் 'தமருகந்த திருமேனி' விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்தார்கள். குலோத்துங்கனின் மறைவிற்குப் பிறகு மீண்டும் ராமானுஜர் ஸ்ரீரங்கம் எழுந்தருளினார்.

**17** ஸ்ரீபெரும்புதூரிலும் 'தாமுகந்த திருமேனி' பிரதிஷ்டை நடந்தது. அவற்றில் தாமே குடி கொள்ளப் போகிறேன் என ராமானுஜர் அருளினார்.



ஸ்ரீரங்கத்தில் உடையவர் ஸ்ரீராமானுஜர், அவரது 'தாமான திருமேனி' மூலம் பக்தர்களுக்கு எப்போதும் அருள் புரிந்து வருகிறார்.



ஸ்ரீராமகிருஷ்ணரின் தென்னகத் தூதரான

# சுவாமி ராமகிருஷ்ணானந்தர்

## சில சுவையான சம்பவங்கள்

1 மேற்கு வங்காளத்தில் 1863-இல் பிறந்த சசிபூஷண் சிறுவயதிலேயே பக்தியுடன் பூஜை செய்வார்.



2



1883 -இல் கல்லூரியில் பயின்ற காலத்தில் சசியும் சரத் என்ற இளைஞரும் ஸ்ரீராமகிருஷ்ணரை தட்சிணேசுவரத்தில் முதன்முதலாகச் சந்தித்தனர்.

3



ஸ்ரீராமகிருஷ்ணரிடம் சசியின் பக்தி போற்றத்தக்கது. ஒரு முறை கோடைக் காலத்தில் குருதேவருக்காகக் கடும் வெயிலில் ஆறு மைல் நடந்தே சென்று சசி ஐஸ் வாங்கிவந்தார். அப்போது வெயிலால் சசியின் உடம்பில் உண்டான கொப்பளங்களைக் கண்டு குருதேவர் துடித்தார். ஆனால் அந்த ஐஸ் வெயிலில் கரையாதது ஆச்சரியமானதுதான்.

4 ஒரு முறை குருதேவர் நோயுற்றிருந்தார், பிறர் உதவி யின்றி எழ முடியாத நிலை. அன்று கடுங்குளிரில் சசி வெளியே வேலை செய்வதைக் கண்டு குருதேவரே எழுந்து சசிக்காக போர்வையினை எடுத்துத் தந்தார். குருவும் சீடரும் ஒருவர் மீது ஒருவர் ஆழ்ந்த அன்பு செலுத்தினர்.



5



காசிப்பூரில். குருதேவர் தமது சீடர்களுக்குக் காவி வஸ்திரங்களை வழங்கித் துறவறம் ஏற்க ஆயத்தப்படுத்தினார்.



குருதேவர் மறைந்த பின்னும் சசி அவர் தொடர்பு டைய ஒவ்வொன்றிலும் குருதேவரையே கண்டார். குருதேவரின் புனிதச் சிதை எரிந்த பிறகு மயானத்தில் அவரது அஸ்தியைக் கலசத்தில் சேகரித்தார்.



அந்த அஸ்திக் கலசத்தையும், குருதேவரின் படத்தையும் வைத்து வராக நகர் மடத்தில் மிகவும் பக்தியுடன் சுவாமி ராமகிருஷ்ணானந்தர் பூஜித்தார்.



1886 டிசம்பரில் சீடர்கள் ஆன்ட்பூரில் 'துனி' எனப்படும் அக்னியின் முன்னால் சந்நியாச தீட்சை மேற்கொண்டனர். சசிபூஷண் சுவாமி ராமகிருஷ்ணானந்தர் என்ற நாமம் பெற்றார்.



வராக நகரில் காலை முதல் மாலை வரை தியானத்தில் ஆழ்ந்திருக்கும் தமது சகோதரச் சீடர்களுக்குத் தாம் பிட்சை எடுத்து, சமைத்து, குருதேவருக்கு நிவேதித்த பிரசாதத்தை சசி மகராஜ் ஊட்டுவார். இதனால்தான் 'சசி, மடத்தின் தாய்' என்று சுவாமி விவேகானந்தர் உரைத்தார்.



சில ஆண்டுகளுக்குப் பிறகு..., 1897-ல் சென்னை ஐஸ் ஹவுசில் சுவாமிஜி தமது சீடர்களிடம், ராமகிருஷ்ண மடத்தைச் சென்னையில் நிறுவ சசி மகராஜை அனுப்புவதாக வாக்களித்தார்.

1897 மார்ச்சில் சுவாமிஜி சசி மகராஜிடம் சென்னைக்குச் சென்று குருதேவரின் பணிகளைப் பரப்புமாறு கூறினார்.






ஐஸ்ஹவுசில் சசி மகராஜ் குருதேவரது படத்தை
பிரதிஷ்டை செய்து பூஜித்தார்.
1898-இல் குருதேவரின் ஜெயந்தி விழா
முதன்முதலாக சென்னையில் கொண்டாடப்பட்டது.







1902, ஜூலை 4 இரவு சசி மகராஜ் தியானத்தில்
இருந்தபோது சுவாமிஜி தோன்றி, ‘சசி, நான் என்
உடலை உமிழ்ந்துவிட்டேன்’ என்றார்.
மறுநாள் பேலூர் மடத்திலிருந்து சுவாமிஜி மகாசமாதி
அடைந்த செய்தி வந்து சேர்ந்தது.

14 மடத்தில் சசி மகராஜ், காய்கறி நறுக்கும்
போதும் பிரம்மச்சாரிகளுக்கு வகுப்பு நடத்துவார்.






1906 ஏப்ரலில், ஒரு முறை வெப்பத்தின் தாக்கம் அதிகமாக இருந்ததால் இரவு 11 மணி அளவில்
சசிமகராஜ் குருதேவரின் பூஜையறைக்குச் சென்று அவரது திருவுருவப் படத்திற்கு விசிறினார்.

**16** கப்பலோட்டிய தமிழனான வ.உ.சிதம்பரனார் சசி மகராஜிடம் ஐஸ் ஹவுசில் வழிகாட்டுதலைப் பெற்றார். அதன் பிறகே வ.உ.சி தேசிய விடுதலைப் போராட்டத்தில் பெரும் பங்காற்றினார்.



**17**



ரங்கூனில் பொன் பகோடா குன்றிலுள்ள புத்தர் கோயிலில் சசி மகராஜ் தம்மை மறந்து வெகு நேரம் தியானத்தில் ஆழ்ந்திருந்தபோது பர்மியப் பெண்கள் அவரை மலரிட்டு வழிபட்டனர்.

**18** சசி மகராஜ் ஆற்றிய பணிகளில் உறுதுணையாற்றிய ராமசுவாமி ஐயங்கார் மூலம் சென்னையில் 1905 பிப்ரவரி 17-ல் ராமகிருஷ்ண மாணவர் இல்லத்தை ஏழு மாணவர்களுடன் தொடங்கினார்.



**19**




1907-ல் ஸ்ரீராமகிருஷ்ண மடம் ஐஸ் ஹவுஸிலிருந்து மயிலாப்பூருக்கு மாற்றப்பட்டது.

**20**



1908-இல் சுவாமி பிரம்மானந்தர் சென்னை வந்தார். பின் மதுரை சென்று மீனாட்சி அம்மனைத் தரிசித்தபோது அவர் பரவச நிலையை அடைந்தார். சசி மகராஜ் அவரைத் தாங்கிப் பிடித்தார்.

**21**



ஸ்ரீராமானுஜரின் வரலாற்றை சசி மகராஜ் வங்க மொழியில் எழுதினார்.

**22** ஓர் ஆண்டு, குருதேவரின் ஜெயந்தி விழாவின்போது மக்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டது. பந்தியின் மத்தியில் சசி மகராஜ் பரவசமாகிக் கண்ணீருடன் கைகூப்பி நின்றார். மக்களிடத்தில் மகேஷனைக் கண்டாரோ!



**23** திருச்சியில் உரையாற்றச் சென்ற சசி மகராஜை இளைஞர்கள் வண்டியில் அமரச் செய்து தாங்களே அதனை இழுத்துச் சென்றனர்.



**24**



சென்னை மடத்தின் கட்டிடத்தில் விரிசல் ஏற்பட்டு மழைநீர் ஒழுகியபோது சசி மகராஜ் குருதேவரின் திருவுருவப் படத்திற்கு இரவு முழுவதும் குடை பிடித்தார்.

**25**



அன்னை ஸ்ரீசாரதா தேவி 1911-இல் சென்னைக்கு வருகை தந்தார்.

**26**



பெங்களூரு பசவங்குடி ராமகிருஷ்ண மடத்தில் அன்னை ஸ்ரீசாரதா தேவி சிறு குன்றின் மீது தியானத்தில் ஆழ்ந்திருந்தார். அப்போது சசி மகராஜ் அவரைப் போற்றி வணங்கி ஆசி பெற்றார்.

**27** சசி மகராஜின் ஏற்பாட்டின்படி, 108 தங்க வில்வ தளங்களால் அன்னை, ராமேஸ்வரத்தில் ஸ்ரீராமநாத சுவாமியைப் பூஜித்தார்.



**28** சுமார் 15 ஆண்டு காலம் தென்னகம் முழுவதும் பல இடங்களில் ராமகிருஷ்ண மடங்களை நிறுவுவதற்கு வித்திட்டார் சுவாமி ராமகிருஷ்ணானந்தர்.

மிகக் கடினமாக எல்லா வகைகளிலும் அவர் பிரச்சாரம் செய்ததால் அவரது உடல்நிலை மிகவும் பாதித்தது.

அந்திமக் காலத்தில் கல்கத்தா, உத்போதனிற்கு சசி மகராஜ் அழைத்துச் செல்லப்பட்டார்.



**29** சசி மகராஜ் உடலை உகுப்பதற்கு மூன்று நாட்கஞக்கு முன் குருதேவரும், அன்னையும், சுவாமிஜியும் சசி மகராஜிக்குக் காட்சியளித்து ஆசி அளித்தனர்.



**30** சசி மகராஜ், தம் அந்திம இரவில் அன்னை சாரதையின் மீது கிரீஷ் சந்திரகோஷ் இயற்றிய ஓர் அருமையான கவிதையைப் பாடினார். அன்றே அன்னை அவருக்குத் தரிசனம் அளித்தார்.



‘மனநிறைவு ஒன்றே எத்தகைய பாதகமான சூழ்நிலையிலும் நம்மைப் பாதுகாப்பாக வழிநடத்திச் செல்ல வல்லது. இறைவன் நல்லவர்; இறைவனே அனைத்தையும் செய்பவர். ஆகவே, அவர் நன்மையைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியாது. இதைத்தான் எல்லா மதங்களும் போதிக்கின்றன. அதன் வழியையே கடைப் பிடியுங்கள். அப்போது மனநிறைவும் மன அமைதியும் தாமாகவே உடன் வரும். எப்போதும் என் ஆசிகள் உங்களுக்கு உண்டென்று அறிந்துகொள்ளுங்கள். ஸ்ரீராமகிருஷ்ணர் உங்களை நல்ல நிலையில் வைப்பாராக!

சுவாமி ராமகிருஷ்ணானந்தர், ஸ்ரீநாராயண ஐயங்காருக்கு 1897-இல் எழுதிய கடிதம்.





# ஸ்ரீஜெயதேவர்

**1** ஜெயதேவரின் கீதகோவிந்தத்தை அரசன் அரங்கேற்ற ஏற்பாடுகள் செய்தான். அப்போது ஒரு முதியவர் அங்கு வந்து ஜெயதேவரைப் பற்றி விசாரித்தார்.




**2** முதியவர் படித்த காவியம் அப்படியே ஜெயதேவர் இயற்றிய கீதகோவிந்தமாகவே இருந்தது. அனைவரும் திகைத்தனர். அப்போது திடீரென ஓர் அசரீரி கேட்டது.




முதியவர் மறைந்து ஸ்ரீகிருஷ்ணன் அங்கு தோன்றினான்.

**3** ஒருமுறை வணிகர் ஒருவரின் வீட்டில் தங்கினார் ஜெயதேவர். திரும்பி வரும்போது அந்த வணிகர் பல பரிசுகளை வண்டியில் ஏற்றியிருந்தார். காட்டு வழியில் கொடூரமான கள்வர்கள் அந்தப் பொருள்களைச் சூறையாடினர்.

**4**



5 காட்டில் பாழுங்கிணற்றில் கைகால்கள் இழந்த போதும் கண்ணனைத் தொழுது பாட ஆரம்பித்தார் ஜெயதேவர்.



6 சில நாட்களுக்குப் பிறகு அரசன் கவலையுடன்...,




7 காட்டில் அரசனும் மந்திரியும் ஜெயதேவரைப் பாழும் கிணற்றிலிருந்து மீட்டு அரண்மனைக்கு அழைத்து வந்தனர்.




8 அரசன் ஒவ்வோர் ஆண்டும் பாகவதர்களை அழைத்து மரியாதை செய்வார். அந்த ஆண்டில் ஜெயதேவரைத் துன்புறுத்திய கள்வர்களும் பாகவத வேடம் பூண்டு அவைக்கு வந்தனர். அங்கு ஜெயதேவரைக் கண்டு திடுக்கிட்டனர்.




எல்லையில்..., ஜெயதேவர் அந்தக் கள்வர்களைக் காப்பாற்றியிருந்தும், நன்றி இல்லாத அவர்கள் காவலாளிகளிடம் ஜெயதேவரைப் பற்றி அவதூறு கூறினார்கள்.

**9**

உங்கள் அரசரது சபையில் ஒரு முடவன் இருக்கிறானே, அவன் ஒரு தேர்ந்த கள்வன். எங்கள் நாட்டு அரசர் அவருக்குக் கொலை தண்டனையளித்து அதை எங்களை நிறைவேற்றச் சொன்னார்.

அப்படியா?

ஆமாம். ஆனால் நாங்களோ, அவரைக் கொல்லாது கை, கால்களை மட்டும் வெட்டிவிட்டோம்.

**10**

இப்படி ஜெயதேவரைக் குறை கூறியது பொறுக்காமல் பூமி மாதா அந்த மூர்க்கர்களை உடனே விழுங்கிவிட்டாள்.



சேவகர்கள் இந்தச் சம்பவத்தை அரசனிடம் தெரிவித்தார்கள். ஜெயதேவர் அந்தக் கள்வர்களுக்காகப் பிரார்த்தித்தார். அப்போது அரண்மனையில் திடீரென பகவானின் குரல் ஒலித்தது.

**11**

ஜெயதேவா! பகைவருக்கும் அருளும் உன் பிரார்த்தனையை ஏற்று, மறுபிறவியில் அக்கள்வர்கள் நற்பிறவி அடைவார்கள். அதோடு வெட்டப்பட்ட உன் அங்கங்களும் சரியாகும்.

தெய்வமே ஜெயதேவரைத் தன் மடியில் வைத்துக் காப்பதை அனைவரும்அறிந்துகொண்டனர்.

**12**

புரி ஜகந்நாதர் கோவில். அன்று கிருஷ்ணர் சிலைக்கு பூஜாரி பீதாம்பர ஆடை மாற்றச் சென்றபோது...,



ஆ என்ன இது! கிருஷ்ணரின் ஆடை பல இடங்களில் கிழிக்கப்பட்டிருக்கிறதே, யார் இந்த அபசாரம் செய்தது?

உடனே பூஜாரி மன்னரிடம் ஓடோடிச் சென்று கூறினார்.

**13**

அரசர், இந்தக் குற்றத்தை விசாரித்தபோது ஓர் அசரீரி ஒலித்தது.




இவ்வாறு கூறியது ஸ்ரீகிருஷ்ணரே என்று அனைவரும் உணர்ந்தனர்.




15

உடனே கங்காதேவி சுவடியுடன் எல்லோர் முன்பு தோன்றினாள்.




ஜெயதேவர் இவ்வாறு கங்காதேவியிடம் கூறியவுடன் அங்கு ஓர் அதிசயம் நடந்தது.

16

பண்டிதர்களாக வந்தவர்கள் திடீரென சிவனும் பார்வதியுமாகக் காட்சி தந்தனர். கீதகோவிந்தம் சுவடியிலிருந்து கண்ணனும் ராதையும் எழுந்தனர். பக்தர்கள் அனைவரும் ஆனந்தத்தில் மூழ்கினர்.





கடவுளை ஒருவன் அணுக அணுக, அக்கடவுளின் அளவு கடந்த தன்மைகளின் புதியவையும், மகத்தானவையுமான சிறப்புக்களைத் தெரிந்து கொள்கின்றான்;

முடிவில் ஞானமுதிர்ச்சியால் அவன் அக்கடவுளிடமே லயித்து விடுகிறான்.

- பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்

# தர்மக்ஷேத்திரம்







நல்ல அரசனைப் பிரிய மனமில்லாத அவையோர் முதலில் மறுப்பு தெரிவித்தனர். முடிவில் மன்னனின் விருப்பத்திற்கிணங்கி அவரை வழியனுப்பினர்.















8 தபதி-சம்வர்ணனின் திருமணத்திற்குப் பிறகு அவர்களுக்கு குரு என்ற மகன் பிறந்து சீரும் சிறப்புமாக வளர்ந்தான்.



9 குரு உரிய வயதில் மணம் முடித்து அரியணை ஏறி செங்கோலோச்சி மக்களிடம் நற்பெயர் பெற்றான். யோக கலைகளில் வல்லவனாக விளங்கினான். மக்கள் நலனில் மிகுந்த அக்கறை கொண்டிருந்தான் மன்னன்.






11 தனது மக்களுக்கு அஷ்டாங்க யோகமாகிய நற்செல்வங்களை வழங்க நினைத்தான் குரு. முதலில் அவற்றை வளர்க்க ஏற்ற இடத்தைத் தேடி பூமியெங்கும் வலம் வந்தான் அரசன். (எட்டு வித யோகங்கள்- தவம், உண்மை, மன்னிப்பு, கருணை, தூய்மை, தானம், யோகம், பிரம்மசரியம்)



12 தனது யாத்திரையின் முடிவில் 'சரஸ்வதி' நதி ஓடிய 'சமந்தகம்' என்ற இடத்தை அடைந்தான்.




13
குரு, சிவபெருமானிடமும் எமதர்மராஜனிடமும் வேண்டி, அவர்களது வாகனங்களைக் கொண்டு அந்த நிலத்தைத் தங்கக் கலப்பையால் உழுதார். அதனைக் கண்ட இந்திரன் குரு மன்னரைப் பரிகாசம் செய்தான்.
ஏ அரசனே! அஷ்டாங்க யோகத்தையா பயிரிடப் போகிறாய்? நல்ல கூத்து இது!
குரு, இந்திரனின் பரிகாசத்தைப் பொருட்படுத்தவில்லை. அப்போது மகாவிஷ்ணு அங்கு தோன்றினார்.


14
மன்னா, உன் எண்ணம் நல்லதுதான். ஆனால் யோக விதைகளை விதைக்காமல் பயிர் எப்படி வரும்?
பகவானே, என் உடலில் அஷ்டாங்க தர்மங்கள் உள்ளன. பூமியை உழும்போது என் உடல் நசிந்து பூமியில் கலந்துவிடும். அப்போது அந்த தர்மங்கள் முளைக்கும்.


15
அதற்கு வெகு காலம் பிடிக்கும். மாறாக, உன் அங்கங்களையே விதையாகக் கொடு. உனக்காக நான் இந்த நிலத்தை உழுகிறேன்.
தான் சொன்னபடி குரு, தன் அங்கங்களை வெட்டி வழங்கினார்.

16




மக்களுக்காக மன்னன் குரு செய்த தியாகத்தை மெச்சி மகாவிஷ்ணு அவனை ஆசீர்வதித்தார்.

17 உடனே, குரு வெட்டுண்ட கை கால்களைத் திரும்பப் பெற்றான்.



18




19 மகத்தான காரியத்தைச் சாதித்த குரு அரசன் சுவர்க்கம் சென்றடைந்தான்.



குருக்ஷேத்திரம் இப்படியான ஒரு தர்ம பூமி என்பதால்தான் கௌரவர்களும் பாண்டவர்களும் இங்கே தர்மயுத்தம் செய்தனர்.



ஸ்மிருதிகளில் தனிப்பட்டவர்களின் பல விவரங்கள் உள்ளன.

அவற்றைப் படிக்கும்போது பிரமிக்க வைக்கின்ற, மகோன்னதமான, மனதில் பதிகின்ற, உலகையே அசைக்கவல்ல மனிதர்கள் நம் கண்முன் அப்படியே நிற்பது போலுள்ளது.

சில இடங்களில் அவர்களது உபதேசங் களைவிட அவர்களே நம் மனதில் விசுவரூபம் எடுத்து நிற்கின்றனர்...

- சுவாமி விவேகானந்தர்

# ஜீவஜோதி சித்தர் சங்கு சுவாமிகள்



மூலம் : திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் மற்றும் 'மனம் போல் வாழ்வு' - சங்கு சுவாமிகளின் சகாப்தம்

1 திருநெல்வேலி மாவட்டம் பசுவந்தனை கிராமத்தில் விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்த சங்கு என்று அழைக்கப்பட்ட சங்கரலிங்கம் என்ற இளைஞர் வாழ்ந்து வந்தார். பலர் அவரைப் பித்தர் என்று கருதினர்.




2 யார் என்ன வேலையிட்டாலும் சங்கு அன்புடன் செய்வார். மற்ற நேரங்களில் உலகத்தை மறந்து, சிவஞானத்தில் ஆழ்ந்து இருப்பார். சில சமயங்களில் காரணமில்லாமல் சிரிப்பார்.




3 ஒரு நாள் மாலை நேரம். தன் தந்தை அழைத்ததால் சங்கு, அவருடன் வயலுக்குச் சென்றார்.



4 சிவநாமத்தை ஜபித்தபடி சங்கு ஏற்றம் இறைக்கத் தொடங்கினார். அப்போது அடுத்த வயல்காரன்....,




5 காலையில் தந்தை பார்த்து அதிர்ச்சியடைந்தார். கோபத்தில் சங்குவை ஓங்கி அடித்தார்.




6 சங்கு, தந்தையின் கை வலிக்கப் போகிறதே என்று கூறியவுடன் தந்தை தன் தோளில் தேள் கொட்டிய மாதிரி உணர்ந்து துடித்தார்.






7 சங்கு அப்படிச் சொன்னதும் வலி நின்றுவிட்டது. சங்குவின் தெய்வத்தன்மையை அறியாத அவரது தந்தை, 'இவன் நச்சுப்பல்லன்; கூறுவது பலிக்கிறது. இவனிடம் இனி தலையிடுவது ஆபத்து' என நினைத்தார்.

8 சங்கு சொல்வது பலிக்கிறது என்ற செய்தி கிராமத்தில் பரவியது. அதுமுதல் அவரிடம் யாரும் வேலை தருவதில்லை. சங்கு தன்னிச்சைப்படி, இடிந்த மண்டபம் ஒன்றில் கண்மூடி கடவுளை தியானித்து சமாதியில் இருந்தார்.




9 ஆண்டுகள் சில கடந்தன. சிங்கம்பட்டி ஜமீன்தாருக்கு 'மகோதரம்' என்ற வயிறுவீங்கி நோய் வந்து எந்த மருந்தாலும் குணமாகவில்லை.




10 ஜமீன்தார் சிதம்பரம் நடராஜர் சந்நிதியில் 48 நாட்கள் அபிஷேக தீர்த்தம் மற்றும் பாலும் பழமும் மட்டும் ஒரு வேளை உண்டு கடும் விரதமிருந்தார்.

11 48 -ஆம் நாள் இரவு. ஜமீன்தாரின் நோய் தீரவில்லை.




12 அப்படி கூறி மூர்ச்சையடைந்து விழுந்தார் ஜமீன்தார். அப்போது கனவில் நடராஜப் பெருமான் தோன்றினார்.




ஜமீன்தார் அகங்குளிர்ந்தார். காலையில் ஆனந்தமாக சிவங்கைக் குளத்தில் மூழ்கிப் பொன்னம்பல நாதரைத் தொழுது, புறப்பட்டார்.

13 ஜமீன்தார் பசுவந்தனை கிராமத்தை அடைந்தார்.



14 மக்கள் சங்கு சுவாமிகள் இருக்கும் பாழ் மண்டபத்தைக் காட்டினர்.




நடராஜப்பெருமான் உன்னை அனுப்பினாரா? அவரால் உன் நோயைத் தீர்க்க முடிந்தாலும் என்பால் உன்னை ஏவினாரோ? நடன சிகாமணி நாடகமும் ஆடுகிறாரோ? மிகவும் அழகு! இந்தா, இப்பழத்தைச் சாப்பிடு!

15 பழத்தை உண்டதும் ஜமீன்தாரின் நோய் நீங்கியது. ஜமீன்தார் சங்கு சுவாமிகளை வலம் வந்து புகழ்ந்து போற்றினார்.




ஜமீன்தார் சங்கு சுவாமிகளைப் பல்லக்கில் ஏற்றி ஊருக்குள் வந்தார்.

16



ஓரறிவுத் தாவரம் முதல் ஆறறிவு மானிடர் வரை அனைத்தும் இறைவன் படைப்பே! எதற்கும் ஊறு விளைவிக்காது வாழ்ந்து பயன் பெறுங்கள். சுற்றத்தாரும், உற்ற பொருளும் உடன் வராது. மகிழ்ச்சியுடன் நீங்கள் செய்யும் நல்லறமே குருவருளுடனும், திருவருளுடனும் வந்து உங்களைக் காக்கும்.

தங்கள் பெருமை தெரியாமல் தங்களை மனம் போன போக்கில் வசை பாடிவிட்டோம். பொறுத்தருள வேண்டும், குருவே!



பிறகு சங்கு சுவாமிகள் பல காலம் வரையிலும் பக்தர்களின் நோய்களையும், இடர்களையும் நீக்கி வந்தார். பல சித்துகளையும் செய்தார். 100 வருடத்திற்கும் மேல் வாழ்ந்த சுவாமிகள் தன் இறுதிக் காலத்தை முன்னரே அறிவித்துத் தமக்கு ஜீவஜோதிக் கருவறை அமைக்க உத்தரவிட்டார்.

பொன்னையும் பித்தளையையும் உரைகல்லில் தேய்த்தால் இது பொன், இது பித்தளை என்பதைத் தெரிந்து கொள்ளலாம். அதுபோல, வாஸ்தவமான சாதுவையும் கபட சாதுவையும் இம்சை, அவதூறு ஆகிய உரைகல்லினால் கண்டுபிடித்து விடலாம்.

- பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்



# ரகுவம்சம்



1 திலீப சக்கரவர்த்தி தமது ஆற்றல் மற்றும் கடமையால் அயோத்தி மக்களைத் தந்தைபோல் காத்துவந்தார். அவரது மனைவி சுதக்ஷிணையும் தர்மசிந்தனை கொண்டவள். அவர்களுக்கு வாரிசு இல்லாததால் திலீபன் குலதெய்வமான சூரிய பகவானை வழிபட்டார்.

2



3 பிறகு திலீப சக்கரவர்த்தி குலகுரு வசிஷ்டரை அவரது ஆசிரமத்திற்குச் சென்று வணங்கினார்.



திலீபன் : மகரிஷியே, எங்கள் குலம் விளங்க எங்களுக்குப் புத்திரபாக்கியம் ஏற்பட அருளுங்கள்.

வசிஷ்டர் : அரசே! ஒரு முறை காமதேனுவை வணங்காமல் சென்றுவிட்ட குற்றத்தால் உனக்கு இந்நிலை ஏற்பட்டுள்ளது. அதற்குப் பரிகாரமாக நமது ஆசிரமத்திலுள்ள அவளது பெண் நந்தினியை பூஜித்து வா. சந்ததி உண்டாகும்.

4 அரசரும் ராணியும் நந்தினி பசுவுக்குச் சேவை செய்தனர். காலையில் பசுவை நீராட்டுவது முதல் மேய்ச்சலுக்கு அழைத்துச் செல்வதுவரை அனைத்தும் செய்தனர்.

இவ்வாறு 21 நாட்கள் கடந்தன.



5



ஒரு நாள் நந்தினி இமயமலைச் சாரலில் மேயச் சென்றது. திடீரென்று திலீபன் நந்தினியின் கதறல் கேட்டு திடுக்கிட்டார். நந்தினி ஒரு சிங்கத்தின் பிடியில் சிக்கியிருப்பதைக் கண்ட திலீபன் அம்பை எடுத்துத் தாக்க முயன்றார். ஆனால், அவரது கைகள் அம்பறாத் தூணியிலேயே ஒட்டிக் கொண்டுவிட்டன.



சிங்கம் : மன்னா! நான் பார்வதி தேவியின் வாகனம். இன்று இப்பசுவே என் உணவு!
திலீபன் : சிங்கமே! இப்பசுவை விட்டுவிட்டு என்னை உண்டுகொள்!
சிங்கம் : இந்தப் பசுவுக்காக ஏன் உன் உயிரைத் தியாகம் செய்கிறாய்?
திலீபன் : பசுவைப் பராமரித்தல், ஆபத்தில் உள்ளவரைக் காத்தல் என் தர்மம்.

திலீபன் தன் ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டு சிங்கத்தின் முன்பு தன் உயிரையே தரத் தயாரானதும் சிங்கம் மறைந்தது.

நந்தினி: மன்னா! உன் தியாகத்தைக் கண்டு மெய்சிலிர்க்கிறேன். உன் பக்தியைச் சோதிக்க இக்காட்சியை நானே ஏற்படுத்தினேன். நீ என் பாலை அருந்து. உனக்கு ஒரு மகன் பிறப்பான்.

7 வசிஷ்டரின் ஆசியுடன் திலீபன் நந்தினியின் பாலைப் பருகினார். மன்னர் நகருக்குத் திரும்பிய சில மாதங்களில் ஒரு மகன் பிறந்தான். அவனுக்கு 'ரகு' என்று பெயர் சூட்டினார்.



8 திலீப சக்கரவர்த்தி பல அஸ்வமேத யாகங்கள் செய்தார். நூறாவது யாகம் புரிந்தபோது யாகக் குதிரையுடன் இளவரசர் ரகு திக் விஜயம் செய்தார்.
அப்போது குதிரையை இந்திரன் கவர்ந்து சென்றதை நந்தினியின் மூலம் ரகு அறிந்தார். யாகக் குதிரையை விட்டுவிடக் கேட்டு மறுத்ததால், இந்திரனின் தேர்க்கொடியைத் தன் பாணத்தால் அறுத்துவிட்டார் ரகு. பதிலுக்கு இந்திரன் வஜ்ராயுதத்தால் தாக்கியபோதும் ரகு மீண்டும் எழுந்து நின்றார்.



இந்திரன்: ரகுவே! எனது வஜ்ராயுதத்தின் வலிமையைத் தாங்கிக் கொள்ளும் உன் வலிமை அபாரம். இந்தக் குதிரையைத் தவிர வேறு எதையும் கேள், தருகிறேன்!
ரகு: தேவதேவா! என் தந்தை இந்த நூறாவது யாகத்தையும் செய்தால் கிடைக்கும் முழுப் பலனையும் அவர் பெற்றிட அருளுங்கள்!
அதன்படி, இந்திரன் யாகக் குதிரையை விட்டுச் சென்றார்.

9



திலீபன் ரகுவிடம் ராஜ்யத்தை ஒப்புவித்து தவ வாழ்க்கை மேற்கொண்டு கானகம் சென்றார். ரகு மன்னர் பல நாடுகளை வென்று மிகப் பெரும் செல்வம் திரட்டினார். பிறகு 'விஸ்வஜித்' என்ற யாகம் செய்தார். அதன் முடிவில் தமது செல்வங்கள் அனைத்தையும் மக்களுக்குத் தானம் செய்தார். அப்போது கௌத்ஸன் என்ற பிரம்மசாரி தானம் வேண்டி யாகசாலைக்கு வந்தார்.

10



கௌத்ஸன்: மன்னா, வரதந்து முனிவரின் சீடன் நான். என் சேவையே குருதட்சிணையாகப் போதும் என்றார் என் குரு. ஆனால் நான் அவருக்குப் பெரும் செல்வத்தைக் காணிக்கையாகத் தர விரும்பினேன். அதனால் அவர் 14 ஆயிரம் கோடி தங்க நாணயங்களைக் கேட்டார். அதைப் பெறவே தங்களை நாடி வந்தேன். ஆனால் நீங்கள் ஏற்கனவே எல்லாவற்றையும் எல்லோருக்கும் வழங்கிவிட்டீர்களே...!

ரகு: பிராமணரே, நீங்கள் வெறும் கையோடு திரும்ப வேண்டாம். சில நாட்கள் காத்திருங்கள். ஆவன செய்கிறேன்.

11

ரகு மன்னர் தன்னிடம் உதவி நாடி வந்தவர் மனம் குளிர்வது பற்றிப் பலவாறு சிந்தித்தார். முடிவில்...



ரகு: அமைச்சரே! நாளை குபேரனின் அழகாபுரி நகரை முற்றுகையிட்டு வேண்டிய செல்வத்தைப் பெறலாம். அதற்கு ஆவன செய்யுங்கள்.

ஆனால், மறுநாள் போருக்குப் புறப்படும்முன் நிதியமைச்சர் மன்னரிடம் ஓடி வந்து அன்று காலை அரண்மனையின் பொக்கிஷ அறையில் தங்கமழை பொழிந்த விபரத்தைச் சொன்னார்.

12 ரகு மன்னர் : கௌத்ஸரே! இறைவன் வழங்கிய இந்த நிதி முழுவதையும் தங்கள் குருவிற்கே காணிக்கையாக்குங்கள்.

கௌத்ஸன்: மன்னா! என்னே உங்கள் பெருந்தன்மை! என் குருதக்ஷிணைக்குத் தேவையான 14 ஆயிரம் கோடி தங்கக் காசுகளுக்கு மேல் எதுவும் எனக்கு வேண்டாம்.



இப்படிப்பட்ட ரகு மன்னனின் பெயரையே அவரது வம்சம் தாங்கியுள்ளது.



13 ரகுவின் மகன் அஜனும் மிகச் சிறந்தவர். ஒரு முறை அஜன் சரயு நதியில் பகல் சந்தியாவந்தனம் செய்து கொண்டிருந்தார். அவருடன் போரிட நினைத்த ராவணன் ஒரு பிராமணர் உருவில் வந்தான். அஜன் திடீரென மந்திரத்தை ஓதி மேற்குத் திசையில் நீரை வீசினார்.

ராவணன் : அரசே, பகல் சந்தியாவில் மேற்கில் நீரை வீசுவது முறையா?

அஜன் : சுவாமி! இங்கிருந்து 7 மைல் மேற்கில் ஒரு புலி பசுவைத் தாக்கியது. அதன் துயரக்குரல் கேட்டு நான் மந்திரப் பிரயோகத்தால் நீரை வீசிப் பசுவைக் காத்தேன்.

14 திரும்பும் வழியில் ராவணன் அம்புகளால் துளைக்கப்பட்ட நிலையில் இறந்து கிடந்த புலியையும் மேய்ந்து கொண்டிருந்த பசுவையும் கண்டான்.



அஜ மன்னர் மகாதீரர். தன் நாட்டின் மீது எப்போதும் கவனமாக உள்ளார். நீரையே அம்புகளாக ஏவும் ஆற்றல்மிக்க இவரைப் பகைப்பது மூடத்தனம்.

15 அஜ மகாராஜனின் புதல்வர் தசரதர். அயோத்தியில் ஒருமுறை மழையின்றிப் பயிர்கள் வாடின. தசரதர் கவலையுடன் வசிஷ்டரிடம் சென்றார்.



வசிஷ்டர் : மன்னா! சனி பகவானின் பார்வை உன் அரசின் மீதுள்ளதால் இந்த நிலைமை.

தசரதர் : அப்படியா! சனி பகவானுடன் போரிட்டு என் தேசத்தை மீட்கிறேன். ஆசி அருளுங்கள் குருவே!

16 வசிஷ்டர் தசரதருக்கு ஆசி கூறினார். நாட்டின் நலனுக்காக ஹோமங்கள் பல செய்தார். தசரதர் தன் சங்கல்ப பலத்தால் அஸ்திர சஸ்திரங்களோடு சனிக்கிரகம் சென்றார்.



17



தசரதர் : சனிபகவானே! எங்கள் ராஜ்யத்தில் உங்கள் பாதிப்புகளைப் போக்குங்கள்; நீங்கள் எங்களுக்கு அருளாவிட்டால் உங்கள் மண்டலத்தையே சிதைக்க வேண்டி வரும்.

சனி பகவான் : தசரதா! இறைவனின் விதிகளை மாற்றுவதற்கில்லை. இருந்தாலும் உன் பராக்கிரமத்தை நான் அறிவேன். சரி, உன் பேரனின் ஆட்சிக்காலம் வரை என்னால் உன் நாட்டிற்கு எந்தப் பாதிப்பும் இருக்காது. உன் குலத்தில் ஸ்ரீமந் நாராயணனே அவதரிப்பார்.

18 தசரதர் சனி பகவானை வணங்கி பூமிக்குத் திரும்பினார். சனி பகவானின் பார்வையால் தேர்க் குதிரை, கொடி ஆகியவை எரிந்து போயின. தசரதர் மட்டும் வசிஷ்டரின் ஆசியால் உயிர் பிழைத்தார்.

மயக்கமடைந்து மேலுலகத்திலிருந்து கீழே விழுந்து கொண்டிருந்த தசரதரை, அங்கு வந்த ஜடாயு என்ற பறவை தன் முதுகில் சுமந்து காப்பாற்றியது.

தசரதர் : பறவை நண்பரே, மிக்க நன்றி.

ஜடாயு : மாமன்னரே! தாங்கள் என்னை நண்பனாக ஏற்றது என் பாக்கியம்.



19 ஜடாயு தசரதரை பிரயாகைக்குக் கொண்டு சென்றார். அங்கிருந்து அயோத்திக்குத் திரும்பினார் தசரதர்.



20 தமது மக்களுக்காகத் தன் உயிரையே பணயம் வைத்து சனி பகவானிடமே வரம் பெற்றுத் திரும்பிய தசரதரை தேவர்களும் மலர் தூவி ஆசீர்வதித்தனர்.

ஸ்ரீமந் நாராயணனே அந்த வம்சத்தில் வந்து உதித்தார், ஸ்ரீராமராக!

படங்கள் உதவி : ஸ்ரீசாரதா ஆசிரமம், உளுந்தூர்ப்பேட்டை.
இங்கு 2012, அக்டோபரில் வைக்கப்பட்டிருந்த அரிய நவராத்திரி கொலு கண்காட்சியில் இடம் பெற்ற இந்தப் பொம்மைகள் காகிதக் கூழால் செய்யப்பட்டவை. மிகுந்த சிரத்தையுடன் வடிவமைக்கப்பட்ட இந்தக் கண்காட்சியை ஏறக்குறைய 1 லட்சம் பேர் கண்டு களித்தார்கள்.



# தபஸ்வினி மாதாஜி கங்காபாய்

1

வீர சிவாஜியின் பரம்பரையில் வந்த அரசர் நாராயணராவ் ஆற்காட்டை ஆண்டு வந்தார். அவர், மனைவியுடன் கங்காதேவியைக் குறித்து விரதமிருந்து பெற்ற பெண் கங்காபாய்.




2

கங்காபாய் ஒரு பிறவி மேதை. 7 வயதில் சம்ஸ்கிருதத்தில் கவிபாடும் புலமையும், 12 வயதில் குதிரையேற்றம் வாட்பயிற்சி, ஈட்டி எறிதல் போன்ற வீர விளையாட்டுகளிலும் சிறந்து விளங்கினார்.





இவ்வளவு திறமைகள் இருந்தும் கங்காபாய் தனது ஆன்மிகத் தேடலுக்காக அரண்மனையைத் துறந்தார். தாமிரபரணியின் கரையில் மரவுரி தரித்து 41 நாட்கள் பஞ்சாக்னி தவம் இயற்றினார். தந்தை நாராயணராவ் மகளை வேலூருக்கு அழைத்து வந்த சில நாட்களில் அவர் காலமானார்.

3




ஆட்சியில் இளவரசி கங்காபாய் தன் தம்பியைப் பயிற்றுவித்து வந்தார். ஆட்சியில் பொறுப்பேற்ற கங்காபாயை ஆங்கிலேய அரசு சந்தேகப்பட்டு திருச்சி சிறையில் அடைத்தது.



4

திருச்சி சிறையிலிருந்து விடுதலையாகி ஆன்மிக வேட்கையால் நைமிசாரண்யம் சென்று தவமியற்றினார் கங்காபாய். ஒரு நாள் அங்குள்ள கௌரி சங்கர் ஆலயத்திற்குச் சென்றார். பண்டா அவரை உள்ளே அனுமதிக்கவில்லை.



5




6 கங்காபாயின் நீண்டகாலத் தோழியான ஆங்கிலேய யுவதி பியூட்டி ராஜ்புதானா கமிஷனர் தாம்ஸனை மணந்தவர். அவர்களின் உதவியால் 15 நாட்களில் கௌரிசங்கருக்குக் கோயில் எழுப்பினார் கங்காபாய்.




7 பிறகு கங்காபாய் விந்திய மலைப்பிரதேசத்தின் அடிவாரத்தில் இருந்த காளி கோயிலை அடைந்தார். இதனிடையே ஆங்கிலேயர்களின் நாடு பிடிக்கும் பேராசையால் பல கேடுகள் விளைந்தன.




8 யாரது? உங்களுக்கு இங்கு என்ன வேலை?




கங்காபாயின் தேஜஸையும் கம்பீரத்தையும் கண்ட போலீசார் தம்மையும் அறியாமல் பணிந்து சென்றனர்.

9 1854-இல் கிழக்கிந்திய கம்பெனி ஜான்சி ராணியின் சுவீகார மகனை அங்கீ கரிக்கவில்லை. அதனால் ஜான்சியைத் தனது பகுதிகளோடு இணைத்துக் கொண்டு ஆண்டுக்கு ரூ.6000 உபகாரநிதி வழங்கப்படும் என ஆணை பிறப்பித்தது!



**10** உடனே ஜான்சிராணி தனது ஆத்மார்த்த தோழியான கங்காபாய்க்குக் கடிதம் எழுதி, போரில் தனக்கு மெய்க்காப்பாளராக இருக்க வேண்டும் என்று அவசரமாக வரச் சொன்னார்.



**11** 1857-ஆம் ஆண்டு ஆங்கிலேயர்களை எதிர்த்து முதல் இந்திய சுதந்திரப் போர் துவங்கியது. குவாலியரில் ஆங்கிலேயருடனான ஜான்சிராணியின் இறுதிப் போர் நடைபெற்றது. போரில் ராணி காயமுற்று வீழ்ந்துவிட்டார்!




**12** போர்க்களத்தை விட்டுச் சென்றதும் ராணி இறந்துவிட்டார். கங்காபாயும் பலவந்த்சிங்கும் அவரை ரகசியமாகத் தகனம் செய்தனர்.



**13** பிறகு 1858 - முதல் 1890 வரை கங்காபாய் தாம் சென்ற இடத்திலெல்லாம் தெய்விகத்தையும் தேசப் பற்றையும் விதைத்தார். வாராணசியில் சாதக் தாராநாத் என்ற துறவியைச் சந்தித்தார்.



**14**




**15** கங்காபாய் ராஜ பரம்பரையைச் சேர்ந்தவர் என்பதால் அரச மரியாதை கிடைத்தது. ஆன்ம பலம் கொண்டவராதலால் சாதாரண மக்களின் ஏற்பும் அவருக்கு ஒரு சேரக் கிடைத்தன.



**16** பிறகு கொல்கத்தா வந்தார் கங்காபாய்.




கங்காபாய், 1893, ஏப்ரல் 19 அன்று காசிம்பஜார் மகாராணி ஸ்வர்ணமயியின் பங்களாவில் 30 பெண்களுடன் கொல்கத்தா அப்பர் சர்க்குலர் சாலையில் 'மஹாகாளி பாடசாலை'யைத் தொடங்கினார்.

**17** சுவாமி விவேகானந்தர் மேலை நாட்டிலிருந்து 1897-இல் தாயகம் திரும்பியிருந்தார். பெண்களுக்கு நமது சமயத்தைப் போதித்திடும் பள்ளிகள் தேவை என்பதை வலியுறுத்தி வந்தார். கங்காபாய் சுவாமிஜியை அவரது பள்ளிக்கு அழைத்தார்.




அதனால் மிகவும் மகிழ்வுற்ற சுவாமிஜி 'இந்த இயக்கம் சரியான திசையில் சென்று கொண்டிருக்கிறது' என்று பதிவேட்டில் எழுதிக் கையெழுத்திட்டார்.


18 திரும்பும் போது குதிரை வண்டியில்..... தமது சீடரிடம்
மாதாஜி அனைத்தையும் துறந்து விட்டு நமது பெண்களுக்கு அறிவு ஒளி தந்து, உலகிற்கே லட்சியப் பெண்களாகத் திகழச் செய்யும் இப்பெரும் பணியில் ஈடுபட்டுள்ளது மனதிற்கு நிறைவைத் தருகிறது.
ஆம் சுவாமிஜி! மாதாஜியைப் பார்த்தது கடந்த காலத்தில் நம் நாட்டில் கல்வியில் சிறந்த கார்க்கி, கனா, லீலாவதி போன்றவர்களைப் பார்த்ததுபோல் இருந்தது.


19 சில மாதங்களுக்குப் பின்..,
சுவாமிஜி, மாதாஜி நிதிப் பற்றாக்குறையால் பள்ளியையே மூடப்போவதாக அறிகிறேன்.
அப்படியா! நிதியுதவிக்கு நான் ஏற்பாடு செய்கிறேன் என்று அவர்களுக்குச் செய்தி அனுப்பு.
சுவாமிஜியின் அருட்கட்டளைப்படி அவரது சிஷ்யையான ஹென்ரிட்டா முல்லர் கங்காபாய்க்குப் பெரும் நிதி வழங்கினார். பிறகு ஏராளமான நன்கொடைகள் குவிந்து மகாகாளி பாடசாலை தடையின்றித் தொடர்ந்தது. பல கிளைகளும் நிறுவப்பட்டன.


20 மாதாஜி கங்காபாய் தனிச்சிறப்பு வாய்ந்தவர் மட்டுமல்ல, அன்புத் தாயும்கூட. தாரா என்னும் குழந்தையின் தந்தை ஓர் ஏழை. மனைவியை இழந்தவர்.
மாதாஜி, இவள் என் மகள். இவளது தாய் காலமாகிவிட்டாள். நீங்களே இனி இவளுக்குக் கதி.
தாரா ! இனி நானே உனக்குத் தாய். என்னுடனேயே இருந்து விடம்மா.


21 பள்ளியின் மாணவிகள் சரசுவதி பூஜையை வெகு சிறப்பாகக் கொண்டாடுவார்கள்.


22 பரிசளிப்பு விழா கங்காபாய் மாதாஜியின் மனதிற்குகந்த நிகழ்ச்சி. ஒருமுறை இந்த நிகழ்ச்சிக்கு சகோதரி நிவேதிதை அழைக்கப்பட்டிருந்தார்.
சாட்சாத் லோகமாதாவே இந்தப் பெண்கள் வடிவில் வந்துள்ளாள்.
இந்து மதத்திற்குச் சோதனை நேரும்போது அதைக் காக்க மட்டுமல்ல, நமது பெண்களுக்கு, எதிர்காலத் தேசத் தலைவர்களின் தாய்மார்களுக்கு, தேசப் பற்றை ஊட்டுவதிலும் ஒரு வஜ்ராயுதமாகவே நமது கங்காமாதா செயல்பட்டு வருகிறார்.


23 இவ்வளவு மகத்தான தியாக வாழ்வை வாழ்ந்த கங்காபாய் 1907-ஆம் வருடம் மகாசமாதி அடைந்தார். அவர் உடல் துறவிகளுக்குரிய மரியாதையுடன் பேழையில் இடப்பட்டு மணிகர்ணிகா கட்டத்தில் கங்கையில் ஜலசமாதி செய்யப்பட்டது.


'தபஸ்வினி கங்காபாய் சுதந்திர வீரர்களின் தலைவி. அவர் அருளால் வங்காள சுதந்திர இயக்கம் விரைவில் தொடங்கும்' என்றது ஸ்வராஜ் சஞ்சிகை.
'ராஜ குடும்பத்தில் பிறந்த மேதை, தபஸ்வினி கங்காபாய், தன் சொத்துக்களை நாட்டின் வளர்ச்சிக்கு அர்ப்பணித்தவர்' என்று ப்ரபாஸி இதழ் புகழ்ந்து எழுதியது.



# யார் இறங்க வேண்டும்?

கதை: மகாபாரதம்

**1** யயாதி மன்னனின் பேரன்கள் அஷ்டகன், பிரதர்த்தனன், வசுமனஸ், சிபி ஆகியோர். அவர்களின் ஆட்சித் திறத்தாலும் செய்த செயல்களின் புண்ணியத்தாலும் ஒரு தேவ விமானம் கிடைத்தது. விமானத்தில் அவர்கள் ஏறும்போது அங்கே நாரதர் வந்தார்.

நாரதரே வாருங்கள்! தாங்களும் இதில் ஏறி எங்களைக் கௌரவப்படுத்துங்கள்.

நாராயணா... நாராயணா.. அப்படியே ஆகட்டும்!

**2** ஐவரும் தேவலோகம், பிரம்மலோகம் போன்ற இடங்களில் சஞ்சரித்தார்கள்.

முனிசிரேஷ்டரே, இந்த விமானத்தில் நால்வர் மட்டும் செல்லக் கூடியதாக இருந்தால், நம்மில் யார் இறங்க வேண்டும்?

அஷ்டகன் இறங்க வேண்டும். ஏனெனில்....

**3** இந்த மாடுகள் எல்லாம் யாருடையவை அஷ்டகா?

வேறு யாருடையதாக இருக்க முடியும் நாரதரே? இவை எல்லாம் என்னால் தானம் செய்யப்பட்டவை.


4
அஷ்டகன் தன்னைத்தானே புகழ்ந்து கொண்டான். அப்படிப்பட்ட தற்பெருமை கொண்ட கொடையாளிதான் முதலில் கீழே இறங்க வேண்டும்.
குருநாதா, இந்த விமானத்தில் மூவர் மட்டும் செல்வதாக இருந்தால் யார் இறங்க வேண்டும்?
பிரதர்த்தனன் இறங்க வேண்டும். ஒரு சமயம் அவனும் நானும் ஒரே தேரில் சென்று கொண்டிருந்தோம். அப்போது அந்தணர் இருவர் பிரதர்த்தனனிடம் யாகம் செய்வதற்காகக் குதிரைகளை யாசகம் கேட்டு வந்தனர்.


5
பிரதர்த்தனா, நீ இப்போதே எனக்கு ஒரு குதிரையைத் தர வேண்டும்.
அந்தணரே, தயவுசெய்து அரண்மனைக்கு வாருங்கள். உங்களுக்கு எவ்வளவு குதிரைகள் வேண்டுமானாலும் தருகிறேன்.
இல்லை, எனக்கு இப்போதே வேண்டும்.


6
எனக்கும் ஒரு குதிரையை இப்போதே கொடுத்துவிடு, பிரதர்த்தனா!
ஆளுக்கொரு குதிரையுடன் இரண்டு அந்தணர்களும் சென்றார்கள்.


7
பார்த்தீர்களா நாரதரே, பொறுமை இல்லாத இந்த வேதியர்களுக்குத் தானம் வாங்க நேரம் காலம் தெரிவதில்லை. என்ன மனிதர்கள் இவர்கள்?


8
பிரதர்த்தனன் தானம் கொடுத்துவிட்டு சலித்துக் கொண்டான். ஆகவே மூவர் செல்ல வேண்டும் என்றால் இவன்தான் இறங்க வேண்டும்.
ஐயனே, ரதத்தில் இருவர் மட்டும் செல்வது என்றால்....?
வசுமனஸ் இறங்க வேண்டும். இவன் என்னைப் பார்க்கும்போதெல்லாம் தனது புஷ்ப ரதத்தைக் காட்டி, 'நாரதரே, இது தங்களுடையது' என்பான். ஆனால் எனக்குத் தேர் தேவைப்படும் நேரத்திற்குத் தர மாட்டான்.


9
நாரதரே, ரதத்தில் ஒருவர் மட்டும் இருக்க வேண்டுமென்றால்...?
நான் இறங்க வேண்டும். ஆம், உங்கள் சகோதரன் சிபி இருக்கிறானே, அவன் என்னைவிடச் சிறந்தவன். கேளுங்கள், ஒரு சமயம் அவனைத் தேடி ஒரு வேதியர் வந்தார்.


10
வேதியரே, இன்று தாங்கள் என் இல்லத்தில் உணவருந்த வேண்டும்.
நான் உணவருந்த வேண்டுமென்றால், நீ உன் மகன் பிருஹத்கர்ப்பனைச் சமைத்துத் தர வேண்டும்.
தங்கள் விருப்பம்போல் இன்றிரவே செய்கிறேன் ஐயனே!


11
சமைத்து உணவு கொண்டு வா என்றாரே, எங்கே சென்றார் வேதியர்?
அப்போது திடீரென சிபியின் அரண்மனையிலும் கருவூலத்திலும் வேதியர் தீ வைப்பதை சிபி பார்த்தார். காவலர்கள் வேதியரைத் துரத்தி வந்தார்கள்.

12




அதற்குள் காவலர்கள் தீயை அணைத்து விட்டார்கள்.

13




14

சிபி ஒரு கணம் மலைத்து நின்றார். பிறகு வேதியரின் கட்டளை என்பதால் கண்களில் கண்ணீருடன் அதைச் சாப்பிட முயன்றார்.




15

உடனே வேதியர் மறைந்தார். அங்கே வேதியராக வந்த சிவபெருமான் சிபிக்கு மட்டும் காட்சி தந்தார். இளவரசர் உயிர்த்தெழுந்ததைக் கண்டு எல்லோரும் மன்னரை வாழ்த்தினார்கள்.




16



